# பொன் மொழி வாசகம்

ஆறாம் வகுப்பு




ஆசிரியர்கள் :

வித்துவான் D. சண்முகவேல்
தலைமைத் தமிழாசிரியர்
கழக உயர்நிலைப்பள்ளி, களக்காடு.

வித்துவான் A. ஞானமணி
தலைமைத் தமிழாசிரியர்
ஸ்காட்டு கிறிஸ்துவ உயர்நிலைப்பள்ளி,
நாகர்கோவில்.



சித்திரா பப்ளிஷிங் ஹௌஸ்

ஸ்ரீவைகுண்டம்

காபிரைட்டு] 1963 [விலை ரூ. 1-75

(Approved by the Madras Text-Book Committee
Vide Page 8, Fort St. George Gazette
Supplement Part II Dated, 10—5—61).

[Paper used : 24 lbs. White Printing]



Printed at the Hilal Press, Tirunelveli-6,—5-1963. C. 4,000.

# முகவுரை

'பொன்மொழி வாசகம்' என்னும் பெயர் தாங்கி வெளிவரும் இந்நூல், 1957-ஆம் ஆண்டு சென்னைக் கல்வி இலாகா அதிகாரியவர்களால் வெளியிடப்பெற்ற பாடத்திட்டத்தை முற்றிலும் தழுவி இயற்றப் பெற்றுள்ளது.

பாடத்திட்டத்திற் குறிக்கப்பட்ட அளவுகளை யொட்டி இதன்கண் உரைநடைப் பாடங்களும், செய்யுட் பாடங்களும் வரையறை செய்யப்பட்டுள்ளன. மொழிப் பயிற்சி, இலக்கணப் பயிற்சி, கட்டுரைப் பயிற்சி முதலியன மாணவ மாணவியரின் மனத்திட்பத் திற்கேற்பக் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை ஆதார மாகக் கொண்டு மேலும் பல பயிற்சிகள் அளிக்க வேண்டுமென்பது ஆசிரியர்களுக்கு எமது வேண்டுகோள்.

ஆசிரியர்கள்.

# பொருளடக்கம்

# நாட்டு வணக்கம்

ஜன கன மன அதி நாயக ஜயஹே!
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தப சுப ஆசிஷ மாகே
காஹே தவ ஜய காதா!
ஜன கன மங்கள தாயக ஜயஹே!
பாரத பாக்ய விதாதா
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

## பொருள்

மக்களின் உள்ளத்தில் உறையும் பாரதத்தின் பெரும் பேற்றிற்கு முதல்வனுய் உள்ள ஆதி இறைவனே, வெற்றி உண்டாகட்டும்! பஞ்சாபு, சிந்து, குஜராத்தி, மராத்தி, திராவிடம், உத்கலம் (ஒரிஸா), வங்காளம், விந்தியம் முதலிய நாடுகளையும், ,இமயமலையையும், யமுனை, கங்கை, முதலிய பொங்கும் அலைகளுடன் பொலிவுறும் யாறுகளையும் கொண்ட உனது மங்கலம் மிகுந்த பெயரைக் கூறி, உனது மங்கலம் மிக்க ஆசியை வேண்டுகிறோம்.

உன்னுடைய வெற்றியைப் பாடுகிறோம்! மக்களின் மங்கல நல்வாழ்வை நல்கும் இறைவனே, பாரதத்தின் ஆதி முதல்வனே, உனக்கு வெற்றியுண்டாகுக!

வெற்றி! வெற்றி! வெற்றி!

# 1. வாழ்த்து

## தேவாரம்

நீரானே நிறைபுனல் சூழ்தரு நீள்கொன்றைத்
தாரானைத் தையலோர் பாக முடையானைச்
சீரானைத் திகழ்தரு வெண்ணி யமர்ந்துறை
ஊரானை உள்கவல் லார்வினை யோயுமே. 1

—திருஞானசம்பந்தர்

## திருவாசகம்

ஆதியனே! அந்தம் நடுவாகி அல்லானே!
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே!
கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே! நுணுக்கரிய நுண்ணுணர்வே!
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்குமெங் காவலனே! காண்பரிய பேரொளியே! 2

—மாணிக்கவாசகர்

## தேம்பாவணி

அறம்தாய் தந்தை சுற்றமும்மற்(று)
அனைத்து நீயே! கதிநீயே!
பிறந்தாய்! உலகிற்(கு) உயிர்அன்னோய்!
பிறந்(து)எம் துயரும் எம்பகையும்
துறந்தாய்! எங்கள் சிறைதீர்த்தாய்!
துகள் பூட் டியவீட்(டு) உயர்வாயில்
திறந்தாய்! இவையா வரும்அறியத்
திறன்செய்(து) அருள்செய்(து) இரங்காயோ? 3

—வீரமாமுனிவர்

## திவ்வியப் பிரபந்தம்

பாயிரும் பரவை தன்னுள் பருவரை திரித்து வானோர்க்(கு)
ஆயிருந்(து) அமுதம் கொண்ட அப்பனை, எம்பிரானை,
வேயிருஞ் சோலை சூழ்ந்து விரிகதிர் இரிய நின்ற
மாயிருஞ் சோலை மேய மைந்தனை வணங்கி னேனே. 4

—திருமங்கையாழ்வார்

## சீறாப்புராணம்

சிறந்தமெய்ப் பொருளை அழிவிலா மணியைத்
தெரிந்துமுக் காலமு முணர்ந்த
துறந்தவ ரிதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்
பிறந்தபல் லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பென்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையு மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே. 5

—உமறுப்புலவர்

### 1. தேவாரம்

தே+ஆரம்=தேவாரம். 'தெய்வத்துக்குச் சாத்தப்படும் பூமாலை' எனப் பொருள்படும். தே+வாரம்=தெய்வத்தைப் பற்றிய இசை பாடல் எனவும் கூறலாம். திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் இம்மூவர்களும் பாடிய பாடல்கள் 'தேவாரம்' எனப்படும்.

திருஞானசம்பந்தர் சோழவள நாட்டில் சீர்காழிப்பதியில் அந்தணர் மரபில் பிறந்தவர். 7-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவர். இவர் இறைவன் கொடுத்த ஞானப்பாலுண்டு, இன்னிசையால் தமிழையும் சைவத்தையம் பரப்பினர்.

புனல்-கங்கை, தாரான்-மாலையான், தையல்-பார்வதி, சீரான்-சிறப்புப் பொருந்தியவன், வெண்ணி-ஒரு சிவதலம், உள்க-நினைக்க.

## 2. திருவாசகம்

திருவாசகம்: தெய்வத் தன்மை வாய்ந்த சொற்களால் ஆகிய நூல். 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத் துக்கும் உருகார்', என்பது பழமொழி.

ஆசிரியர் மாணிக்கவாசகர். இவர் திருவாதவூரில் அந்தணர் மரபில் பிறந்தவர். இவர் இயற்பெயர் திருவாதவூரர். இவர் பாண்டிய மன்னனிடம் அமைச்சராய் இருந்தவர். திருக்கோவையார் என்ற ஒப்புயர்வற்ற நூலையும் எழுதியுள்ளார். இவர் காலம், 3-ஆம் நூற்றாண்டு எனவும், 9-ஆம் நூற்றாண்டு எனவும் கூறுவர்.

ஆதியன்-முதல்வன், அந்தம்-இறுதி, கூர்த்த-மிகுதி யான, நோக்கே-காட்சி தருபவனே.

## 3. தேம்பாவணி

தேம்பாவணி கிறிஸ்துவின் தந்தையரான சூசையப்ப ரைக் கதைத் தலைவராகக் கொண்ட ஒரு கிறித்துவத் தமிழ்க் காவியம். இதன் ஆசிரியர் வீரமா முனிவர். இவர் இத்தாலி நாட்டிலுள்ள காஸ்திகிலீயோன் என்னும் ஊரில் பிறந்தவர். இவர் இயற் பெயர், 'கான்ஸ்டன்ஷியஸ் பெஸ்கி' என்பது. இவர் தம் பெயரைத் தமிழ் மரபுக்கேற்ப வீரமாமுனிவர் என மாற்றி யமைத்துக்கொண்டார்: காலம் கி. பி. 1680 முதல் 1742 வரை. சூசையப்பருக்கு மகவாய்ப் பிறந்த ஏசுநாத ரைத் துதித்துப் பாடியதாக ஆசிரியர் அமைத்துள்ள பாடல் நமக்குப் பாடமாக அமைந்துள்ளது.

அறம்-ஒழுக்கம், அன்னேய்-போன்றவனே,

### 4. திவ்வியப் பிரபந்தம்

வைணவ சமயத்தைச் சேர்ந்த பன்னிரு ஆழ்வார்களும் பாடிய பாடல்களின் தொகுதியே **திவ்வியப் பிரபந்தம்** எனப்படும். இந்நூல் 4000 பாடல்களைக் கொண்டது.

இப்பாடலை இயற்றியவர் திருமங்கையாழ்வார். இவர் திருவாலி நகரில் நீலன் என்பவருக்கு மைந்தராய்ப் பிறந்தவர்; சோழ மன்னனுக்கடங்கிய சிற்றரசராய் இருந்தவர். இவரது மனைவியின் பெயர் குமுதவல்லி. பரகாலன், நாலு கவிப்பெருமான் என்ற பெயர்களும் இவருக்கு உண்டு. காலம் 7-ஆம் நூற்றுண்டு. இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் பெரிய திருமொழி, திருக் குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், பெரிய திருமடல், சிறிய திருமடல், திருவெழு கூற்றிருக்கை என்பன.

பரவை-கடல், பருவரை-பெரிய மலை, வேய்-மூங்கில், இரிய-சிதைய, மைந்தனை-வீரனை.

### 5. சீருப் புராணம்

'சீருத்' என்பது அரபு மொழிச் சொல். இது தமிழில் 'சீரு' என வரும்; பெரியோரது புகழ் எனப் பொருள் தரும். இது முகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றை விளக்கிக் கூறுவது. இச்செய்யுள் இறைவன் இயல்பு கூறுவது.

இதன் ஆசிரியர் உமறுப்புலவர். கீழக்கரையை யடுத்த ஒரு சிற்றூரில் பிறந்தவர். இவர் தந்தையார் சேகு முதலியார். இவர் கடிகைமுத்துப் புலவரிடம் கல்வி கற்றவர். எட்டையபுரம் அவைக்களப் புலவராய் இருந்தவர். இவரை ஆதரித்தவர் அப்துல் காசிம். இவர் காலம், 17-ஆம் நூற்றுண்டாகும்.

இதயாசனம் - (இதய + ஆசனம்) உள்ளமாகிய பீடம், சொர்க்கப் பதி - மோட்ச வீடு.

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :— தையலோர் பாகமுடையான், அமர்ந்துறை, ஈந்தென்னை, கொண்டுணர்வார், நுணுக்கரிய, காக்குமெங்காவலனே, ஆருயிர், மாயிருஞ்சோலை, மெய்ப்பொருள், முக்காலம், துறந்தவரிதயாசனம், பிறப்பிறப்பென்று.

2. பொருள் எழுது :— நிறை, நிரை; உறை, உரை; சிறை, சிரை; இரங்கு, இறங்கு; பரவை, பறவை; அழி, அளி.

## வினாக்கள்

1. திருஞான சம்பந்தர் இறைவனை எவ்வாறு சிறப்பித்துப் பாடியுள்ளார் ?

2. எத்தகைய இறைவனை உள்க வினை அகலும் ?

3. மாணிக்கவாசகர் இறைவன் இயல்புகளை எவ்வாறு புகழ்ந்துள்ளார் ?

4. வீரமாமுனிவர் ஏசுபெருமானை எவ்வாறு பாராட்டிப் பாடியுள்ளார் ?

5. 'அமுதம் கொண்ட அப்பன்'—வரலாறு கூறுக.

6. திருமங்கை ஆழ்வார் தாம் வணங்கும் இறைவன் இயல்புகளை எவ்வாறு எடுத்தியம்பியுள்ளார் ?

7. உமறுப்புலவர் இறைவன் தன்மையையும் அவனை மறந்தவர் இழிவையும் எங்ஙனம் கூறியுள்ளார்?

---

# II. நீதிப் பகுதி

## 1. நீதி நெறி விளக்கம்

### கல்வியே பொருளும் புகழும் அளிப்பது

அறம்பொருள் இன்பம் வீடும் பயக்கும் ;
புறங்கடை நல்லிசையும் நாட்டும்;—உறுங்கவல் ஒன்[று]
உற்றுழியும் கைகொடுக்கும்; கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. 1

### கல்வி உயர்வே உயர்வு

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
'அம்மா பெரிதெ'ன்[று] அகம் மகிழ்க;—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக, 'கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம்!' என்று. 2

### முயற்சியால் ஊழையும் வெல்லலாம்

உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே;—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே சாலும் கரி. 3

### தெய்வம் ஆவார்

குலமகட்குத் தெய்வம் கொழுநனே; மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்;—அறவோர்க்[கு]
அடிகளே தெய்வம்; அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. 4

### முடியாதன போல முடிவன

உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப;—இறும்உயிர்க்கும்
ஆயுள் மருந்[து]ஒழுக்கல் தீ[து]அன்றால்; அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில. 5

—குமரகுருபரர்

## குறிப்புரை

நீதியான வழிகளுக்கு விளக்குப் போன்ற நூலாகையால் இதற்கு நீதி நெறி விளக்கம் என்பது பெயர். இதன் ஆசிரியர் குமர குருபரர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரிற் பிறந்தார். ஐந்தாண்டு வரையில் ஊமையாய் இருந்து, முருகன் திருவருளால் பேசும் ஆற்றல் பெற்ருர். இவர் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தார். மீனுட்சி அம்மைபிள்ளைத் தமிழ், மதுரைக் கலம்பகம், திருவாரூர் நான்மணிமாலை முதலிய நூல்களும் இவரால் இயற்றப் பெற்றவை.

1. அறம்-தருமமும், பொருள்-செல்வமும், வீடு-மோட்சமும், பயக்கும்-கொடுக்கும், புறங்கடை-வெளியிடங்களில், நல்இசை-குற்றமற்ற புகழ், உறும் கவல்-நேரக்கூடிய வருத்தம், உற்றுழியும்-நேர்ந்த பொழுதும், கைகொடுக்கும்-உதவி செய்யும், சிறு உயிர்-சிறிய உயிர்களாகிய மக்கள், உற்றதுணை-பொருந்தியதுணை, கல்வியின் ஊங்கில்லை-கல்வியைவிடச் சிறந்ததில்லை.

2. தம்மின் மெலியாரை-தம்மைவிடச் செல்வத்தில் குறைந்திருப்பவரை, தமது உடைமை-தமது பொருள், கருத்து அழிக-செருக்கும் எண்ணத்தை விட்டுவிடுக. எற்றே-எத்தன்மையது.

3. உலையா முயற்சி-அழியா முயற்சி, களை கண்ஆக-பற்றுக் கோடாகக் கொண்டு, சிந்தும்-சிதைகின்ற, பால் முளை-ஊழ்வினையின்முளை, மறலி-இயமன், கான் முளை-பிள்ளை (மார்க்கண்டேயன்), சாலும்-போதுமான, கரி-சான்று.

4. குலமகள்-நல்லொழுக்கம் உடைய பெண், கொழுநன்-கணவன், மன்ற-உறுதியாக, அறவோர்க்கு-நல்லொழுக்கம் உடைய மாணவர்கட்கு, அடிகள்-ஆசிரியர், இலைமுகம்-இலைநுனி (போன்ற), பைம்பூண்-பசுமையான அணி, இறை-அரசன் அல்லது கடவுள்.

5. உறுதி பயப்ப-நன்மை பயக்கும் காரியங்கள், கடைபோகா ஏனும் - முற்றுப்பெருவிடினும், இறுவரை காறும்-முடிவுபெறும் வரைக்கும், இறும் உயிர்க்கும்-இறக்கும் நிலையில் உள்ள உயிருக்கும், ஆயுள் மருந்து-வாழ் நாளை வளரச் செய்யும் மருந்துகளை, ஒதுக்கல்-வாயில் விடுதல், அல்லன போல்-முடியாததை போலத் தோன்றி.

### பயிற்சி :

1. **பிரித்து எழுதுக:—** நல்லிசை, உற்றுழி, ஊங்கில்லை, சிற்றுயிர், பெரிதென்று, கருத்தழிக, களைகண், மகட்கு, பைம்பூன்.

2. **பொருள் தருக:—** அறம், அரம்; உலை, உளை; வலி, வளி; வன்மை, வண்மை; கரி, கறி; இறை, இரை; இறு, இரு.

3. **சொற்றொடரில் அமைக்க:—** கை கொடுக்கும், கருத்தழிக, உயிர் குடித்த, தீது அன்று.

### வினாக்கள்

1. சிற்றுயிர்க்குற்ற துணை எது? அது எவ்வெவற்றைத் தரும்?

2. எதை நோக்கி அகம் மகிழ வேண்டும்? யாரை நோக்கிக் கருத்தழிய வேண்டும்?

3. 'மறலி உயிர் குடித்த கான்முளை'? —யார்? வரலாறு யாது?

4. உலையா முயற்சி தருவது யாது?

5. குலமகள், புதல்வர், மாணாக்கர், மற்றையோர்-இவர்களுக்குத் தெய்வம் ஆவர் யார் யார்?

6. 'இறும் உயிர்க்கும் ஆயுள் மருந்து ஒழுக்கல் தீது அன்று'—ஏன்? இதனல் விளக்கப்படும் நீதியை விளக்கு.

## 2. நன்னெறி

நீக்கம் அறும்இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்:—பூக்குழலாய்!
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம். 1

உள்ளங் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணம்என்க:—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு. 2

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி(து); ஏனையவர்
பேசுற்ற இன்சொல் பிறி(து)என்க;—ஈசர்க்கு
நல்லோன் எறிசிலையோ, நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு? 3

நல்லார் செயும்கேண்மை நாடோறும் நன்றாகும்;
அல்லார் செயும்கேண்மை ஆகாதே;—நல்லாய்! கேள்;
காய்முற்றில் தின்தீன் கனியாம்; இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்ஆகிப் போம்? 3

இன்சொலால் அன்றி, இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே;—பொன்செய்(து)
அதிர்வளையாய்! பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கு கடல். 5

—சிவப்பிரகாச சுவாமிகள்

## குறிப்புரை

இந்நூலைச் செய்தவர் துறைமங்கலம் **சிவப்பிரகாச சுவாமிகள்.** இவர் வீர சைவத் துறவியார். இவர் காலம் பதினேழாம் நூற்றுண்டு. இந்நூலில் நாற்பது பாடல்கள் உள்ளன. நல்ல நீதிகளைக் கூறும் நூலாதலால், இதற்கு இப்பெயர் அமைந்தது.

1. நீக்கம் அறும் இருவர்—பிரிவு இல்லாத நண்பர் இருவர், நீங்கிப் புணர்ந்தாலும்—பிரிந்து (முன்போலக்) கூடினுலும், நொய்து ஆகும்—அற்பமாகும், பூக்குழலாய்—பூக்களைச் சூடிய கூந்தலை உடையவளே, பழமைபோல்—முன்போலவே, புல்லினும்—கூடினுலும், திண்மை நிலை போம்-(முளைப்பதற்கேற்ற) வலிமைத் தன்மை போய்விடும்.

2. உள்ளம் கவர்ந்து—மனத்தைத் தன்னுடைய தாக்கிக் கொண்டு, ஓங்கும்—வளர்கின்ற, தடம் கரை—பெரிய கரை, விளம்பு—நீ சொல்.

3. வன்சொல் — கடுஞ்சொல், ஏனையவர் — (குற்றம் பொருந்திய மனத்தை உடையவராகிய) பிறர், பிறிது என்க — கொடியதாகும் என்று அறிக, நல்லோன் — நற்குணம் உடையவராகிய சாக்கிய நாயனுர், எறி சிலையோ—எறிந்த கல்லோ, நல்நுதால்—அழகிய நெற்றியை உடையவளே, கருப்பு வில்லோன்—கரும்பை வில்லாக உடைய மன்மதன், விருப்பு—விருப்பமாயிற்று.

4. கேண்மை—நட்பு, நாடோறும் நன்ருகும்—தினமும் நன்முறையில் வளரும், அல்லார்—தீயோர், ஆகாதே—நல்லதாகாது, நல்லாய்—நற்குணத்தை உடையவளே, தின்தீம் கனியாம் — தின்னுதற்குரிய இனிய கனியாகும், என்னுகிப்போம்—என்ன பயனைத் தரும்?

5. இரு நீர்—பெரிய கடல் (சூழ்ந்த), வியன் உலகம்—அகன்ற உலகம், வன்சொல்—கடுஞ்சொல், பொன் செய்து அதிர் வளையாய்-அழகைச் செய்து ஒலிக்கின்ற வளையலை

அணிந்தவளே, அழற்கதிர்—வெம்மை பொருந்திய கிரணங்களை உடைய சூரியன், தண் என் கதிர் - குளிர்ச்சி பொருந்திய கிரணங்களை உடைய சந்திரன்.

### பயிற்சி :

1. பிரித்து எழுதுக;— நொய்தாகும், கவர்ந்தெழுந்தோங்கு, தடங்கரை, நெஞ்சுடையார், வன்சொல், இன்சொல், ஈசற்கு, நன்னுதல், கருப்புவில்லோன், நாடோறும், நன்ருகும், இளந்தளிர், வியனுலகம், அழற்கதிர்.

2. வாக்கியத்தில் அமைக்க:— திண்மை, குணம், தடங்கரை, கேண்மை, மகிழாது, பொங்கும்.

3. எதிர்ச்சொல் எழுதுக:— பெருமை, பழமை, திண்மை, தடுத்தல், வன்சொல், விருப்பு, பொங்காது.

### வினுக்கள் :

1. கீழே உள்ள உவமைகளை விளக்குக:—
   (i) 'நெல்லின் உமி சிறிது நீங்கிப் பழமை போல் புல்லினும்'
   (ii) பொங்காது அழற்கதிரால் தண்ணென் கதிர் வரவால் பொங்கும் கடல்.

2. யார் பெருமை நொய்தாகும்? ஏன்?

3. 'குணமே குணம் என்க'—எக்குணம்?

4. சினத்தின் தன்மையைப்பற்றி நன்னெறி நவில்வது யாது?

5. யாருடைய வன்சொல் இனியது? யாருடைய இன்சொல் கொடியது?

6. 'நல்லோன் எறிசிலை—வில்லோன் மலர்' இவைகள் தெரிவிக்கும் குறிப்புகள் யாவை?

7. நல்லார் கேண்மையும் அல்லார் கேண்மையும் எவ்வுவமைகளால் விளக்கப்பட்டுள்ளன?

8. வியனுலகம் எச்சொற்களால் மகிழும்? எச்சொற்களால் மகிழாது?

# 3. திருக்குறள்

மலர்மிசை ஏகினன் மாண் அடி சேர்ந்தார்,
நிலமிசை நீடுவாழ் வார். 1

துப்பார்க்குத் துப்(பு)ஆய துப்(பு)ஆக்கித் துப்பார்க்குத்
துப்(பு)ஆய தூஉம் மழை. 2

நிறைமொழி மாந்தர் பெருமை, நிலத்து
மறைமொழி காட்டி விடும். 3

அன்(று)அறிவாம் என்னா(து) அறம் செய்க; மற்(று)அது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 4

அன்பும் அறனும் உடைத்தாயின், இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 5

மகன் தந்தைக்(கு) ஆற்றும் உதவி, 'இவன் தந்தை
என்நோற்றான் கொல்!' எனும் சொல். 6

அன்பகத்(து)இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம் தளிர்த்தற்று. 7

மோப்பக் குழையும் அனிச்சம்; முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 8

பணி(வு)உடையன் இன்சொலன்ஆதல் ஒருவற்(கு)
அணி; அல்ல மற்றுப் பிற. 9

காலத்தி னாற்செய்த நன்றி சிறி(து)எனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 10

நன்றி மறப்பது நன்(று)அன்று. நன்(று)அல்ல(து)
அன்றே மறப்பது நன்று. 11

கேடும் பெருக்கமும் இல் அல்ல; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்[கு] அணி. 12

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு. 13

உலகத்தொ[டு] ஒட்ட ஒழுகல், பலகற்றும்
கல்லார், அறிவிலா தார். 14

எனைத்துணையர் ஆயினும் என்னும், தினைத்துணையும்
தேரான், பிறன்இல் புகல். 15

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்தல் தலை. 16

அவ்வித்[து] அழுக்கா[று] உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 17

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்,
நடு[வு] அன்மை நாணு பவர். 18

அறம்கூறான் அல்ல செயினும், ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. 19

புறங்கூறிப் பொய்த்[து] உயிர்வாழ்தலின், சாதல்
அறம்கூறு ஆக்கம் தரும். 20

—திருவள்ளுவர்

## குறிப்புரை :

திருக்குறள் ஆசிரியர், திருவள்ளுவர்; ஏறக்குறைய 1800 ஆண்டுகட்கு முற்பட்டவர். அவர் செய்த திருக்குறள் எந்நாட்டு மக்களுக்கும் ஒத்த அறிவுரைகளை எடுத்துக் கூறுகின்றது. இந்நூலில் 133 அதிகாரங்கள் உள்ளன. ஒவ்வோர் அதிகாரத்திலும் 10 குறட்பாக்கள் இருக்கின்றன. இந்நூல் உலகப் புகழ் பெற்ற நூலாகும். இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

1. மலர்—உள்ளத்தாமரை (இதயம்), மிசை—மேல், மாண்—மாட்சிமைப்பட்ட, நிலமிசை—வீட்டுலகின்கண்.

2. துப்பார்—உண்பவர், துப்பு-உணவு, ஆக்கி-உண் டாக்கி, துப்பு ஆயது—உணவாய் இருப்பது.

3. நிறை மொழி மாந்தர்—நிறைந்த பயன்களைத் தரவல்ல ஆற்றல் மிக்க சொல்லைப் பேசும் துறவியர், மறை மொழி—மந்திரம், காட்டுதல்—பயனால் உணர்த்துதல்.

4. அன்று—(யாம்) இறக்கும் அந்நாளில், அறிவாம்-(அறம் செய்தலைப் பற்றி) நினைப்போம், பொன்றுங்கால்—இவ்வுடம்பு அழியும் காலத்து, பொன்று—அழியாத.

5. அன்பு - மனைவியினிடம் கொள்ளும் உள்ள நெகிழ்ச்சி, அறன்—பிறருக்குக் கொடுத்துண்டலாகிய அறம், அன்பு—பண்பு, அறம்—பயன்.

6. ஆற்றும்—செய்யும், நோற்றான் - தவஞ்செய்தான்

7. அகத்து—மனதில், வன்பால்—வலிமையான நிலம்

8. மோப்ப—மோந்து பார்க்க, குழையும்—வாடும், அனிச்சம்—அனிச்சம்பூ, விருந்து—விருந்தினர்.

9. பிற அல்ல—உடலுக்கு அணியும் பிற அணிகள் அணிகளல்ல.

10. காலத்தினால்—துன்பம் வந்த காலத்தில், ஞாலம்-பூமி, மாணப் பெரிது—மிகப் பெரிது.

11. நன்றி—நன்மை, மறக்கத் தகுவதையும் மறக்கத் தகாததையும் சேர்த்துக் கூறுவது இக்குறள்.

12. கோடாமை—ஒரு பக்கம் சாயாத நடுவு நிலைமை.

13. யா—எவற்றை, சோகாப்பர்—துன்புறுவர், சொல் இழுக்கு—சொற்குற்றம்.

14. உலகத்தோடு-உயர்ந்தோர்களுடன், ஒட்ட - பொருந்த, ஒழுகல் கல்லார்-அறிவிலாதார்.

15. எனைத் துணையராயினும்-எவ்வளவு பெருமை யுடையவர் ஆனாலும், தினைத்துணையும்-தினை அளவும் (சிறிதும்), புகல்-புகுதல்.

16. அகழ்வார் - தோண்டுகிறவர், இகழ்வார் - அவ மதிப்பவர், தலை-மேலான அறம்.

17. அழுக்காறு-பொறுமை, செய்யவள் - திருமகள், அவ்வித்து - பொறுமைப்பட்டு, தவ்வையை-மூத்தவளுக்கு (மூதேவிக்கு)

18. படுபயன் - (பொருளால்) உண்டாகும் பயனை, வெஃகி-விரும்பி, பழிப்படுவ-பழி உண்டாகும் செயல்களை, அன்மை - அல்லாத.

19. அல்ல செயினும் - பாவங்களைச் செய்தாலும்.

20. பொய்த்து-இனியனாகப் பொய்த்து நடித்து, சாதல்-இறத்தல், ஆக்கம்-செல்வம், தரும்-கொடுக்கும்.

### பயிற்சி

**1. சேர்த்து எழுதுக :—**

மாண் + அடி, நிலம் + மிசை, துப்பு + ஆய, நிலம் + அத்து, அன்று + அறிவாம், தந்தை + கு, வன்பால் + கண், பணிவு + உடையன், சிறிது + எனினும், நன்று + அன்று, இல் + அல்ல, அறிவு + இல்லாதார், பிறன் + இல், அழுக்காறு + உடையான், பழி + படுவ, நடுவு + அன்மை, புறம் + கூறுவன்.

**2. எதிர்ச்சொல் தருக :—**

வாழ்வார், பெருமை, காட்டி, செய்க, பொன்று, உதவி, இல்லா, இன்சொலன், செய்த, சிறிது, மறப்பது, கேடு, காக்க, கல்லார், இனிது, சாதல்.

## வினுக்கள்

1. 'நிலமிசை நீடு வாழ்வார்—யார், ஏன்?

2. மழை மக்களுக்கு எவ்வழிகளில் நன்மை செய்கிறது?

3. யார் பொருமையை மறைமொழி காட்டிவிடும்?

4. பொன்ருத் துணே எது? செய்யத் தகுவது எது? ஏன்?

5. இல்வாழ்க்கைக்கு எவை வேண்டும்?

6. இல்வாழ்க்கையின் பண்பு யாது? பயன் யாது?

7. மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி யாது?

8. 'வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று'—விளக்குக.

9. விருந்தினர் அனிச்சம் பூவினும் மெல்லியர் என்பதை விளக்குக.

10. ஒருவனுக்கு அணியாவது யாது?

11. ஞாலத்தின் மாணப் பெரிது எது?

12. எது நன்று? எது நன்றன்று?

13. சான்ருேர்கணி எது?

14. யார் சொல்லிழுக்குப்பட்டுச் சோகாப்பர்?

15. எதைக் கல்லாதார் அறிவிலாதார்?

16. 'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல'—விளக்குக.

17. செய்யவள் தவ்வைக்கு யாரைக் காட்டிவிடும்?

18. நடுவன்மை நாணுபவர் எவை செய்யார்?

19. புறங்கூருமையின் பெருமையை வள்ளுவர் எவ்வாறு விளக்கியுள்ளார்?

20. 'சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும்.—யாருக்கு?

## 4. நான்மணிக்கடிகை

கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும்; மான்வயிற்றின்
ஒள்அரி தாரம் பிறக்கும்; பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்; அறிவார் யார்
நல்லான் பிறக்கும் குடி? 1

இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்;
வளம்இலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்;
கிளைஞர்இல் போழ்தில் சினம்குற்றம்; குற்றம்
தமர்அல்லார் கையகத்(து) ஊண். 2

மனைக்குப்பாழ் வாள்நுதல் இன்மை; தான் செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை; இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை; தனக்குப்பாழ்
கற்றறி(வு) இல்லா உடம்பு. 3

கண்ணிற் சிறந்த உறுப்பில்லை; கொண்டானின்
துன்னிய கேளிர் பிறர் இல்லை; மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருள் இல்லை; ஈன்றாளோ(டு)
எண்ணக் கடவுளும் இல். 4

மண்ணி அறிய மணிநலம்; பண்ணமைத்(து)
ஏறிய பின் அறிய மாநலம்; மாசறச்
சுட்டறிய பொன்னின் நலங்காண்பார்; கெட்டறிய
கேளிரால் ஆய பயன். 5

—விளம்பி நாகனார்

## குறிப்புரை

நான்கு வகை மணிகளால் செய்யப்பட்ட அணி உடலுக்கு அழகைக் கொடுப்பது போல், ஒவ்வொரு செய்யுளிலும் நான்கு நீதிகளைக் கொண்ட உரை மணிகளால் கோக்கப்பட்ட இந்நூல் உலக வாழ்க்கைக்கு அழகைத் தருவதால் **நான்மணிக்கடிகை** என்னும் பெயர் பெறும். விளம்பி நாகனர் கடைச் சங்கப் புலவர் ஆவர். இவர் இயற்றிய நான்மணிக்கடிகை கடைச் சங்கத்துக்குப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்ருகும்.

1. கள்ளி—கள்ளி மரம், அகில்—நறுமணமுள்ள அகிற் கட்டை, அரிதாரம்—கஸ்தூரி, முத்தம்—முத்து, நல்லான்—சிறந்தவன்.

2. வளம்—செல்வ வளம், போழ்தத்து—நேரத்தில், வள்ளன்மை—வரையாது கொடுக்கும் செயல், கிளைஞர்—சுற்றத்தார், தமர் அல்லார்—உறவினரல்லாதவர்.

3. வாள் நுதல்—ஒளி பொருந்திய நெற்றியை உடைய பெண், இன்மை-இல்லாமை, நட்டோர்-நண்பர், மூத்தோர்-அறிவு மிக்கவர், கற்றறிவு—கல்வி அறிவு.

4. கொண்டான்—கணவன், துன்னிய—நெருங்கிய, கேளிர்—உறவினர், மக்களின்—குழந்தைகளைக் காட்டிலும், சான்ற—சிறந்த, ஈன்ருள்—பெற்ற தாய்.

5. மண்ணி—சுத்தம் செய்து, மணி நலம்—இரத்தினத்தின் அழகு, மாசற—குற்றமற, கேளிர்—சுற்றத்தார், மா—குதிரை, பண்—குதிரை மேலிடும் தவிசு.

## பயிற்சி

1. **பிரித்து எழுதுக:-** பெருங்கடல், பருவத்து, கையகத்து, கற்றறிவு, பிறரில்லை, பண்ணமைத்து, கேளிரால்.

2, **சேர்த்து எழுதுக:—** ஒள்+அரிதாரம், கிளைஞர்+இல், தமர்+அல்லார், வாள்+நுதல், உறுப்பு+இல்லை, பொருள்+இல்லை, மாசு+அற, நலம்+காண்பார்.

## வினுக்கள்

1. 'கள்ளி வயிற்றின்' எனத் தொடங்கும் செய்யுளின் கருத்து யாது ?

2. குற்றமாவன யாவை ? அவை எப்பொழுது குற்ற மாகும் ?

3. 'மணக்குப் பாழ்' என்னும் செய்யுளில் வந்துள்ள நீதிகள் யாவை ?

4. 'கண்ணிற் சிறந்த' எனத் தொடங்கும் செய்யுள் நான்மணிக்கடிகையைச் சேர்ந்தது என்பதை விளக்குக.

5. மணிநலம், மாநலம்—இவற்றை எப்பொழுது அறியலாம் ?

6. கேளிரால் ஆய பயனை எப்பொழுது தெரியலாம்?

7. உங்கள் பாடப்பகுதியில் வந்துள்ள செய்யுள்களின் துணை கொண்டு, 'குற்றம்' என்பது பற்றியும் 'இன்மை' என்பது பற்றியும் தனித்தனி ஒரு பத்தி எழுதுக.

---

# 5. ஆசாரக் கோவை

நன்றி யறிதல், பொறையுடைமை, இன்சொல்லொ[டு]
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை, கல்வியொ[டு]
ஒப்புர வாற்ற அறிதல், அறிவுடைமை
நல்லினத் தாரொடு நட்டல், இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1

கிடக்குங்கால் கைகூப்பித் தெய்வந் தொழுது,
வடக்கொடு கோணம் தலை செய்யார், மீக்கோள்
உடற்கொடுத்துச் சேர்தல் வழி. 2

நந்தெறும்பு தூக்கணம் புள்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைபிடித்துத்—தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும். 3

பொய்குறளை வெளவல்அழுக்கா றிவைநான்கும்
ஐயந்தீர் காட்சியார் சிந்தியார்; சிந்திப்பின்
ஐயம் புகுவித் தருநிரயத்[து] உய்த்திடும்;
தெய்வமுஞ் செற்று விடும். 4

நின்றக்கால் நிற்க அடக்கத்தால்; என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார்; பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக; மீட்டும்
வினவற்க சொல்லொழிந்தக் கால். 3

—பெருவாயின் முள்ளியார்

## குறிப்புரை

ஆசாரக் கோவை என்பது பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்த நீதி நூல்களுள் ஒன்று. உயர்ந்தோருடைய ஆசாரங்களைத் தொகுத்துக் கூறும் நூல் என்பது இதன் பொருள். ஆசாரம்-ஒழுக்கம். இது நூறு வெண்பாக்களைக் கொண்டது.

ஆசாரக்கோவையைப் பாடிய பெருவாயின்முள்ளியார் என்னும் புலவர், இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்தவர். அவர் சைவ சமயத்தினர் என்பதும் அவரது ஊர் வண்கயத்தூர் என்பதும் அவர் பாடிய தற்சிறப்புப் பாயிரத்தில் தெரிகின்றன.

1. பொறை உடைமை — பொறுமையாய் இருத்தல், இன்னாத — தீயவை, ஒப்புரவாற்ற — உலகத்தோடு ஒட்டி வாழ, நட்டல்—நட்பு கொள்ளல், ஆசாரம்—நல்லொழுக்கம், வித்து—விதை, அடிப்படை.

2. கிடக்குங்கால் — படுக்கும் பொழுது, கோணம் — மூலைத்திக்குகள், (வடகிழக்கு, வடமேற்கு முதலியன) தலை செய்யார்—தலையை வையார், மீக்கோள்—மேற்பார்வை, சேர்தல்—படுத்துக் கொள்ளுதல்.

3. நந்து—நத்தை, தூக்கணம்புள்—தூக்கணங்குருவி, அப்பெற்றிஆக — அத்தன்மைஆக, எப்பெற்றியாயினும் — எவ்வகையிலாயினும், படும்—அமையும்.

4. குறளை—கோள் சொல்லல், வெளவல்—கவர்தல், அழுக்காறு—பொறாமை, ஐயம் தீர் காட்சியார்—குற்றமற்ற அறிவையுடையவர், ஐயம் புகுவித்து—பிச்சையெடுக்கச் செய்து, நிரயம்—நரகம், உய்த்திடும்—செலுத்திவிடும்.

5. நின்றக்கால்-ஆசிரியர் நின்ற பொழுது, ஏவாமை-போ என்று கட்டளையிடாமல், பெருந்தக்கார்—சிறந்த பண்பினையுடையவர், கேட்டீக—கேட்க, சொல் ஒழிந்தக்கால்—பேசி முடிந்த பொழுது.

1. பொருள் தருக:— நட்டல், ஒப்புரவு, கோணம், மீக்கோள், குறளை, வௌவல், நிரயம், கேட்டீக, ஏவாமை.

2. பிரித்து எழுதுக:— பொறையுடைமை, எவ்வுயிர், ஒப்புரவாற்ற, உடற்கொடுத்து, நந்தெறும்பு, கடைப்பிடித்து அழுக்காறிவை, புகுவித்தருநிரயம்.

3. சேர்த்து எழுதுக:— நன்றி+அறிதல், அறிவு+உடைமை, இவை+எட்டும், தம்+கருமம், எ+பெற்றி.

4. வாக்கியத்தில் அமைக்க:— எவ்வுயிர்க்கும், நல்லினத்தார், முயல்பவர், செவி கொடுத்து.

## வினாக்கள்

1. 'இவை எட்டும் சொல்லிய ஆசாரவித்து'—எவை?

2. ஆசாரம் யாருக்கு எப்பெற்றியானும் ஏற்படும்?

3. எறும்பு, தூக்கணம்புள், காக்கை—இவைகளின் நற்செயல்கள் யாவை? இவற்றிடமிருந்து நாம் கடைப்பிடிக்க வேண்டுவன யாவை?

4. ஐயந்தீர் காட்சியார் எவைகளைச் சிந்தியார்? சிந்திப்பின் அவர்களுக்கு வரும் தீமைகள் யாவை?

5. ஆசிரியர்களிடத்து மாணவர்கள் எம்முறையில் நடந்து கொள்ள வேண்டும்?

6. ஆசாரக் கோவையில் வந்திருக்கும் சிறந்த ஒழுக்கங்களைத் தொகுத்து 10 வரிகள் எழுதுக.

## III கதைப் பகுதி

### குசேலோபாக்கியானம்

[வடமதுரைக் கருகில் அவந்தி என்னும் அழகிய நகரில் அந்தணர் குலத்தில் குசேலர் தோன்றினர். கண்ணபிரானும் குசேலரும் இளமையில் சாந்தீப முனிவரிடம் கல்வி பயின்றனர். இருவரும் சிறந்த நண்பர். கல்வி கற்று முடிந்த பிறகு குசேலர் சுசீலை என்ற நங்கையை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். கண்ணபிரானுர் துவாரகைக்கு மன்னரானுர்.

வாழ்வில் மக்கட்செல்வம் அதிகரிக்க, குசேலரை வறுமை வாட்டத் தொடங்கியது. வறுமையை நீக்க வேண்டிச் சுசீலை குசேலரைக் கண்ணபிரானிடம் பொருள் பெற்று வருமாறு தூண்டினள். குசேலர் மனைவியின் வற்புறுத்தலைத் தவிர்க்க முடியாமல், அவள் கொடுத்த அவலைக் கந்தையில் முடிந்து கொண்டு, கண்ணபிரானுரைக் காணத் துவாரகைக்குப் பயணமானுர். நெடுந்தூரம் நடந்து சென்று கண்ணபிரானுர் அரண்மனை வாயிலை அடைந்தார். அவர் கண்ணபிரானுரைக் காண வேண்டுமென்று வாயிற் காவலரிடம் கூறினர். முதலில் அவர்கள் குசேலர் தோற்றத்தைக் கண்டு அவரை இகழ்ந்தார்கள். பின்னர் ஒருவன் சென்று கண்ணபிரானுரிடம் குசேலர் வரவைப் பற்றிக் கூறினன்].

### துவாரபாலகர் கண்ணபிரானுருக்குக் குசேலர் வரவுரைத்தல் :

மாமறைத் தலைவா, போற்றி! மதிக்குல விளக்கே போற்றி!
காமரிந் திரன்முன் ஞேர் காண்பதற் கரியாய், போற்றி!
தாமரைக் கண்ணு, போற்றி! தரியலரேறே, போற்றி!
தோமறு செல்வம் வாய்ந்த துவாரகைக் கிறைவா, போற்றி'' 1

"ஆதி நாளையினில் நின்னோ டருங்கலை கற்று ளானும்;
போதவும் சிறந்த நட்புப் பூண்டுகொண் டவனும்; கந்தை
மேதகக் கொண்ட நீரான்; மெய்ம்மறை யவர்கு லத்தான்;
கோதறு குணத்தின் மிக்கான்; குசேலனென் றியம்பி
னும்பேர். 2

"வற்றியென் பெழுந்த யாக்கை மாதவ னின்மேல் வைத்த
பற்றினை யெம்ம னோரோ பகுத்தறிந் தளக்க வல்லார்?
இற்றைநாள் வந்து வாயி லிருக்கின்று னெதிர்த்த போரில்
வெற்றிகொள் கழற்கால் வேந்தே! விண்ணப்ப மிதுவே,"
என்றார். 3

### கண்ணபிரானுர் கட்டளை:

என்றலு முவகை விம்ம எழில்முக மலர்ச்சி காட்டப்
பொன்றலில் கருணை பொங்கிப் பொழிதர, "விரைவினிற்
சென்று
இன்றுநம் வாயில்வந்த இருந்தவத் தலைவன் றன்னை
மன்றவிங் கழைப்பீர்!" என்று வாய்மலர்ந் தருளினனே. 4

### குசேலருக்குக் காவலர் கூறல்:

"நின்னுடை வரவு ரைத்தோம்
நிருபனுக் கப்போழ் துற்ற
பன்னருங் களிப்பை யாமோ
பகர்ந்திட வல்லம்? ஐய!
முன்னமங் கிருந்த வின்ப
முழுவது மறந்து நின்றான்!
நன்னர்நெஞ் சுடைய நீரார்
நட்பினிற் சிறந்ததுண்டோ? 5

''தாயது வருகை கேட்ட
தனியிளங் குழவி போன்று,
நேயமிக் குடைய ஞகி
நெஞ்சினு ளுவகை பூப்பப்
'போயழைத் திடுமி னின்னே!
போயழைத் திடுமி னின்னே!
போயழைத் திடுமி னின்னே!'
எனவிரை பொருளிற் சொற்ருன். 6

## குசேலர் கண்ணபிரானுரைக் காணப்போதல்:

''ஆதலி னெம் பி ரானுக்
ககத்துமிக் குவகை யுய்ப்ப
ஏதமில் முனிவ ரேறே!
எழுந்தரு ளுக!'' என் றங்கைப்
போதகங் கூப்பி ஞர்கள்;
பொருக்கென வெழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த வையன்
விரைதர நடக்க லுற்ருன். 7

பன்மணி வாயி லெல்லாம்
பின்னிடும் படிக டந்து;
நன்மணி மோலி வேந்தர்
நயந்தபே ரவையு நீந்தி,
அன்மணி விளர்க்கும் வண்ணன்
அணங்கனு ரொடுமி ருக்கும்
பொன்மணி வாயி லந்தப்
புரத்தினுக் கணிய ஞனன். 8

வருந்துமோர் மிடியன் சேம
வைப்பெதிர் கண்டாற் போலும்,
அருந்துண விழந்தோன் விண்ணோர்
அமுதெதிர் கண்டாற் போலும்,

பரிந்துவெப் புழலு வோன்கற்
பகமெதிர் கண்டாற் போலும்,
சரிந்தபற் றினன்மெய் யாசான்
றனையெதிர் கண்டாற் போலும். 9

எண்ணனைக் கிலங்கு மார்பம்
ஈந்தருள் பிரானை, நீல
வண்ணனைத் திகிரி சங்கம்
வலமிட முறக்கொண் டானை,
மண்ணனைத் தும்பு ரக்கும்
வாசுதே வனைம ணக்குங்
கண்ணனைத் துளவத் தாமக்
கண்ணனைக் கண்ணிற் கண்டான். 10

—வல்லூர் தேவராசப் பிள்ளை

## குறிப்புரை

குசேலன்-கந்தையை ஆடையாக உடையவன். இந் நூற் பெயர் குசேல + உபாக்கியானம் எனப் பிரிந்து குசேலரைப் பற்றிய சிறு கதை எனப் பொருள்படும். உபாக்கியானம்-கிளைக் கதை.

ஆசிரியர்: வல்லூர்-தேவராசப்பிள்ளை. இவர் தந்தையார் வீராசாமிப் பிள்ளை. இவர் கருணீகர் குலத்தைச் சேர்ந்தவர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் கல்வி கற்றவர். இந்நூல் அரங்கேறியது கி. பி. 1880ஆம் ஆண்டு. 773 விருத்தங்களைக் கொண்டது இந்நூல்.

1. மாமறை - பெருமை பொருந்திய வேதம், மதி-சந்திரன், தரியலர்-பகைவர், தோமறு-குற்றமற்ற, இறைவ-மன்ன.

2. அருங்கலை — பெருமை பொருந்திய சாத்திரங்கள், நீரான் - தன்மையுடையவன், கோது அறு-குற்றம் நீங்கிய,

3. வற்றி-மெலிந்து, யாக்கை-உடம்பு, பற்று—அன்பு, எம்மனோர்-எம்மைப் போன்றவர், பகுத்தறிந்து-ஆராய்ந்து அறிந்து, அளக்க-வரையறை செய்ய, எதிர்ந்த போர்—தானே வந்து தோன்றிய யுத்தம், கழல்-வீரத்தாலும் கொடையாலும் வீரர் காலில் அணியும் அணி, விண்ணப்பம்-வேண்டுகோள்.

4. உவகை—மகிழ்ச்சி, விம்ம—அதிகரிக்க, எழில்—அழகு, பொன்றல் இல்—அழிதல் இல்லாத, இருந்தவம்—பெருந்தவம், மன்ற—நிச்சயமாக.

5. உரைத்தேம்—தெரிவித்தோம், நிருபன்—மன்னன், பன்னரு—சொல்லுவதற்கு அரிய, நன்னர் நெஞ்சு—நல் லெண்ணம், நீரார்—தம்மையுடையவர்.

6. தனி—(தாயை விட்டுப் பிரிந்து) தனித்திருக்கும், குழவி—குழந்தை, உவகை—மகிழ்ச்சி, பூப்ப—தோன்ற, இன்னே—இப்பொழுதே.

7. ஏதம் இல்—குற்றமில்லாத, முனிவர் ஏறே-முனிவர் களுள் தலைமை வாய்ந்தவரே, போது—தாமரைப் பூ, கைப் போதகம் கூப்பி—கைகளைக் குவித்து வணங்கி, விரைதர—வேகமாக.

8. மோலி—கிரீடம், நயந்த—விரும்பிய, அவை-சபை, அல்மணி—நீலமணியும், விளர்க்கும்—வெளுத்துப் போகும் படியான, வண்ணல்—கரிய நிறமுள்ள கண்ணன், அணியன் ஆனான்—சமீபித்தவன் ஆயினான், அணங்கு அனார்—தெய்வப்பெண் போன்றவர்.

9. மிடியன்—தரித்திரன், சேமவைப்பு—புதையல்.

10. எண் அனை—யாவரும் நினைக்கும் அன்னையாகிய இலக்குமி, இலங்கு—விளங்குகின்ற, வண்ணன்—நிறமுள்ள வன், திகிரி—சக்கரம், உற—பொருந்த, மண்—உலகம், புரக்கும்—காக்கும், கள் நனை துளவம்—தேன் சொட்டுகின்ற துளசி, தாமம்—மாலை, அனை—அன்னை என்பதன் இடைக் குறை விகாரம்.

## பயிற்சி

1. பொருள் தருக :— மறை, போற்றி, தரியலர், ஏறு, தோம், காமர், கோது, என்பு, யாக்கை, கழல், பொன்றல், நன்னர், உவகை, போது, ஏதம், மோலி, நயந்த, அல்மணி, விளர்க்கும், அணியன், மிடியன், வைப்பு, சரிந்த, பற்று, ஆசான், அணே, திகிரி, துளவம், தாமம்.

2. பொருள் எழுதுக :— மறை, மரை; குலம், குளம்; அரி, அறி; கலே, களே, கழை; கருணே, கருனே; அழை, அளே; களி, கழி; குழவி, குளவி.

3. இரு பொருள் தருக :— மதி, விளக்கு, மெய், மணி, மணம்.

4. பிரித்து எழுதுக :— மதிக்குலம், காமரிந்திரன், தரியலரேறு, அருங்கலே, கோதறு, என்பெழுந்த, கழற்கால், மன்றவிங்கழைப்பீர், இளங்குழவி, போயழை, அங்கை, வாயிலெல்லாம், பேரவை, அன்மணி, அருந்துணவு, வெப்புழலுவோன், எண்ணனே, மண்ணனேத்தும், கண்ணனே துளவம்.

5 சேர்த்து எழுதுக : -மறை+தலேவ, மெய்+மறை, பகுத்து+அறிந்து, மலர்ந்து+அருளி, வருந்தும்+ஓர், வைப்பு+எதிர், விண்ணேர்+அமுது, மெய்+ஆசான், ஈந்து+அருள், நீலம்+வண்ணன், வலம்+இடம், துளவம்+தாமம்.

## வினுக்கள்

1. வாயிற்காப்போர் கண்ணபிரானுரை அடைந்து எவ்வாறு விளித்தனர் ?

2. வாயிற்காப்போர் கண்ணபிரானுரிடம் குசேலரைப் பற்றிக் கூறியதென்ன ?

3. 'வாய்மலர்ந்தருளினுன்'—யார்? அருளிய யாவை?

4. வாயிற்காப்போர் குசேலரிடம் வந்து கூறிய தென்ன?

5. 'தாயது வருகை கேட்ட தனியிளங்குழவி போல'- உவமையை விளக்குக.

6. குசேலர் எதைக் கடந்து, எதை நீந்தி, எங்கே அடைந்தார்?

7. குசேலர் கண்ணபிரானுரைக் கண்ட தன்மைக்குக் கவிஞர் காட்டும் நான்கு உவமைகள் யாவை?

8. 'கண்ணனைக் கண்ணிற் கண்டான்' — யார்? கண்ணன் இயல்பு எவ்வாறு சித்தரிக்கப்பட்டுள்ளது?

9. இடம் சுட்டி விளக்குக:—

(1) இற்றை நாள் வந்து வாயிலிருக்கின்ருன்.

(2) இங்கழைப்பீரென்று வாய்மலர்ந்தருளினுன்.

(3) நன்னர் நெஞ்சுடைய நீரார் நட்பினிற் சிறந்த துண்டோ?

(4) ஏதமில் முனிவரேறே எழுந்தருளுக.

10. இப்பகுதியில் வந்துள்ள கதை நிகழ்ச்சியை ஒரு பக்கத்தில் எழுதுக.

---

# IV. பல் சுவைப் பகுதி

## 1. மழைக்குறி

கொங்குமின்னல் ஈழமின்னல் கூடிமின்னுதே!—ஒரு
கோடிவானம் பாடிமழை தேடியாடுதே!
எங்குமேகீழ் காற்றடித்துச் சங்கையில்லாமல்—இப்போ
ஏற்றமுள்ள கொம்புசுற்றிக் காற்றடிக்குதே!
பங்கத்திளுல் தன்வளையை நண்டடைக்குதே!—கங்கு
பட்டம்பக லிலேசுற்றி வட்டம்போடுதே!
துங்கச்சந்த்ரன் பரிவேடம் போட்டிருக்குதே!—எறும்பு
துழனியோடு போவுதைப்பார் பழனிப்பள்ளீரே!

—வேலச் சின்னேவையன்

### குறிப்புரை

மழைக்குறி—மழை வரும் அடையாளங்கள். இப்பாடல் வையாபுரிப் பள்ளு என்னும் நூலில் உள்ளது. வையாபுரிப் பள்ளு என்பது வையாபுரி நாட்டின் தலைவனுய் விளங்கும் பழனி முருகப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. இதனை இயற்றியவர் குமார விசயகிரி வேலச் சின்னேவையன் என்பவர். இவர் சுமார் 300 ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர் என்பது தெரிகிறது.

கொங்கு—மலைநாடு, ஈழம்—இலங்கை, வானம்பாடி—ஒரு வகைப் பறவை, சங்கை— அளவு, கொம்பு—கிளை, பங்கம்-சேறு, கங்கு-பருந்து, துங்கம்-உயர்ச்சி (பரிசுத்தம்) துழனி—கூட்டம், பரிவேடம்—சந்திர சூரியனைச் சுற்றிக் காணப்படும் வட்டம்.

### வினுக்கள்

1. 'பள்ளு' என்பது யாது?
2. மழை வரும் அடையாளங்கள் எவை?

# 2. குறவஞ்சி

கொல்லிமலை எனக்கிளைய செல்லிமலை அம்மே!
    கொழுநனுக்குக் காணிமலை பழனிமலை அம்மே!
எல்லுலவும் விந்தமலை எந்தைமலை அம்மே!
    இமயமலை என்னுடைய தமையன்மலை அம்மே!
சொல்லரிய சாமிமலை மாமிமலை அம்மே!
    தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை அம்மே!
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்கள் ஆடும்
    திரிகூடமலை எங்கள் செல்வமலை அம்மே!

—திரிகூடராசப்ப கவிராயர்

## குறிப்புரை

இறைவனிடம் அன்புகொண்ட தலைவி ஒருத்தியிடம் ஒரு குறத்தி சென்று குறி சொல்வதாகப் பாடப்பட்ட நூலுக்குக் குறவஞ்சி என்பது பெயர். இந்நூல் நாடக வகையைச் சேர்ந்தது. இதன் ஆசிரியர் திரிகூடராசப்ப கவிராயர். குற்றாலம் என்னும் ஊரைச் சார்ந்த மேலகரத்தில் பிறந்தவர். இவர் சைவ வேளாள குலத்தினர். இவர் காலம் இன்றைக்கு 200 ஆண்டுகட்கு முற்பட்டது.

கொழுநன்-கணவன், காணிமலை-காணியாட்சியாகத் தரப்பட்ட மலை, எல் - ஒளி, முழவு - மிருதங்கம், செல்லினங்கள் - மேகக்கூட்டங்கள், நாஞ்சி நாடு (குமரி மாவட்டப்பகுதி). இச்செய்யுளில் குறத்தி பல மலைகளையும் தன் உறவினர் மலைகளாகக் கூறும் நயம் கண்டு களிக்கத் தக்கது.

## வினாக்கள்

1. குறவஞ்சிக்குரிய மறு பெயர்கள் யாவை?

2. குறத்தி எல்லா மலைகளையும் தனக்கு உரிமை கொண்டாடும் முறையினை விளக்குக.

# 3. தமிழ் முழக்கம்

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல், இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்; ஒருசொற் கேளீர்;
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்!

—பாரதியார்

## குறிப்புரை

இப்பாடலை எழுதியவர் தேசியக் கவிஞர் சி. சுப்பிரமணிய பாரதியார். இவர் தந்தையார் - சின்னச்சாமி ஐயர். தாயார்-இலக்குமி அம்மையார். குலம் - அந்தணர் குலம். காலம்-1882—1921. பிறப்பிடம்-எட்டையாபுரம். இவர் நாடறிந்த கவிஞர்.

சேமம் - இன்பம்.

## வினாக்கள்

1. பாரதியாரால் பாராட்டப்படும் புலவர் யாவர்?
2. நாம் நலமாக வாழ்வதற்குப் பாரதியார் கூறும் வழி யாது?

# 4. அமர கவி

ஊரறிய நாடறிய உண்மை யெல்லாம்
ஒருவரையும் அஞ்சாமல் எடுத்துரைத்தோன்
ஆரமுதம் அனைய கவி பாடித் தந்தோன்,
அமரகவி யென்றெவரும் புகழப்பெற்றோன்,
சீருயராம் தமிழ்மக்கள் செய்த தவத்தால்
தென்னாடு சிறக்கவந்த சுப்பிரமணிய
பாரதியின் பெயர்போற்றி ஏத்து வோமே,
பாமாலை புனைந்தவற்குச் சாத்து வோமே.

—கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை

## குறிப்புரை

தேசிக விநாயகம் பிள்ளை தேரூரில் அழகம்மையாருக்கும் சிவதாணுப் பிள்ளைக்கும் மகனாராய்ப் பிறந்தவர். இந்த நூற்றாண்டில் வாழ்ந்தவர். 'மலரும் மாலையும்' முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

அஞ்சாமல்-பயப்படாமல், உரைத்தோன்-சொல்லியவன், அனைய - ஒத்த, அமரகவி - தேவ கவி, சீர் - சிறப்பு, ஏத்துவோம்-துதிப்போம், புனைந்து-கட்டி, சாத்துவோம்-அணிவிப்போம்.

### வினாக்கள்

1. அமரகவி யார்? அவர் தம் இயல்பு யாது?
2. அவருக்கு நாம் செய்ய வேண்டுவதென்ன?

## 5. அறப்புரட்சி

புதுஉலகம் புதுஉலகம் புதுஉலகம் காண்மின்
புரட்சியிலே புரட்சியிலே பூப்பதந்த உலகம்
புதுஉலகம் பூவினிலே பொதுநறவம் பிலிற்றும்
பொதுநறவம் மாந்தஅறப் புரட்சிசெய எழுமின்;
கலைகொலையாய்க் கவியுமிந்தக் காலஎரி நிற்கும்
கதியினின்றும் காந்திமகான் கருதினரோ இரத்தம்?
நிலைகருணைப் புரட்சியன்றோ நின்றதவர் நெஞ்சில்?
நீதிஅறப் புரட்சிஅது நிறைபுரட்சி அதுவே.

—திரு. வி. கல்யாணசுந்தரனார்

## குறிப்புரை

திரு. வி. க. செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள துள்ளம் என்ற ஊரில் பிறந்தவர். இவர் தாய் தந்தையர் சின்னம்மையார், விருத்தாசல முதலியார். மரபு-வேளாளர் மரபு. சமயம்-சைவம். காலம் கி. பி. 1883—1954. இவர் எழுதிய நூல்கள்-முருகன் அருள் வேட்டல், திருமால்

அருள் வேட்டல், பொதுமை வேட்டல், இருளில் ஒளி, முருகன் அழகு, இளமை விருந்து, திருக்குறள் விரிவுரை, தமிழ்த் தென்றல் முதலியன.

பூப்பது-மலர்வது, நறவம்-தேன், பிலிற்றும்-சிந்தும், மாந்த - அருந்த, கதி - நிலை, நெஞ்சில் - மனத்தில், கருதினரோ-நினைத்தாரோ.

**வினுக்கள்**

1. திரு. வி. க. காட்டும் புரட்சி எத்தகையது?
2. அவர் இயற்றிய நூல்கள் எவை?

## 6. நூல் நிலையம்

தமிழர்க்குத் தமிழ்மொழியில் சுவடிச் சாலை
சர்வகலா சாலையைப்போல் எங்கும் வேண்டும்;
தமிழிலிலாப் பிறமொழி நூல் அனைத்தும் நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்;
அமுதம்போல் செந்தமிழிற் கவிதை நூல்கள்
அழகியவாம் உரைநடையில் அமைந்த நூல்கள்
சுமைசுமையாச் சேகரித்துப் பல்கலைசேர்
துறைதுறையாப் பிரித்தடுக்கி வைத்தல் வேண்டும்.

—பாரதிதாசன்

### குறிப்புரை

பாரதிதாசன் இயற்பெயர் கனகசுப்புரத்தினம். தந்தையார் கனகசபை முதலியார், ஊர்-புதுச்சேரி, பிறப்பு 16-4-1891. எழுதிய நூல்கள்: பாரதிதாசன் கவிதைகள், குடும்ப விளக்கு, பாண்டியன் பரிசு, அழகின் சிரிப்பு, சேர தாண்டவம்.

சுவடிச்சாலை-நூல் நிலையம், அனைத்தும்-யாவற்றையும், கவிதை-பாடல், சுமை சுமை-அடுக்குத் தொடர்.

**வினு**

நூல் நிலையம் எவ்வாறு இருத்தல் வேண்டும் எனப் பாரதிதாசனுர் கூறுகிருர்?

# 7. தமிழ்த்தாய்

காதொளிருங் குண்டலமும் கைக்குவளை
யாபதியுங் கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியும் மெல்லிடையில்
மேகலையும் சிலம்பார் இன்பப்
போதொளிரும் திருவடியும், பொன்முடிச்சூ
ளாமணியும் பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத்
தாங்குதமிழ் நீடு வாழ்க.

—யோகி சுத்தானந்த பாரதியார்

## குறிப்புரை

சுத்தானந்த பாரதியார் இளமையிலேயே துறவறம் பூண்டு தமிழ்த் தொண்டாற்றி வருபவர்; பல மொழிகள் கற்றவர்; செய்யுள் இயற்றுவதிலும் உரைநடை எழுதுவதிலும் வல்லவர்; பல்லாண்டுகள் புதுவையிலுள்ள அரவிந்தர் ஆசிரமத்தில் தங்கி அறப்பணி ஆற்றியவர்.

குண்டலகேசி, வளையாபதி, சிந்தாமணி, மணிமேகலை, சிலப்பதிகாரம், சூளாமணி, திருக்குறள்—இவை தமிழ் மொழியிலுள்ள சிறந்த நூல்கள். இவைகளைத் தமிழன்னை எவ்வாறு அணிந்துள்ளாள் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

ஒளிரும்—விளங்கும், கருணை—இரக்கம், போது—மலர், பொலிய—விளங்க.

## பயிற்சி

1. தமிழ்த்தாய் எந்த எந்த நூல்களை எப்படி எப்படி அணிந்து விளங்குகிறாள் என்பதை விளக்குக.

2. இங்கே கூறப்படாத தமிழ் நூல்களுள் சிலவற்றை ஆசிரியரிடம் கேட்டறிந்து கொள்க.

# 1. உலகில் உயிர்கள் தோன்றிய விந்தை

(புலவர் பா. முருகையனுர் அவர்கள்)

1. இவ்வுலகில் உள்ள உயிரினங்களைச் சான்ருேர் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருக அறுவகையாகப் பகுத்துள்ளனர். புல், மரம் முதலியவை ஓரறிவுயிர்கள் ஆகும். புழுப்பூச்சிகள் ஈரறிவுயிர்களாம். செல், எறும்பு முதலியன மூவறிவுயிர்கள் ஆகும். தும்பி வண்டு முதலியவை நாலறிவுயிர்கள் என்றும், விலங்கினமும் புள்ளினமும் ஐயறிவுயிர்கள் என்றும் கூறப்படுகின்றன. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி களுக்கும் உரிய ஐந்து அறிவுகளுடன் நன்மை தீமை களைப் பகுத்துணரும் பகுத்தறிவும் வாய்க்கப்பெற்ற மாந்தர் ஆறறிவுயிர் எனப்பட்டனர். இத்தகைய பாகு பாடுகளை நாம் நம் முன்ஞேர்கள் இயற்றிய நூல்களில் காண்கின்ருேம். இக்காலத்தில் உயிர் நூல் அறிஞர்கள் உயிரினங்களின் தோற்றத்தைப் பற்றி ஆராய்ந்து அறிந்து கூறும் கருத்துக்களுக்கும், நம் முன்ஞேர் கூற்றுக்கும் நெருங்கிய தொடர்பு காணப் படுகின்றது.

2. உயிரினங்களின் வளர்ச்சி முறையில் நிகழ்ந்த மாறுதல்களினுலேதான் பல்வேறு வகையான உயிர்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளன. அவற்றின் தோற்றத் தைப் பற்றி உயிர் நூல் வல்லார்கள் கண்டறிந்த விந்தைச் செய்திகளை இங்குக் காண்போம்.

3. பூமியானது சூரியனிடமிருந்து சிதறிப் பிரிந்து தனித்துச் சுழலத் தொடங்கிய தீயுருண்டை என்பது அறிஞர் கருத்து. அங்ஙனம் ஞாயிற்றிலிருந்து தெரித்துச் சிதறிய பூமி முற்காலத்தில் மிகவும் வெப்பம் பொருந்தியதாய் இருந்தது. இதனைச் சுற்றிலும் வெப்பம் பொருந்திய காற்றுச் செறிந்திருந்தது. ஆகையால் முதன் முதலில் பூமியின் மீது எந்த உயிரினமும் வாழ்ந்திருக்க முடியாது.

4. கதிரவனிலிருந்து பூமி தோன்றியது போன்று பூமியின் ஒரு பகுதி சிதறிச் சந்திரன் ஆயிற்று. பூமி குளிர்ச்சி அடைவதற்கு நெடுங்காலம் ஆயிற்று. அதன் மேற்பாகம் மட்டுமே குளிர்ந்து காணப்படுகின்றது. அதன் உட்பாகம் இப்பொழுதும் வெப்பம் பொருந்தியே விளங்குகின்றது. பூமியின் நடுவில் இன்னும் நெருப்புக் குழம்பு இருக்கின்றது. சிற்சில சமயங்களில் எரிமலைகள் வாயிலாக இத் தீ வெளிப்படுகின்றது.

5. பூமி குளர்ச்சியடைந்து, அதனைச் சுற்றியிருந்த காற்று மண்டலமும் குளர்ச்சியடைந்தது. எனவே நீராவி குளிர்ந்து பெருமழை பொழிந்தது. இங்ஙனம் இடைவிடாது பெய்த மழையினால் பூமியின் மேல் உள்ள பள்ளங்கள் யாவும் நிறைந்து பெரிய கடல்களாயின. இதன் பின்னரே பூமியில் உயிரினங்கள் வாழ வாய்ப்பு ஏற்பட்டது.

6. பூமியானது குளிர்ச்சியடைந்து நெடுங்காலம் கழிந்த பின்னரே உயிரினங்கள் தோன்றத் தலைப்பட்டன. முதன் முதலில் எலும்பு, ஓடு முதலியன இல்லாத ஒரு வகை மீன்கள் தோன்றின. அவை பஞ்சு போன்று மிகவும் மென்மையாய் இருந்தன. இதன் பின்னர் முதுகெலும்பு உள்ள உயிரினங்கள்

தோன்றின. அவையும் நீரிலேயே வாழ்ந்தன. பின்பு முதுகெலும்பு உள்ள அப்பிராணிகளிலிருந்து மீனினங்கள் தோன்றி நீரில் வாழ்ந்தன. மீன்கள் தோன்றிய காலத்தில் பூமியின் மீது எப்பக்கத்திலும் சதுப்பு நிலங்கள் மிகுதியாகக் காணப்பட்டன. நீரில் வாழ்ந்த உயிரினங்களுக்கு முன்னங்கால்களும், பின்னங் கால்களும் முளைத்தன. அவ்வுயிரினங்களில் உறுதியான தோலைப் பொருந்தியவை நிலத்தில் ஏறி வாழத் தொடங்கின. அவை தவளை, முதலை முதலியன ஆகும். அவை நீரிலும் நிலத்திலும் வாழக்கூடிய ஆற்றல் படைத்தவை.

7. பின்னர் மிகப்பெரிய பாம்புகளும், பல்லிகளும், முதலைகளும் பூமியின் மீது தோன்றின. நாளடைவில் உலகில் ஏற்பட்ட தட்ப வெப்பநிலை மாறுதல்களால் அவ்வுயிரினங்கள் மறைந்தொழிந்தன. அதன் பின்னர்க் குட்டி போட்டுப் போல் கொடுக்கும் விலங்கினங்கள் தோன்றின; பறவைகளும் தோன்றின. அந்நாளில் இவ்வுயிரினங்கள் மிகப் பெரியவைகளாய் இருந்தன. பல்லாண்டுகளுக்குப் பின்னர், பேருருவம் படைத்த விலங்குகளும் பறவைகளும் மறைந்தன. இவ்வாறு கோடிக்கணக்கான ஆண்டுகளாய் உயிர்கள் வளர்ச்சி யடைந்து, இறுதியில் மனித இனம் தோன்றியது. மனிதன் குரங்கின் வழியில் தோன்றியவன் என்பது அறிஞர் கருத்தாகும்.

8. முன் காலத்தில் மனிதன் குரங்கைவிடச் சிறிது உயர்ந்த நிலையில் இருந்திருப்பான். பின்னர் அவன் நாளடைவில் நாகரிகத்தில் வளர்ச்சியுற்றான்; தன் வாழ்விற்குத் தேவையான எல்லாப் பொருள் களையும் தேடிக் கொண்டான்; இன்று உலகம்

வியக்கும் பல அரிய செயல்களைச் செய்து கொண்டு வாழ்ந்து வருகிறான். பிற உயிர்களைக் காட்டிலும், உரம் பெற்றவனாய் மனிதன் விளங்குகிறான்.

9. மாணவர்களே, உலகமும் உயிரினங்களும் தோன்றிய விந்தையை உணர்ந்தீர்கள் அல்லவா? 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது!' என்றார் ஔவையார். பெறுதற்கரிய மக்கட் பிறவியைப் பெற்றுள்ள நாம், அப்பிறவியின் பயனை நன்கு உணர்தல் வேண்டும். சிறிய உயிரினங்கள் படிப்படியாக அடைந்த மாற்றத்தினாலே தான் நாம் தோன்றி யுள்ளோம் என்பதனை மறத்தலாகாது. பிற உயிர் களுக்குத் துன்பம் செய்யலாகாது. "எத்துணையும் பேதம் உறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணு கின்ற சான்றோர்களின் உள்ளமே இறைவன் அமரும் திருக் கோயில்," எனக் கூறினார் இராமலிங்க அடிகள். எனவே, எவ்வுயிருக்கும் தீங்கு செய்யாது வாழும் நன்னெறியை நாம் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

## அருஞ்சொற்பொருள்:

ஈறாக—முடிவாக, பகுத்து—பிரித்து, கூற்று—சொல், ஞாயிறு—சூரியன், தட்ப வெப்ப நிலை—சீதோஷ்ண நிலை, பேருருவம் — பெரிய உருவம், உரம் — வலிமை, மானிடர்—மனிதர், எத்துணையும்—எந்த அளவும், பேதம் உறாது—வேறுபாடு அடையாது, சான்றோர்—உயர்ந்த பெரியோர், நன்னெறி—நல்லவழி, கடைப்பிடித்து—பின்பற்றி.

## வினாக்கள்:

1. உயிரினங்களை நம் முன்னோர் எவ்வாறு வகைப் படுத்தியுள்ளனர்?

2. பூமி எவ்வாறு தோன்றியது?

3. கடல்கள் எவ்வாறு உண்டாயின?

4. உலகில் முதன் முதலில் தோன்றிய உயிரினங்கள் யாவை ?

5. நீரிலும் நிலத்திலும் வாழக் கூடியவை எவை?

6. பெரிய உருவம் படைத்த உயிரினங்கள் அழிவுற்றது எதனுல்?

7. மனிதன் தோற்றத்தைப் பற்றி அறிஞர் கருத்து யாது?

8. மனிதன் எவ்வாறு முன்னேற்றம் அடைந்தான்?

9. நாம் பிறவுயிர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

## பயிற்சி:

1. **வாக்கியங்களில் பயன்படுத்துக:—**

நெருங்கிய, வெப்பம், சிற்சில, சமயங்களில், நெடுங்காலமாக, எப்பக்கத்திலும், கோடிக்கணக்கான, நாளடைவில்.

2. **எதிர்ப் பதங்கள் எழுதுக:—**

வெப்பம், முன்னோர், சிற்சில, பேருருவம், சிறிது, அரிய, நாகரிகம்.

3. **பிரித்து எழுதுக:—**

சிற்சில, பேருருவம், எப்பக்கம், பெறுதற்கரிய, மக்கட்பிறவி, தம்முயிர், நன்னெறி.

4. உங்கள் ஊரில் உள்ள பொருட்காட்சிச் சாலைக்குச் சென்று அங்கு வைக்கப்பட்ட பழங்கால உயிரினங்களின் எலும்புக் கூடுகளைக் கவனியுங்கள்.

## இலக்கணம்

'அவ்வுயிரினங்களில் உறுதியான தோலைப் பொருந்தி யவை நிலத்தில் ஏறி வாழத் தொடங்கின';—இச்சொற் ருெடரில் 'நிலத்தில் ஏறி வாழத் தொடங்கின' என்ற சொற்களைக் கவனியுங்கள். நிலத்தில் ஏறி வாலத் தொடங் கின'—என எழுதினுல் பொருள் சிதைவு ஏற்படும் அல்லவா? ஆதலால், சொல்லின் பொருளுணர்ந்து ஓசையைத் தெரிந்து எழுத்துக்களை எழுதுதல் நலம்.

பெரும்பாலும் 'ல, ள, ழ, ,ன, ண, ந, ர, ற' என்னும் எழுத்துக்களை உபயோகிப்பதில் மாணவர்கள்' பிழை செய்கின்ருர்கள். இவ்வெழுத்துக்கள் வரும் இடங்களில் கவனமாய்ப் பயிலுதல் வேண்டும்.

கீழ் வருபவைகளில் ஒத்த எழுத்துக்களை அமைத்து முடிக்க :—

ம—பெய்கிறது—ழை,லை
த—ப் பட்டன } ளா, லை
த—இட்டான் }

எ—ணுகி—ற சா—ரோர்களின் உ—ளமே இ—வன் இ—ப்பிடம், பாம்புக்குத் தவ—, இ—(ன், ண், ல், ள், று, ரு, லை, ளா, றை, ரை).

---

# 2. நானிலம்

(வித்துவான் பு. செல்வராசனுர் அவர்கள்)

1, உலகில் உள்ள பழமையான நாகரிகம் வாய்ந்த நாடுகளுள் ஒன்ருய் விளங்கும் சிறப்பினை யுடையது நமது பாரத நாடு. பாரத நாட்டுப் பண்டைய மக்கள், நெடுங்காலத்திற்கு முன்பே நாகரிகத்தில் நனி சிறந்து விளங்கிய எகிப்து, உரோமாபுரி, கிரீஸ் முதலிய அயல் நாடுகளுடன் தொடர்பு கொண்டு வாணிகம் புரிந்து வந்தார்கள் என்பது வரலாறு அறிவிக்கும் உண்மையாகும். ஆயிரக்கணக்கான கல் தொலேவுக்கு அப்பால் இருந்த அயல் நாட்டினர் பலரையும் ஈர்க்கும் இயல்பினையுடையதாய் இந்தியா விளங்கியதற்குக் காரணங்கள் அதனுடைய சிறந்த வளமும், பழமையான நாகரிகமுமே என்பதில் ஐயமில்லே.

2. இவ்வாறு வளத்திலும் நாகரிகத்திலும் சிறந்து விளங்கிய இந்தியாவிலும், குறிப்பாகத் தமிழகமே பழமையான நாகரிகத்திற்குப் பிறப்பிடம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். அஃது எவ்வாறு இருப்பினும், தமிழகம் தலேசிறந்த நாகரிகம் பொருந்தியது என்பதை எவரும் மறுக்க இயலாது. தமிழகத்தின் தோற்றத்தைக் குறித்தோ, அல்லது தமிழரின் தோற்றத்தைக் குறித்தோ, நாம் கால வரையறை செய்து கூற இயலாது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளே

தமிழின் சிறப்பைக் குறிப்பிடும்போது

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத்
துடைக்கினும் ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்"

என்று கூறி, தமிழ் மொழியானது, பலவகையான உயிர்க் கூட்டங்களையும், பல உலகங்களையும் உண்டாக்கியும் காத்தும் அழித்தும் வருகின்ற பரம்பொருளாகிய இறைவனுக்கு நிகரானது எனக் குறிப்பிடுகிறார். அவ்வாறே செந்தமிழ் நாட்டின் தோற்றத்தைப் பற்றிய செய்திகளும் அறிஞருடைய சிந்தனைக்கு எட்டாத நிலையிலேதான் இருக்கின்றன. புறப்பொருள் வெண்பா மாலையின் ஆசிரியரான ஐயன் ஆரிதனார் என்னும் புலவர், தமிழ்க் குடியின் தொன்மையைக் குறிப்பிடும்போது, 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த குடி' எனக் கூறினார். இதிலிருந்து தமிழகத்தின் தொன்மையும், தமிழருடைய தொன்மை நிலையும் விளங்குகின்றன.

3. இக்காலத்தில் தமிழ் மொழியில் உள்ள மிகவும் பழமையான நூல் தொல்காப்பியம் ஆகும். அது ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் என்னும் புலவர் பெருமானாரால் ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப்பட்டது. அந் நூலிலிருந்து நாம் பண்டைத் தமிழருடைய நாகரிக முறைகளை அறிந்து கொள்ளலாம். தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த தமிழர் சிறந்த பண்பாடு உடையவராய் விளங்கினர் என்பதற்கு, அவர்கள் அமைத்துக்கொண்ட நிலப் பாகுபாடுகளே சான்றாய் விளங்குகின்றன. அம் மக்கள் நிலத்தின்

இயல்பினை நன்கு அறிந்து அதனை நான்கு வகை களாகப் பிரித்தார்கள். அவற்றுள் ஒவ்வொன்றிலும் வாழும் உயிரினங்கள், தோன்றும் தாவரங்கள், மக்களின் இயல்பு முதலியவற்றை அவர்கள் நன்கு அறிந்திருந் தார்கள். அவர்கள் கண்டறிந்த நால்வகை நிலப் பாகுபாடுகள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். இத்தகைய நான்கு வகையான நிலங் களைக் கொண்டு இவ்வுலகம் அமைந்திருப்பதால், இதனைப் பண்டைப் பெரியோர்கள் 'நானிலம்' என்று குறிப்பிட்டார்கள். இனி நம் செந்தமிழ் நாட்டினர் கண்டறிந்த நான்கு வகையான நிலங்களைப் பற்றிக் காண்போம்.

4. குறிஞ்சி: பண்டைத் தமிழர், மலையையும் மலைப் பகுதிகளையும் சார்ந்த இடத்தைக் குறிஞ்சி நிலம் எனக் குறிப்பிட்டனர். இந்நிலம் இயற்கை எழில் களுக்கு இருப்பிடமாய் இலங்கும் இயல்பினையுடையது. இந்நிலப் பகுதியில் வாழ்ந்து வந்த மக்களில் ஆடவர் குறவர் எனவும், பெண்டிர் குறத்தியர் எனவும் குறிக்கப் பட்டனர். குறவர் மலைச் சரிவுகளில் தினையும் மலை நெல்லும் பயிர் செய்து வந்தனர்; மலையினிடத்தில் இயற்கையாகத் தோன்றிய பொருள்கள் பலவற்றைத் தமக்குப் பயன்படுத்திக் கொண்டனர். அவர்கள், அங்கு தேனீக்கள் அரிதின் முயன்று சேர்த்து வைத்த தேன் அடைகளை அழித்துத் தேனை எடுத்தும், மலைப் பகுதியில் விளையும் வள்ளிக் கிழங்கை அகழ்ந்து எடுத்தும், தங்கள் வாழ்க்கையைச் செம்மையாக

நடத்தி வந்தார்கள். அவர்களுக்கு மலையை அடுத்து அடர்ந்து வளர்ந்துள்ள தேக்கு, சந்தனம், கருங்காலி முதலிய மரவகைகளும் பயன்பட்டன. குறிஞ்சி நில மக்கள் ஏலம், இலவங்கம், அகில் என்னும் மணப் பொருள்களையும் மலைப் பகுதியிலிருந்து பெற்று, அவற்றை விற்றுப் பொருளீட்டினார்கள். இந்நிலப் பகுதியில் வாழும் விலங்குகள் புலி, யானை, கரடி முதலியனவாகும். மயிலும் கிளியும் இங்குக் காணப் படும் புள்ளினங்கள் ஆகும்.

5. குறிஞ்சி நிலத்தினர் முருகனைத் தம் தெய்வ மாகக் கருதி வணங்கி வந்தனர். முருகு என்னும் சொல்லுக்கு அழகு என்பது பொருள் ஆகும். இயற்கைச் சூழ்நிலையில் வாழ்ந்து இயற்கையோடு ஒன்றிவிட்ட குறவர், தமது தெய்வத்தையும் எழில் மிக்க உருவில் அமைத்து வழிபாடு செய்தனர். அவர்கள் செம்மறியாட்டுக் கிடாயை வெட்டி, அதன் குருதி கலந்த செந்நிறச் சோற்றைத் தங்கள் கடவுளாகிய முருகனுக்குப் படைத்து, பறை கொட்டி ஆர்ப்பரித்து ஆடவரும் பெண்டிருமாகக் கூத்தாடுவார்கள். இளமை யும் எழிலும் பொருந்திய குறவன் ஒருவன் வேலனைப் போல வேடம் தரித்து ஆவேசம் கொண்டவன் போல ஆடுவான். மற்றைய மக்கள் அவ்வேலனுக்குச் சிறப்புக்கள் பலவும் செய்வார்கள். இது வெறியாட்டு எனப்படும். இந்நிலத்தின் எழில் நலங்களை இனிமை யாகப் பாடுவதில் சிறந்தவர் கபிலர் என்னும் புலவர் ஆவர். அவரால் பாடப்பட்ட பல செய்யுள்களில், குறிஞ்சி நிலத்தைப் பற்றிய வருணனைகள் அமைந்

துள்ளன. 'குறிஞ்சிப் பாட்டு' என்னும் ஒரு நூலையும் அவர் எழுதியுள்ளார்.

6. முல்லை : முல்லைக் கொடிகள் செழித்து வளரும் காடும் காட்டைச் சார்ந்த பகுதியும் முல்லை எனப்படும். இங்கு வாழ்ந்து வந்த ஆடவர் ஆயர் அல்லது இடையர் எனவும், பெண்டிர் ஆய்ச்சியர் அல்லது இடைச்சியர் எனவும் கூறப்பட்டனர். ஆயர்கள் இந்நிலத்தில் சில இடங்களில் வரகு, சாமை, சோளம் முதலியவற்றைப் பயிரிட்டு வந்தார்கள். ஆநிரைகளைப் பாதுகாத்து, அவை தரும் பாலையும், பாலினின்று பெறப்படும் தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகிய வற்றையும் விற்றுப் பெறும் செல்வத்தையே ஆயர்கள் சிறந்ததாகக் கருதினார்கள். இந்நிலப் பகுதிகளில் வளரும் மரங்கள் கொன்றை, காயா, குருந்தம் முதலியன. ஆவும், முயலும், கோழியும் இங்குக் காணப்படும் உயிரினங்கள் ஆகும். இந்நிலத்தில் ஆயர்கள் இல்லங்களை அமைத்துக் கொண்ட பகுதிகள் பாடி என்றும் சேரி என்றும் கூறப்பட்டன. ஆயர் மாயோன் எனப்படும் திருமாலைத் தம் கடவுளாகக் கருதி வணங்கினர். அவர்கள் தங்களைப் போலவே தங்கள் கடவுளும் இம்மண்ணுலகில் கண்ணனாக மனிதப் பிறவியெடுத்து, ஆநிரைகளை மேய்த்து, மக்கட்கு அருள் புரிந்ததாகக் கருதினார்கள். ஆய்ச்சியர் பலர் ஒன்று கூடிக் கண்ணனுடைய பெருமைகளைக் கூறித் தம்முடைய கைகளைக் கோத்துக் கொண்டு வட்டமாய் நின்று கூத்தாடி மகிழ்வர். இது குரவைக் கூத்து எனப்படும். இந்நிலத்தைப் பற்றியும் இங்கு வாழும் மக்களைப் பற்றியும் பண்டைக் காலத்தில்

வாழ்ந்த புலவர் பலர் புகழ்ந்து கொண்டாடியுள்ளனர். அவர்களில் சிறந்தவர்கள் நப்பூதனுர், நல்லுருத்திரனுர் என்பவர் ஆவர். 'முல்லைப் பாட்டு' என்ற நூலை நப்பூதனுர் எழுதியுள்ளார்.

7. மருதம்: வயலும் வயலைச் சார்ந்து விளங்கும் இடமும் மருத நிலம் ஆகும். இந்நிலம் உயிரினங்கள் யாவற்றிற்கும் உணவளித்துக் காக்கும் பயிர்த் தொழிலுக்கு இருப்பிடமாய் அமைந்தது. இது நில வள நீர் வளங்களில் செழித்து விளங்கும் பகுதியாகும். மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலைப் புரிந்தமையால், உழவர், உழத்தியர் எனக் கூறப் பட்டனர். மருத நிலம் வானளாவிய மரங்களைக் கொண்ட சோலைகளையும், அழகிய தோப்புக்களையும், செந்நெல்லும் வெண்ணெல்லும் காய்த்துக் குலுங்கும் வயல்களையும், வற்ருத நீரோடைகளையும், இனிய கரும்புத் தோட்டங்களையும் கொண்டு விளங்கும்.

8. இந்நிலத்து மக்கள் தங்கள் உழவுத் தொழில் செம்மையாக நடைபெறுவதற்கு மழையைப் பொழியும் மேகத்திற்குத் தலைவனுன இந்திரனைக் கடவுளாக வழிபட்டார்கள்; ஆண்டு தோறும் இந்திரனுக்கு விழாக் கொண்டாடினுர்கள். இந்திர விழாக் கொண்டாடப்பட்ட செய்தி சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் காணப்படுகிறது. இந்நிலத்தின் இயல்பை விளக்கிக் கூறும் பல பாடல்கள் பழந்தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. மருத நிலத்தைச்

சிறப்பித்துப் பாடிய புலவர்களுட் சிறந்தவர் மருதன் இளநாகனுர், ஓரம்போகியோர் என்போர் ஆவர்.

9. நெய்தல்: கடலும் கடலைச் சார்ந்துள்ள இடமும் நெய்தல் எனப்படும். இந்நிலத்தில் வாழ்ந் தோர் பரதவர் என்னும் ஆடவரும், பரத்தியர் என்னும் பெண்டிரும் ஆவர். இம்மாந்தர் கடற்கரையை அடுத்து அமைந்துள்ள பட்டினம், பாக்கம் என்னும் இடங்களில் உறைந்து, கட்டு மரங்களையும் கலங்களையும் கடலிற் செலுத்தி மீன்களைப் பிடிப்பர்; அவற்றிற்கு உப்பிட்டு வெயிலில் உலர்த்துவர்; உலர்ந்த மீனை விற்றுத் தமக்கு வேண்டிய பொருள் களைப் பெற்றுக்கொள்வர். இந்நிலத்தில் புன்னை மரங்களும், தாழைச் செடிகளும் காணப்படும். முதலையும், சுருவும், கடற்காகமும் இங்கு வாழும் உயிரினங்கள் ஆகும்.

10. இந்நிலத்தினர் கடல் தெய்வமாகிய வருணனைத் தம் கடவுளாகக் கருதினர்; வெள்ளிய மணற்பரப்பைக் கொண்ட கடல் துறையில் சுரு மீனின் கொம்பை நட்டு வருணனை வழிபட்டனர். இந்நிலத்தைப் பற்றி நல்லந்துவனுர், அம்மூவனுர் என்ற புலவர் இருவர் புகழ்ந்து பாடியுள்ளனர்.

11. இந்நால்வகை நிலங்களேயன்றி, பாலை எனப்படும் ஒரு நிலப்பிரிவும் பண்டைக் காலத்தில் இருந்தது. அது தனிப்பட்ட ஒரு நிலம் அன்று.

குறிஞ்சியும் முல்லையும் தமது வளத்தில் குறைந்து, வறண்ட நிலையை அடையும்போது பாலையாக மாறுவதால், அறிஞர் அதனை உலகின் இயற்கைப் பிரிவுகளில் ஒன்றாகச் சேர்க்காமல், நானிலம் என்றே குறிப்பிட்டனர்.

12. மேற்கூறப்பட்ட நால்வகை நிலங்களிலும் வாழ்ந்துவந்த மக்கள் அவ்வந்நிலங்களின் விளை பொருள்களைப் பிற பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குக் கொடுத்தும், அவர்களிடமிருந்து தங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுக்கொண்டும் ஒற்றுமை உடையவர்களாய் விளங்கினார்கள். இந்நானிலங்களைப் பற்றிய செய்திகளை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் சங்க நூல்களில் விரிவாகக் காணலாம்.

## அருஞ்சொற்பொருள்

நனி—மிகவும், ஈர்க்கும்-இழுக்கும், வரையறை-எல்லை வகுத்தல், அளித்து-காத்து, துடைக்கினும்-அழிப்பினும், பரம்பொருள் - மேலான பொருள் (கடவுள்), தொன்மை - பழமை, ஒல்கா-குறையாத, பாகுபாடு-பிரிவு, தாவரங்கள் - மரம் செடிகொடிகள், நானிலம்-நான்கு வகையான நிலங்கள், அகழ்ந்து-தோண்டி, புள்ளினம்-பறவைக் கூட்டம், குருதி-இரத்தம்.

## பயிற்சி

**விடை எழுதுக:**

1. தமிழ்நாட்டின் தொன்மையை நாம் எவ்வாறு அறியலாம்?

2. தொல்காப்பியம் எவ்வாறு பழந்தமிழர் நாகரிகத்திற்குச் சான்றாய் விளங்குகிறது?

3. 'நானிலம்' என்பன யாவை?

4. குறிஞ்சி நிலத்தின் இயல்பை எழுதுக.

5. அந்நிலத்தினர் எக்கடவுளை எவ்வாறு வணங்கினர்?

6. முல்லை நிலத்து மக்களின் இயல்புகளைக் குறிப்பிடுக.

7. 'குரவைக் கூத்து' என்பது யாது?

8. மருத நிலத்தின் இயல்பை விளக்குக.

9. நெய்தல் நிலத்தினர் வாழ்க்கை முறையை எழுதுக.

10. சிறு குறிப்பு எழுதுக:— முருகு, வெறியாட்டு, குரவைக் கூத்து, பாக்கம், வருணன், இந்திர விழா.

## இலக்கணம்

### (சொற்றொடர்)

'சொற்றொடர்' என்பது என்ன? சொற்கள் பல தொடர்ந்து பொருள் தருவது சொற்றொடர் ஆகும். சொற்றொடர்கள் பொருள் தருவதற்கு இரண்டு உறுப்புக்கள் தேவை. ஒன்று எழுவாய்; மற்றொன்று பயனிலை. இவை இரண்டும் சொற்றொடருக்கு மிகவும் இன்றியமையாதவை.

எழுவாய் பெயர்ச் சொல்லாகவே இருக்கும். பயனிலை பெரும்பாலும் வினைச் சொல்லாகவும், சிறுபான்மை பெயர்ச் சொல்லாகவும், வினாவாகவும் வரும்.

'தொல்காப்பியர் இலக்கண நூல் எழுதினார்',—இதில் தொல்காப்பியர் - எழுவாய், எழுதினார் - பயனிலை.

'திருப்பாவை முப்பது பாசுரங்களைக் கொண்டது',— இச்சொற்றொடரில் உள்ள எழுவாய் பயனிலைகளைக் குறிப்பிடுக.

பயனிலை மட்டும் இருந்து எழுவாய் மறைந்து வருவதும் உண்டு. 'முதல்' முதலில் தோன்றியவை படி, கொடு, வா, போ என்பன. இவை போல்வன சில கூறுக.

---

# 3. மார்கழி விழா

திரு. த. சே. உமாபதியவர்கள், M. A., L. T.

1. பண்டு முதல் இன்றளவும் தமிழர்களால் கொண்டாடப்பட்டு வரும் விழாக்களுள் மார்கழி விழாவும் ஒன்று. சங்க நூல்களில் மார்கழி விழாப் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால், இவ்விழாத் தொன்று தொட்டுத் தமிழகத்தில் வழக்கில் இருந்து வருகிறதென்பது தெளிவாம்.

2. இக்காலத்தில் மார்கழி விழா, சைவ வைணவ சமயச் சார்புடையதாகக் காணப்படினும், இச்சமயப் பெரியார்கள் தோன்றுவதற்கு முன்னரே அது வழக்கி லிருந்தது என்பது தெரிகிறது. எனினும், இன்று இவ்விரு சமயத்தாராலும் இவ்விழாச் சிறப்பாக மேற் கொள்ளப்பட்டு வருகிறது. இவ்விழா முதலில் தமிழ் மகளிரால் பெரிதும் போற்றப்பட்டு வந்ததெனினும், இப்போது அனைவராலும் சிறப்பாகக் கொண்டாடப் வருகிறது.

3. மணிவாசகப் பெருமான் அருளிய திருவெம் பாவையும் ஆண்டாள் அருளிய திருப்பாவையும் இவ் விழாவைப் பற்றிய விவரங்களை விளக்குகின்றன. திருவெம்பாவை என்பது இருபது பாடல்கள் கொண் டது. அது திருவாசகத்தின் ஒரு பகுதியாகும். திருப் பாவை என்பது முப்பது பாசுரங்களைக் கொண்டது. அது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தந்தில், முதலாயிரம் என்னும் பகுப்பில் அடங்கிய ஒரு தனிப் பகுதியாகும்.

4. கன்னியர் கருத்துக்கிசைந்த கணவரை அடைய வேண்டியும், நாட்டு வளங் குன்றிவிட்டால் மழை பெய்ய வேண்டியும் மார்கழி மாதம் முழுவதும் இவ்விழாவைக் கொண்டாடினர். இவ்விழாவில் ஈடு படும் கன்னியர் வைகறையில் துயில் எழுவர். அவ் வாறு எழுந்தவர் துயிலெழாத கன்னியர் பிறரையும் அவரவர் இல்லம் சென்று துயில் எழச் செய்வர். பிறகு அனைவரும் திரளாக நீர்த்துறையை அடைந்து நீராடுவர்; பின்னர் இறைவியின் திருவுருவத்தை வணங்கித் தத்தம் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கு மாறு வழிபடுவர்.

5. இவ்வண்ணம் இறைவியின் திருவுருவமாகிய பாவையை வழிபடும் விழாவாதல் பற்றியே, இவ் விழாவை அறிவிக்கும் நூல்கள் திருப்பாவை, திருவெம் பாவை என்னும் பெயர்களால் வழங்கலாயின. பாவை என்பது இறைவியின் உருவச் சிலையைக் குறிக்கும் பெயராகும்.

6. திருவெம்பாவை, திருப்பாவை, என்பவை தமிழ் நூல்களுள் மிகுதொன்மை வாய்ந்த இலக்கண நூலாகிய தொல்காப்பியப் பொருளதிகார உரையில் 'பாவைப் பாட்டு' என்னும் பெயருடன் வழங்கப்பட்ட பிரபந்த வகையைச் சேர்ந்தவையேயாகும். திருவெம் பாவையில் உள்ள ஒவ்வொரு பாடலும் திருப்பாவைப் பாடல்களைப் போலவே 'எம்பாவாய்' என்றே முடியும். இரு நூல்களும் பல செய்திகளில் ஒற்றுமை பெற்று விளங்குகின்றன. திருவெம்பாவை சிவனையும், திருப்பாவை திருமாலையும் குறிப்பனவெனினும், மற்றவற்றில் பொது நோக்குடையவையாய் இருக் கின்றன.

7. அருகரை வழிபடும் சமணரும், புத்தரை வழிபடும் பௌத்தரும் தாம் வழிபடும் கடவுளை வணங்கிப் பாவை விழாக் கொண்டாடும் வழக்கம் பண்டை நாளில் இருந்ததென்பது யாப்பெருங்கலம் என்னும் செய்யுள் இலக்கண நூலின் இறுதிச் சூத்திர உரையில் காணப்படும் ஒரு செய்யுளிலிருந்து அறியப் படுகிறது. எட்டுத் தொகை நூல்களுள் ஒன்ருன பரிபாடலில் ஆசிரியர் நல்லந்துவனுர் இவ்விழாவினை விளக்கியுள்ளார். அதனுல், கன்னிப் பெண்கள் ஆற்றங்கரையில் மார்கழித் திங்களில் அன்ருடம் நீராடி விழாவாற்றும் வழக்கம் சங்க காலத்திலேயே உண்டு என்பது நன்கு விளங்குகிறது. மார்கழித் திங்களில் மதி நிறைந்த நன்ஞளில் இவ் விழாத் தொடங்குகிறது. அந்த மாத இறுதியில் முடிவடைகிறது.

8. மழை வளத்தை நாடியும் மனத்திற் கிசைந்த மணவாளனை வேண்டியும் இறைவியைக் தொழுவதற் காகக் கன்னியரால் தொடங்கப்பட்ட இவ்விழா, பிற் காலத்தில் மறுமை இன்பம் வேண்டி அடியார்களால் இறைவனைக் குறித்துப் பாடப்படும் நூலளவில் நிற்க லாயிற்று. இன்று கன்னிப் பெண்கள் இதனைக் கடைப்பிடிக்கவில்லை எனினும், சைவ வைணவத் தொண்டர்கள் இதை மார்கழி மாதந்தோறும் கடைப் பிடித்து வருகிருர்கள். வைணவ அடியார் திருப்பாவை யின் முப்பது பாசுரங்களையும் மார்கழி மாதம் முப்பது நாளும் நாளொன்றுக்கு ஒரு பாசுரமாக ஓதுவர். சைவ அடியார் திருவாதிரைக்குப் பத்து நாட்கள் முன் தொடங்கித் திருவாதிரை வரை திருவெம்பாவையின் பாடல்களைப் பாடி முடிப்பார்.

9. முற்காலத்தவர் இவ்விழாவிற்குரிய நாள் திருவாதிரையே எனக் கொண்டிருந்தனர். பிற்காலத் தவர் இதனை மார்கழி மாதம் முழுவதும் கொண்டாடும் விழாவாக அமைத்துக் கொண்டனர். தமிழ் மாணவ மாணவியர் மார்கழி மாதக் குளிருக்கு அஞ்சி அதிகாலை யில் எழுந்து விழாக் கொண்டாடாவிடினும், சிறந்த கருத்துக்கள் அமைந்த திருவெம்பாவை, திருப்பாவை நூல்களைப் படித்து இன்புறலாம்.

## அருஞ்சொற்பொருள்:

பண்டு முதல் - முற்காலத்திலிருந்து, இன்றளவும்- இன்று வரையில், சைவர் - சிவபெருமானைக் கடவுளாக வணங்குபவர், வைணவர்-திருமாலைத் தெய்வமாக வழிபடு பவர், சமயச் சார்பு-மதத் தொடர்பு, மணிவாசகப் பெருமான் - சைவ மதத்தை வளர்த்த நான்கு பெரியார் களுள் ஒருவர், பாசுரம் - பாடல், பகுப்பு-பிரிவு, கருத்துக்கு இசைந்த - மனதிற்குப் பிடித்த, வைகறை - விடியற்காலம், துயில்-தூக்கம், கன்னியர்-மணம் ஆகாத பெண்டிர், திரள்- கூட்டம், இறைவி-தலைவி (பெண் தெய்வம்) பாவை- பதுமை, தொன்மை-பழமை, திங்கள்-மாதம், மதி-சந்தரன, இறுதி-முடிவு.

## பயிற்சி

I. விடை எழுதுக:

1. மார்கழி விழாவின் தொன்மையை விளக்குக.

2. இவ்விழாவைப் பற்றி அறிவிக்கும் நூல்கள் யாவை?

3. மார்கழி விழா எதன் பொருட்டுத் தோன்றியது?

4. இவ்விழாக் கொண்டாடப்படும் முறைகளை எழுதுக.

5. பாவை வழிபாடு சமணரிடம் காணப்பட்டது என்பதை எவ்வாறு அறியலாம்?

6. மார்கழி விழா இக்காலத்தில் கொண்டாடப்படும் முறையை எழுதுக.

II. கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. திருப்பாவை—இயற்றியது.

2. ஆண்டாள் அருளிய — நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் உள்ளது.

3. பரிபாடலின் ஆசிரியர்——

4. முற்காலத்தில் மார்கழி விழாவிற்கு உரிய நாள்—— ஆய் விளங்கியது.

III. எதிர்ப் பதங்களை இணைத்து எழுதுக :—

ஒற்றுமை, பொது, பிற்காலம், மறுமை, இன்புறுதல், போற்றப்படுதல்.

முற்காலம், துன்புறுதல், தூற்றப்படுதல், இம்மை, வேற்றுமை, சிறப்பு.

IV. வாக்கியங்களில் பயன்படுத்துக :—

தொன்று தொட்டு, சிறப்பாக, திரளாக, வழிபாடு, கடைப்பிடித்தல், கொண்டாடும்.

## இலக்கணம்:

(சுட்டுப் பெயர்)

அது திருவாசகத்தின் ஒரு பகுதி.
அம்மாதம் முழுவதும் இவ்விழாக் கொண்டாடப்படும்.
இது முப்பது பாசுரங்களைக் கொண்டது.

இவற்றில் உள்ள அது, அம்மாதம், இது, இவ்விழா என்னும் சொற்களைக் கவனி. அவை பொருள்களைச் சுட்டிக் காட்டும் பெயர்களாய் விளங்குவதால் சுட்டுப் பெயர்கள் ஆகும். அவற்றின் முதலில் உள்ள அ, இ என்பன சுட்டெழுத்துக்கள்.

உ என்னும் சுட்டெழுத்து ஒன்றும் உண்டு. அது செய்யுளில் வரும்.

அது, இது—இச்சொற்களில் உள்ள சுட்டெழுத்துக் களைப் பிரித்தால், பொருள் இராது. இவ்வாறு வருபவை அகச் சுட்டுக்களாகும்.

அவ்விழா, இம்மாதம்—இவற்றில் உள்ள சுட்டெழுத் துக்களைப் பிரித்தாலும், பொருள் தரும். இவ்வாறு வருபவை புறச்சுட்டுக்களாகும்.

அகச்சுட்டு, புறச்சுட்டுக்களுக்கு இப்பாடத்திலிருந்து மும்மூன்று எடுத்துக் காட்டுக்கள் தருக.

---

# 4. பிம்பிசாரரும் புத்தரும்

திரு. வி. சேஷகிரியவர்கள், M. A., B. T.

## முதற் காட்சி

இடம் : மகத நாட்டில் உள்ள ஒரு காட்டுப் பகுதி.

காலம் : நடுப்பகல்.

நடிகர் : கௌதம புத்தர், இடையர்கள்.

[கௌதம புத்தர் காட்டில் உள்ள ஒரு மரத்தடியில் அமர்ந் திருக்கிருர். இடையர்கள் அவ்வழியே ஆடுகளை ஓட்டிக் கொண்டு செல்கின்றனர்.]

கௌதம புத்தர்: (தமக்குள்) என்னே உலகின் இயற்கை! எங்கு நோக்கினும் துன்பமா! இவ்வுலக வாழ்வில் இன்பத்திற்கு இடமில்லையா! உலகில் பிறந்த உயிர்கள் அனைத்தும் துன்பத்திலிருந்து மீளுவதற்கு வழியே இல்லையா! எங்கும் நிறைந்து யாவும் அறிந்து விளங்கும் பரம்பொருளே! அறியாமையில் உழன்று அல்லலுறும் மக்களுக்கு அறிவொளி வழங்க நீ அருள் புரியமாட்டாயா? (இடையர்களும் ஆடுகளும் செல் வதைக் கண்டு) அதோ இடையர் சிலர் பெருங் கூட்ட மாக ஆடுகளை ஓட்டிச் செல்கின்றனரே! ஐயோ! அவர் களுக்கு எள்ளளவும் இரக்கமில்லையே! ஏன் அவர்கள் அவற்றை அடித்து வேகமாக விரட்டிச் செல்கிருர்கள். வாயில்லாப் பிராணிகளாகிய அவற்றைக் காப்பாற்று வதற்கு என்னுல் இயன்ற வரையில் முயன்று பார்க் கிறேன்.

(புத்தர் எழுந்து ஆடுகளின் அருகே செல்கின்ருர்.)

ஓர் இடையர் : (மற்ருேர் இடையரை நோக்கி) அண்ணே, பாடலிபுரம் இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது ? இந்த ஆடுகள் நடக்க முடியாமல் வருந்துகின்றன. அதோ பார், அச்செம்மறியாட்டுக் குட்டியை ! அந்த நொண்டிக்குட்டி நடக்க முடியாமல் கத்துகின்றது.

மற்றவர் : தம்பீ, பாடலிபுரம் இன்னும் ஒரு காத தூரந்தான் இருக்கிறது. நாம் பொழுது சாய்வதற்குள் அங்குப் போய் விட வேண்டும். அல்லாவிட்டால், அரசர் நம்மைத் தண்டிப்பது நிச்சயம். ஆடுகளை அடித்துத் துரத்து. வேகமாகச் செல்வோம்.

(இடையர் நொண்டி ஆட்டுக்குட்டியை அடித்துத் துரத்துகின்றனர். அது நடக்க முடியாமல் கதறுகிறது. அதன் தாய் ஆடு கலங்குகிறது).

கௌதம புத்தர் : (அதைக் கண்டு மிகவும் வருந்தி) அந்தோ! அந்த ஆட்டுக்குட்டியை அடித்துத் துரத்துகிருர்களே! அது நடக்க முடியாமல் கதறுவதைக் கண்டு அதன் தாய் கலங்கி நிற்கின்றதே! ஆ! அவ்வாட்டுக் குட்டியின் காலிலிருந்து குருதி சொட்டுகிறதே !

(புத்தர் அந்த ஆட்டுக்குட்டியின் அருகிற் சென்று அதனைத் தம் தோளில் சுமந்து கொள்கின்ருர்).

இடையர்கள் : (புத்தரின் செயலைக் கண்டு) ஐயா, நீர் யார் ? ஏன் எங்கள் ஆட்டுக்குட்டியை உம் தோளில் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறீர் ?

கௌதம புத்தர் : (நகைப்புடன் அன்பர்களே, அஞ்ச வேண்டா, நான் உங்கள் ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் செல்வதற்கு வந்த கள்வன் அல்லேன்; பற்றற்ற ஒரு துறவி. இந்த ஆட்டுக்குட்டி நடக்க முடியாமல் வருந்திய காட்சி என் உள்ளத்தை உருக்கியது. ஆகையாலேதான் இதைத் தோளில் தூக்கிக் கொண்டேன்.

இடையர்கள் : (வியப்புடன்) இந்த அற்ப ஆட்டுக்குட்டியின் மீது உங்களுக்கு இவ்வளவு இரக்கமா !

கௌதம புத்தர் : அன்பர்களே, ஆட்டுக்குட்டி அற்பமானதா ? அதுவும் நம்மைப் போன்ற ஓர் உயிரினந்தானே ? உங்களை எவரேனும் அடித்துத் துன்புறுத்தினால் உங்கள் உடல் வருத்தம் அடையாதா? அதுபோலவே நீங்கள் ஆட்டுக்குட்டியை அடித்தால் அதற்கு வலிக்காமல் இருக்குமா ? நீங்கள் வாயற்ற பிராணியாகிய அதை வதைப்பது நீதியாகுமோ ? இனி இவ்வாறு எந்த உயிரினத்திற்கும் இடையூறு செய்யாதீர்கள். பிற உயிர்களை வதைத்து அதன் மூலம் தன் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக் கொள்ளுதல் இழிந்தோர் இயல்பு. அது இருக்கட்டும். நீங்கள் இந்த ஆடுகளை ஓட்டிக் கொண்டு எங்கே போகிறீர்கள் ?

இடையர்கள் : ஐயா, பெரியவரே, நீங்கள் கூறியவை யாவும் உண்மையென உணர்ந்து கொண்டோம். எங்கள் அறியாமையைப் போக்கிய

அண்ணலே, நாங்கள் நாளைக் காலையில் இந்த ஆடுகளை மகதநாட்டு மன்னர் பிம்பிசாரருடைய அரண்மனையில் சேர்க்க வேண்டும். இவற்றை யெல்லாம் அவர் யாகத்தில் பலியிடப் போகிருர். உங்களுடைய அறிவுரையைக் கேட்ட எங்களுக்கு ஆடுகளை வருத்த மனமில்லை. ஆனுலும், என்ன செய்வது! மன்னர் ஆணையை மறுத்தால் மரண தண்டனையன்ருே கிடைக்கும்?

கௌதம புத்தர்: ஆ! என்ன சொன்னீர்கள்? யாகமா? அதற்கு இந்த ஆடுகளைப் பலியிட வேண்டுமா? ஆயிரக்கணக்கான இந்த ஆடுகளின் உயிரைப் போக்கி, இவற்றின் குருதியைச் சொரிந்து செய்யப்படும் யாகத்தையா மன்னர் பிம்பிசாரர் விரும்புகிருர்? நினைக்கவும் நெஞ்சம் நடுங்குகிறதே! எத்தனை உயிர்கள் நாளை யாகத்தின் பெயரால் பலியாகப் போகின்றன! அன்பர்களே, நீங்கள் எதற்கும் அஞ்சவேண்டா. வாருங்கள் உங்களுடன் நானும் வருகிறேன். மன்னரைக் கண்டு பேசுவோம்.

(கௌதம புத்தரும் மற்றையோரும் செல்கின்றனர்)

## இரண்டாம் காட்சி

இடம்: பாடலிபுரத்தில் மன்னருடைய யாகசாலை.

காலம்: மாலை நேரம்.

நடிகர்: கௌதம புத்தர், மன்னர் பிம்பிசாரர், யாகம் நடத்தும் புரோகிதர், அமைச்சர் முதலியோர்.

**பிம்பிசாரர்:** (அமைச்சரை நோக்கி) அமைச்சரே, யாகத்திற்கு உரிய ஏற்பாடுகள் யாவும் செய்யப்பட்டு விட்டனவா? பலியிடுவதற்கு வேண்டிய ஆடுகள் யாவும் வந்து சேர்ந்து விட்டனவா?

**அமைச்சர்:** அரசர் பெருமானுரே, யாகத்திற்கு உரிய ஏற்பாடுகள் யாவும் செய்யப் படுகின்றன. நீங்கள் யாகத்தை இப்போதே தடையின்றித் தொடங்கலாம்.

**புரோகிதர்:** (அரசரிடம்) மன்னரே, யாகத்தைத் தொடங்குவதற்கு உரிய நல்ல வேளை பொருந்தியிருக்கிறது. ஆகவே, நாம் அதைத் தொடங்குவோம்,

**கௌதம புத்தர்:** மன்னர் பெருமானுரே, நிறுத்துங்கள் இந்த யாகத்தை!

**பிம்பிசாரர்:** (சினத்துடன்) யார் ஐயா நீர்? இந்த யாகத்தை நிறுத்தும்படி எமக்கு ஆணையிடுவதற்கு உமக்கு என்ன உரிமை?

**கௌதம புத்தர்:** அரசே, என்மீது கோபங் கொள்ள வேண்டா. நான் ஒரு துறவி. இவ்வுலகில் எவருக்கும் ஆணையிட உரிமையில்லை. நீங்கள் செய்யப் போகும் இந்த யாகத்தின் கொடுமையை உங்களுக்கு உணர்த்தவே நான் இங்கு வந்தேன்.

**பிம்பிசாரர்:** (நகைத்துக்கொண்டு) ஓ! அப்படியா! யாகம் செய்வது கொடுஞ் செயலா? நாட்டின் நன்மைக்காக நான் செய்யும் இந்த யாகத்தைக் கொடுமையானது என்று கூறுகின்ற உங்கள்

கூற்றைக் கேட்க எனக்கு நகைப்புத்தான் தோன்றுகிறது!

கௌதம புத்தர்: மன்னரே, நகைப்புத் தோன்றுவது இயல்பே! ஆயினும், யான் கூறுவதைப் பொறுமையுடன் கேளும். நெஞ்சில் சிறிதும் இரக்கமின்றி, ஆயிரக்கணக்கான ஆடுகளைக் கொன்று செய்யப்படும் யாகத்தைக் கொடுஞ் செயல் என்று கூருது வேறு எவ்விதம் கூறுவது?

பிம்பிசாரர் : ஐயா, பெரியவரே, யாகத்தில் உயிர்ப்பலி கொடுத்தல் வேண்டுமென்ற முறை இருக்கும் போது, அது எவ்வாறு கொடுஞ் செயலாகும்?

கௌதம புத்தர்: அரசர் பெருமானுரே, நான் கூறுவதை நன்ருகக் கேட்டுச் சிந்தித்துப் பாருங்கள் : யாகத்தை எதன் பொருட்டுச் செய்கிறீர்கள்? நாடும் மக்களும் நலமுற்றுத் திகழ வேண்டும் என்ற நல்ல எண்ணத்தினுல் அல்லவா? அதன் மூலம் இறைவனை திருப்தி செய்ய வேண்டும் என்பதுதானே உங்கள் நோக்கம்? அந்நோக்கம் நிறைவேற, நீங்கள் யாகம் என்னும் பெயரால் செய்யும் இக் கொடுஞ் செயல் எவ்வாறு துணை புரியும்? கள்ளமற்ற ஆடுகளைக் கொன்று குவித்து, ஆற்றுப் பெருக்கைப் போல இரத்த வெள்ளத்தை ஓடச்செய்து செய்யப்படுகின்ற யாகத்தையா இறைவர் விரும்புகிருர்? இத்தகைய யாகங்களினுல் பாவச்செயல்கள் பெருகுமேயன்றி, உங்களுக்கு எவ்வித நன்மையும் உண்டாகாது. இறைவர் தாம்

படைத்த உயிர்களைப் பிறர் அழிப்பதை விரும்புவாரா என்பதைச் சிந்தித்துப் பாரும். உயிரை அழித்தால் அதை ஆக்கும் சக்தி இறைவருக்கு உண்டு. உமக்கு உண்டா என்பதை எண்ணிப் பாரும். எனவே, மிகவும் கொடிய யாகத்தைச் செய்து வீண் பழியைத் தேடிக் கொள்ளாதீர்கள்.

பிம்பிசாரர் : ஐயா, இதுவரை உண்மையை உணராமல் அறியாமைச் செயல்கள் பலவற்றைப் புரிந்துவிட்டேன் ! இனிமேல் இத்தகைய கொடுஞ் செயல்கள் என் நாட்டில் நடைபெறுவதற்கு இடங் கொடேன். இன்று முதல் பிற உயிருக்குத் துன்பம் செய்யாமையே எனது குறிக்கோள்! அஃதிருக்கட்டும். என்னை இப்பாவச் செயலினின்று விடுவித்த நீங்கள் யார் என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

கௌதம புத்தர் : (மகிழ்வுடன்) மன்னர் பிம்பி சாரரே, நீர் நீடூழி வாழ்க! மகதம் மங்காச் சிறப்புடன் ஓங்குக! என் முதல் முயற்சி வெற்றி பெற்றது. என் பெயர் கௌதம புத்தன். போய் வருகிறேன்.

பிம்பிசாரர் : (உடனே எழுந்து புத்தரின் காலில் விழுந்து வணங்குகிறுர்). கருணைக்கடலே, உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளேன். உங்களை நேரிற் கண்டது எனது பாக்கியம்! உண்மையிலேயே யான் செய்யத் தொடங்கிய யாகம் இனிது நிறைவேறிய நன்னுள் இது. நீங்கள் எங்கும் செல்லக்கூடாது.

என்னுடன் இருந்து என் நாட்டு மக்களுக்கு உங்கள் அருள் உரைகளைப் பகர்ந்து அவர்களை நல்வழிப்படுத்த வேண்டுகிறேன்.

## அருஞ்சொற்பொருள்

அல்லல்-துன்பம், இயன்றவரையில்-முடிந்த மட்டும், குருதி-இரத்தம், காதம்-பத்துமைல் தூரம், அஞ்சவேண்டா -பயப்படவேண்டா, அற்பம்-இழிவு, எள் அளவும்-சிறிதளவும், வதைத்து-துன்புறுத்தி, இடையூறு-துன்பம், ஆணை-கட்டளை, நகைத்தல்-சிரித்தல், திகழ-விளங்க.

## பயிற்சி

**I. விடை எழுதுக;**

1. புத்தர் இடையர்களுக்குக் கூறிய அறிவுரைகள் யாவை?

2. இடையர்கள் புத்தருக்குக் கூறியவற்றை எழுதுக.

3. புத்தர், மன்னர் பிம்பிசாரருக்கு உயிர்ப்பலியின் கொடுமையை எவ்வாறு உணர்த்தினர்?

4. உயிர்ப்பலியின் கொடுமையை உணர்ந்த மன்னர் யாது செய்தார்?

**II. இடம் சுட்டுக:**

(அ) ஐயோ! அவர்களுக்கு எள்ளளவும் இரக்கமில்லையா?

(ஆ) ஆட்டுக்குட்டி மட்டும் அற்பமானதா?

(இ) யாகம் செய்வது கொடுஞ்செயலா?

**III. வாக்கியங்களில் பயன்படுத்துக:—**

இயன்றவரையில், வேகமாக, இடையூறு, தடையின்றி, நலமுற்று, எவ்விதமான, குறிக்கோள்.

## இலக்கணம்

### (வினு)

உலக வாழ்வில் இன்பத்துக்கு இடமில்லையா?

ஏன் அவர்கள் ஆடுகளை அடித்து விரட்டிச் செல்கிருர்கள்?

பாடலிபுரம் எவ்வளவு தூரம் இருக்கிறது?

ஐயா! நீர் யார்?

உங்களுக்கு இவ்வளவு இரக்கமோ?

மேலே காட்டப்பட்டுள்ள சொற்ருெடர்களைக் கவனியுங்கள். இவை வினுப்பொருளைத் தருகின்றன அல்லவா? இவைகளில் வினுப் பொருள்களைத் தருவன எவை என்பதைக் கவனித்தீர்களா?

இடமில்லையா? ஏன்? எவ்வளவு? யார்? இரக்கமோ?— இவைகளே வினுப் பொருளைத் தருகின்றன. ஆ, ஏ, எ, யா, ஓ-இவ்வெழுத்துக்கள் சொற்ருெடர்களில் சேர்ந்து வினுப் பொருளைத் தரும்.

வினு அகவினு, புற வினு என இருவகைப்படும்.

அகவினு சொல்லுக்கு அகத்தே இருந்து வினுவுவது. 'ஏன்?' என்பதிலிருந்து 'ஏ' என்னும் எழுத்தைப் பிரிக்க முடியாது. இச் சொல்லில் பிரிக்க முடியாதபடி நிற்பது 'ஏ' என்னும் வினு எழுத்து. அது 'அகவினு' எனப்படும். புற வினுவில் உள்ள வினு எழுத்தைப் பிரித்து விட்டால் பொருள் கெடாது; ஆனல், வினுவாக இராது. வினு எழுத்துச் சொல்லுக்கு வெளியே நின்று வினுப் பொருளேத் தருமாயின், புற வினு எனப்படும். இரக்கமோ, எவ்வீடு— இவைகளைப் பிரித்தால், இரக்கம்+ஓ, எ+வீடு என அமையும். இவற்றில் வினு எழுத்துக்களை அகற்றி விட்டால் பெயர்ச் சொல் மட்டும் இருக்கும்.

ஏ, யா என்னும் இரு வினவெழுத்துக்களும் மொழிக்கு முதலில் மட்டும் வரும்.

எவன்? யார்?

ஆ, ஓ என்னும் வினவெழுத்துக்கள் மொழிக்குக் கடைசியில் மட்டும் வரும்.

கண்ணனு? கண்ணன் + ஆ. இராமனே? இராமன் + ஓ.

'ஏ' என்னும் வின எழுத்து மட்டும் மொழிக்கு முதலிலும் கடைசியிலும் வரும்.

ஏவன்? அவனே? அவன் + ஏ.

வின எழுத்துக்கள் மொத்தம் ஐந்து. அவை: ஏ, யா, ஆ, ஓ, ஏ என்பன.

இப்பாடப் பகுதியிலிருந்து அகவின புறவினக்களுக்குத் தனித்தனி நான்கு எடுத்துக்காட்டுகள் தருக.

---

# 5. உலகிற்கு உணவு அளிப்பவர்

திரு. வி. சேஷகிரியவர்கள், (M. A., B. T.,)

உயிர்களை வருத்துகின்ற பிணிகள் பலவற்றுள்ளும் மிகக் கொடியது பசிப்பிணியாகும். 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்பது பழமொழி. இத்தகைய கொடிய பசி நோய்க்கு மருந்து உணவாகும். உணவு இன்றேல், உலகில் உயிரினங்கள் வாழ இயலாது. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாய் விளங்குகின்ற பொருள்களை விளைவித்துக் கொடுக்கின்ற உழவர்களை

உலகிற்கு உணவு அளிப்பவர் என்று கூறுவது முற்றிலும் பொருத்தமேயன்றோ?

2. உழவுத் தொழில் உலகில் உள்ள தொழில்கள் யாவற்றினும் உயரிய தொழில் என்பதும், அத்தொழில் புரியும் உழவர்கள் பிற தொழில் புரிபவரினும் உயர்ந்தவர்கள் என்பதும் அறிஞர்களின் கருத்தாகும்.

3. இத்தகைய பெருஞ் சிறப்புடைய உழவர் பண்டை நாளில் பெரிதும் சிறப்புற்றிருந்தனர். நாடாளும் வேந்தர் முதல் காட்டில் வேட்டையாடும் வேடர் ஈருக அனைவரும் உழவர்களின் சிறப்புணர்ந்து போற்றினர். பண்டைக்கால மன்னர் உழவுத்தொழில் செம்மையாக நடைபெறுவதற்குரிய வசதிகளையெல்லாம் செய்து கொடுத்தனர். நிலவளத்தையும் நீர்வளத்தையும் பெருக்கினர். நாட்டில் மழை வளம் குறைந்த காலத்திலும், பஞ்சம் நிலவும் காலத்திலும் நிலவரியைத் தள்ளுபடி செய்து உழவரின் துயரைப் போக்கினர். இவ்வாறு அனைவராலும் போற்றப்படும் உழவுத் தொழில் நடைபெறும் முறைகளைக் கவனிப்போம்.

4. உழவர்கள் நிலத்தின் இயல்பையும் நிலத்திற்கு உரமிடும் முறைகளையும் நன்றாக அறிந்திருப்பார்கள். ‘பருவத்தே பயிர் செய்’ என்னும் பழமொழியினை நன்கு அறிந்த அவர்கள், கால நிலைக்கு ஏற்றவாறு தொழில் புரிவார்கள். அவர்களிடம் உழு தொழிலுக்குத் தேவையான கருவிகள் நிறைந்திருக்கும். அவர்கள் தங்கள் தொழிலுக்கு உறுதுணையாய் இருக்கும் எருதுகளைச்

செம்மையாகப் பாதுகாத்து வருவார்கள். விதைப் பதற்குத் தேவையான முற்றிய விதைகளைச் சேமித்து வைத்திருப்பார்கள். உழுதலும் உரமிடுதலும் பயிர்த் தொழிலுக்கு இன்றியமையாதனவாகும். எனவே, உழவர்கள் நிலத்தை அழமாக உழுவார்கள். நன்ருக உழுத பின்னர் ஆடு மாடுகளின் சாணம், தழைகள் முதலிய இயற்கை உரங்களையும், எலும்புத்தூள், உப்புச்சத்து முதலிய செயற்கை உரங்களையும் நிலங் களின் இயல்பிற்குத் தகுந்தவாறு இடுவார்கள். பிறகு அவர்கள் நிலங்களுக்கு நீர் பாய்ச்சிப் பரம்பு அடித்து விதை விதைப்பார்கள். விதைகளை விதைக்காமல் நாற்று விட்டு நடுவதும் உண்டு. சேற்றில் விதைகளை விதைத்து நாற்றுகளை வளர்த்து, அவற்றைப் பிடுங்கி, பருவம் அறிந்து உழுது பண்படுத்தப்பட்ட நிலத்தில் நட்டுப் பயிராக்குவார்கள்.

5. இவ்வாறு நடப்பட்ட பயிர்கள் வளரத் தொடங்கும்போது, நிலமானது காய்ந்து விடாமல் அடிக்கடி நீர் பாய்ச்சுதல் வேண்டும். மேலும் ஆடு மாடுகள் நிலத்திற் புகுந்து பயிர்களைச் சேதம் செய்யாத வாறு பாதுகாக்க வேண்டும். இப்பணிகளில் உழவர்கள் சோர்வின்றி ஈடுபட்டாற்ருன் பட்ட பாட்டிற்குப் பலன் கிடைக்கும். அவர்களிடம் சோம்பல் குடி கொண்டால், அவர்கள் வாழ்க்கை சீர்குலைந்துவிடும். பயிர்த் தொழிலில் ஆர்வமும் விடாமுயற்சியும் கொண்ட உழவர்கள், பயிர்களுடன் முளைத்து அவற்றின் வளர்ச்சிக்குத் தடையாய் இருக்கும் களைகளைப் பிடுங்கி எறிந்து பயிர்களைப் பாதுகாப்பார்கள்.

6. உழவர்கள் கதிர்கள் நன்ருக முற்றியதும் நீர் பாய்ச்சுவதை நிறுத்திவிட்டு, நிலத்தை நன்ருகக் காய

விடுவார்கள். அதன் பின்னர் அவர்கள் அறுவடை செய்வார்கள். அறுவடை செய்யப்பட்ட கதிர்களைக் கட்டுகளாகக் கட்டி ஓரிடத்திற் சேர்ப்பார்கள். பின்னர்த் தாள்களை அடித்துத் தானிய மணிகளையும் வைக்கோலையும் பிரிப்பார்கள். தானியங்களை மூட்டைகளாகக் கட்டித் தங்கள் இல்லங்களுக்குக் கொண்டு செல்வார்கள்.

7. இத்தகைய உழவர்களின் நிலை நமது நாட்டில் பல காரணங்களால் தாழ்ச்சியுற்றது. நாடு இன்று உணவுப் பொருள்களுக்கு அயல்நாடுகளை எதிர்பார்க்கும் நிலையை அடைந்துள்ளது. உழவுத் தொழிலை உலகிற்குக் கற்பித்த உயரிய நாடு, இன்று உணவுப் பொருள்களுக்கு அமெரிக்கா, ரஷ்யா முதலிய அயல் நாடுகளை எதிர்நோக்கி வாழும் நிலை வருந்துதற்குரியதாகும். இத்தகைய இழிந்த நிலைக்குக் காரணம் உழவர் தம்முடைய தொழிலில் அக்கறை கொள்ளாமையே ஆகும்.

8. உழவுத் தொழிலின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்த நம் அரசியலார், இந்நாளில் உழவர் தம் நிலையைச் சீர்படுத்தப் பல முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். வேளாண்மைத்துறை அலுவலகங்களை நாடெங்கும் நிறுவியுள்ளார்கள். அவற்றில் பணிபுரியும் அலுவலர், உழவர்களுக்குப் புதிய முறையில் பயிரிடும் விதங்களைக் கற்றுத் தருகின்றனர். உழவுத் தொழிலுக்குத் தேவையான இயந்திரக் கலப்பைகள், உரங்கள் முதலியவற்றைக் கொடுத்து உதவுகின்றனர். விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் உழவர்களுக்குக் குறைந்த வட்டிக்கு கடன் கொடுத்து உதவுகின்றன. மேலும், நம் அரசியலார் வேளாண்மையின் வளர்ச்சிக்கெனப் பல திட்டங்களை வகுத்துப் பெரும் பொருளைச் செலவிட்டு வருகின்றனர். நீர்ப்பாசனத்திற்குத் தேவையான நீரை

வழங்குவதற்காக அணைக்கட்டுகள் பலவற்றைக் கட்டி நீரைத் தேக்கியுள்ளனர், மேலும் பல அணைக்கட்டுகளை மூன்றும் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் அமைக்க இருக்கின்றனர். இவற்றுடன் நம் அரசியலார் உழவர்களுக்கு ஊக்க மூட்டும் பொருட்டுப் பரிசுத்திட்டங்களையும் ஏற்படுத்தியுள்ளனர். அத் திட்டங்களின்படி சிறந்த முறையில் பயிரிட்டு நிறைந்த விளைச்சல் உண்டாக்கும் உழவர்களுக்குப் பரிசுகள் வழங்குகின்றனர். இத்தகைய பல முறைகளில் நமது அரசாங்கம் உழவுத் தொழிலின் முன்னேற்றத்திற்குப் பாடுபடுகின்றது. நமது நாட்டு உழவர்களும் அரசியலாரின் ஆதரவைப் பெற்று, உழவுத் தொழிலில் உயர்வு பெற வேண்டும். உணவுப் பொருள்களுக்குப் பிற நாடுகளை எதிர்பாக்கும் அவல நிலையை ஒழிக்க அவர்கள் பாடுபட வேண்டும்.

## அருஞ்சொற்பொருள்:

பிணி-நோய், விழுப்பம்-மேன்மை, புணை-தெப்பம், மாண் எழில்-சிறந்த அழகு, உண்டி-உணவு, பழுது-குற்றம், தொழுது ஊண்-பிறரை வணங்கி உண்ணும் உணவு, உரம்-எரு, அவல நிலை-துன்ப நிலை.

## வினாக்கள்

1. உழவர்கள் பண்டைநாளில் எவ்வாறு சிறப்புப் பெற்றார்கள் ?

2. உழவர்கள் எவ்வாறு நிலத்தைப் பண்படுத்துவார்கள் ?

3. இந்நாளில் உழவுத் தொழில் சீர்குலைந்ததற்குக் காரணங்கள் யாவை ?

4. நம் அரசியலார் உழவுத் தொழிலின் முன்னேற்றத்திற்கு எவ்வாறு உதவுகின்றனர்?

## பயிற்சி

**1. வாக்கியங்களில் பயன்படுத்துக :—**

முற்றிலும், தள்ளுபடி, பலன், எதிர்நோக்கி, அக்கறை.

**2. எதிர்ச் சொற்களை எழுதுக :—**

கொடியது, தாழ்ச்சி, சிற்றூர், நிறைவு.

## இலக்கணம்

### (உயிர்மெய் வகை—குறில், நெடில்)

சென்ற வகுப்பில் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு என்றும், அவை ஓசையால் இரு வகைப்படும் என்றும் தெரிந்துள்ளீர்கள். குறுகிய ஓசையை உடையது குறில் என்றும், நீண்ட ஒலியை உடையது நெடில் என்றும் பெயர் பெறும் அல்லவா ? குறில் ஐந்து எனவும், நெடில் ஏழு எனவும் அறிந்தீர்கள். இவ்வகுப்பில் குறிலும், நெடிலும் மெய் எழுத்துக்கள் 18 உடன் சேர்ந்து வரும் தன்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

'மாடு கட்டி' என்பதில் மா-டு-க-ட்-டி என்ற ஐந்து எழுத்துக்களில் 'மா' என்பது இரண்டு எழுத்துக்களால் ஆனது. முதலில் மெய்யெழுத்து நிற்கும்; பிறகு உயிரெழுத்து வரும். உயிரும் மெய்யும் சேர்ந்து வரும் எழுத்துக்களை **உயிர்மெய்** என்று கூறலே மரபு.

**'மா'** என்னும் எழுத்து - ம் + ஆ = மா — **உயிர்மெய் நெடில்.**

**'டு'** என்னும் எழுத்து - ட் + உ = டு — **உயிர்மெய்க் குறில்.**

'க' என்னும் எழுத்து - க் + அ = க — உயிர்மெய்க் குறில்.

'ட்' என்னும் எழுத்து, மெய் எழுத்து.

மெய்எழுத்துப் புள்ளிபெற்று வரும் என்பது உங்களுக் குத் தெரியும்.

'டி' என்னும் எழுத்து - ட் + இ = டி — உயிர்மெய்க் குறில்.

---

# 6. வடநாட்டுப் புவியரசரும் தென்னாட்டுக் கவியரசரும்

(திரு. த. செ. உமாபதியவர்கள், M. A., L. T.)

1. பாவன்மையும் நாவன்மையும் படைத்த பாவலர்கள் சங்கத்தில் இருந்து தமிழ் ஆராய்ந்த சிறப்பினை உடையது பாண்டி நாடாகும். அப்பாண்டி நாட்டின் தென் பகுதில் பொருநையாற்றின் கரையில் ஸ்ரீவைகுண்டம் என்னும் தலம் ஒன்று உள்ளது. அத்தலத்திற்கு அண்மையில் திருக்கயிலாயபுரம என்னும் ஊர் அழகுற அமைந்துள்ளது. அச் சிற்றூரில் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து வந்த சண்முக சிகாமணி கவிராயருக்கும் சிவகாம சுந்தரியாருக்கும் அருமைப் புதல்வராய்க் குமரகுருபரர் தோன்றினர். இவர் ஐந்தாண்டுகள் நிரம்பப்பெற்றும் பேசாத மூங்கைப் பிள்ளையாய் இருந்ததை அறிந்த பெற்றோர் பெரிதும் வருந்தினர். அவர்கள் திருச்செந்தூர் முருகப்பெருமான் ஆலயத்திற்குக் குமரகுருபரரை அழைத்துச் சென்று, இறைவன் இன்னருளை வேண்டி வரங்கிடந்தார்கள். அன்பர் துயர் தீர்க்கும் அறுமுகன் திருவருளால் குமரகுருபரர் பேசும் திறன் பெற்றார். கந்தர் கலிவெண்பா என்னும் நூலை முருகன்மீது பாடினர்.

2. அந்நாள் முதல் குமரகுருபரர் பல நூல்களைப் பாடத் தொடங்கினர். இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றார். இவர் பல தலங்களுக்கும்

சென்று ஆங்காங்கு உள்ள இறைவன் திருக்கோலங் களைக் கண்டு மகிழ்ந்து, நூல்கள் பலவற்றைப் பாடி வந்தார். குமரகுருபரர் மதுரைக்கு வந்தபோது அங்கு ஆட்சி புரிந்துவந்த திருமலைநாயக்கர் என்ற மன்னர், வரவேற்றுச் சிறப்புச் செய்தார். புலவர் பெருமானார் மதுரையில் தங்கியிருந்தபோது மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம் ஆகிய நூல்களை இயற்றினார். சின்னாட்கள் களித்துக் குமரகுருபரர் திருமலை நாயக்கரிடம் விடை பெற்றுக்கொண்டு திருவாரூருக்குச் சென்றார். அங்குக் கோயில் கொண்டிருக்கும் தியாகராசர் மீது திருவாரூர் நான்மணிமாலை என்னும் நூலைப் பாடினார். பின்பு வைத்தீசுவரன் கோயிலுக்குச் சென்று, அங்கு வீற்றிருக்கும் முருகப் பெருமான் மீது முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் என்னும் நூலை இயற்றினார்.

3. இவ்வாறு தலந்தோறும் சென்று தமிழ்த் தொண்டாற்றிய புலவரின் உள்ளம் துறவு நிலையை நாடியது. இவர் தருமபுர மடத்தின் தலைவராய் விளங்கிய மாசிலாமணி தேசிகரைத் தம் குருவாகக் கொண்டு துறவியரானார். அவர் மீது பண்டார மும்மணிக் கோவை என்னும் நூலை இயற்றினார். மாசிலாமணி தேசிகரின் அருள் உள்ளம் குமர குருபரரைப் பெரிதும் விரும்பியது. வடநாட்டில் உள்ள காசியில் அறச்சாலை அமைத்துத் தமிழ்ப் பணியும் சைவப் பணியும் புரிய ஏற்பாடு செய்யவேண்டும் என்ற எண்ணம் தேசிகரின் உள்ளத்தில் நெடுநாட் களாய் நிலைபெற்றிருந்தது. தமது கருத்தை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பினை மேற்கொள்ளுதற்குரிய தகுதியும் ஆற்றலும் பெற்றவர் குமரகுருபரர் என்பதனை

அவர் அறிந்தார். தம் மாணுக்கரான குமரகுருபரரிடம் தமது விருப்பத்தைத் தெரிவித்தார். குமரகுருபரர் தம் ஞாஞசிரியரின் ஆணையை மேற்கொண்டு காசிக்குச் சென்ருர். அங்கு அறநிலேயம் அமைக்க இடமும் அரசரின் இசைவும் பெறவேண்டுமெனப் புலவர் விரும்பினுர்.

4. அந்நாளில் காசி நகரம் மொகலாயர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. தாஜ்மஹாலே அமைத்து இந்திய வரலாற்றில் அழியாப் புகழ் பெற்ற ஷாஜஹான் என்ற பேரரசர், அப்போது வடநாட்டை ஆண்டு வந்தார். அம்மன்னர் இந்துஸ்தானி மொழியிலேதான் பேசுவார். அவருடன் உரையாடுவதற்குக் குமரகுருபரர், இந்துஸ்தானியைக் கற்கத் தொடங்கி, அதனே எளிதில் கற்றுணர்ந்தார்.

5. பின்னர் ஒருநாள் குமரகுருபரர் அரசவைக்குச் சென்று, மன்னரைக் கண்டு, அவருடன் இந்துஸ்தானி மொழியில் தெளிவாகவும் இனிமையாகவும் உரையாடினுர். பேரரசர் ஷாஜஹான், தென்னுட்டுப் புலவர் ஒருவர் இந்துஸ்தானியில் திறம்படப் பேசுவதைக் கேட்கப் பெரிதும் மகிழ்ந்தார். அரசவையில் கூடியிருந்த புலவர் பலர் குமரகுருபரரிடம் பல விஞக்களே எழுப்பினர். புலவர் பெருமாஞர் அவற்றிற்கு அனேவரும் வியப்பு அடையுமாறு செம்மையாக விடையளித்தார். அவைப் புலவர்களுடன் பல துறைகளிலும் சொற்போர் நிகழ்த்தி வெற்றி பெற்ருர். மொகலாயப் பேரரசர் அவையில் முத்தமிழின் சிறப்பை முழங்கினுர். காசியில் அறச்சாலே அமைக்க இசைவு தரவேண்டுமென்னும் தமது விருப்பத்தைப் பேரரசரிடம் எடுத்துரைத்தார். ஷாஜஹான், புலவரின் திறமையை நன்கு உணர்ந்து,

காசியில் அறச்சாலை அமைக்க அனுமதியும் இடமும் கொடுத்து உதவினர்.

6. குமரகுருபரர் காசியில் அறச்சாலை ஒன்றை அமைத்தார். அங்கு நெடுநாள் தங்கியிருந்து தமிழின் பெருமையையும் சைவத்தின் சிறப்பையும் எங்கும் பரப்பினர். வடநாட்டினர் தமிழின் சிறப்பினை உணரும் படி செய்தார். தாம் நிறுவிய அறநிலையம் நன்கு வளர்ச்சியுற்று இடைவிடாமல் நடந்து வருவதற்காக நிதி திரட்டி வைத்தார். குமரகுருபரர் காசியில் வாழ்ந்த காலத்தில், விசுவநாதப் பெருமான் மீது **காசிக் கலம்பகம்** என்னும் நூலைப் பாடினர். இவ்வாறு வேற்று மொழி பயிலும் காசியில் தங்கித் தமிழ்த் தொண்டும் சைவத் தொண்டும் ஆற்றிவந்த குமரகுருபரர் அங்கேயே காலமானர். இவரால் காசியிலும் தமிழகத் திலும் நிறுவப்பட்ட அறநிலையங்கள் இன்றும் நின்று நிலவிப் பணிபுரிந்து வருகின்றன.

## அருஞ்சொற் பொருள்

உவக்குமாறு-மகிழும்படி, பிறழ்தல்-தவறுதல், பா வன்மை-பாடல் இயற்றும் திறமை, நா வன்மை-பேசும் திறமை, மூங்கை-ஊமை, இன்னருள்- இனிய கருணை, ஆணை-கட்டளை.

## பயிற்சி

**I. விடை கூறுக:—**

1. குமரகுருபரர் எங்குப் பிறந்தார்? அவர் பெற்றோர் யாவர்?

2. அவர் எவ்வாறு பேசும் திறன் பெற்றார்?

3. மதுரையில் அவர் பாடிய நூல்கள் யாவை?

4. குமரகுருபரர் எவ்வாறு துறவினுயார்?

5. மாசிலாமணி தேசிகரின் விருப்பம் யாது?

6. குமரகுருபரர் எவ்வாறு மொகலாயப் பேரரசரின் இசைவைப் பெற்ருர்?

7. வடநாட்டில் அவர் செய்த பணிகள் யாவை?

II. எதிர்ச் சொற்கள் எழுதுக:—

1. உவப்பு, பெருமை, தெளிவு, புகழ்ச்சி, எளிதில், வினு, பேரரசர்.

## இலக்கணப் பயிற்சி

### (உயிர்மெய் வகை—வலி-மெலி-இடை)

கபிலர் என்ற புலவர் பெருமானுர் குறிஞ்சிப் பாட்டைப் பாடினுர்'—இச்சொற்ருெடரைக் கவனியுங்கள். 'கபிலர்' என்றசொல் எத்தனை எழுத்துக்கள் கொண்டது என்பதைக் கூறுங்கள்.

மெய் எழுத்துக்கள் 18. மெய் எழுத்துக்களை ஓசை வகையால், மூன்ருகப் பிரித்துள்ளார்கள் அவை எவை?

அவைகளை வல்லினம், மெல்லினம், இடையினம் என்போம். வல்லினம் ஆறு; மெல்லினம் ஆறு; இடையினம் ஆறு.

| | | |
|---|---|---|
| வல்லினம் | க், ச், ட், த், ப், ற் | ஆக மொத்தம் மெய் எழுத்துக்கள் 18 |
| மெல்லினம் | ங், ஞ், ண், ந், ம், ன் | |
| இடையினம் | ய், ர், ல், வ், ழ், ள் | |

### பயிற்சி

கீழே வந்துள்ள சொற்றொடர்களிலுள்ள உயிர்மெய் வல்லினம், உயிர்மெய் மெல்லினம், உயிர்மெய் இடையினம் இவற்றை அட்டவணையில் அமைத்துக் காட்டுக:—

(அ) குமரகுருபரர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்தார்.

(ஆ) குமரகுருபரர் போன்ற அறிவுச் செல்வர் பலர் வாழ்ந்த சிறப்பினையுடையது நம் நாடு.

---

# 7. தமிழகத்தின் சிற்ப, ஓவியச் சிறப்பு

(புலவர் பா. முருகையனார் அவர்கள்)

1. 'எண்ணெண் கலைகள்' எனவும் 'ஆய கலைகள் அறுபத்து நான்கு' எனவும் நம் முன்னோர் கூறியிருப்பதிலிருந்து நம் நாட்டினர் கலைகளை அறுபத்து நான்கு வகைகளாகக் கொண்டிருந்தனர் என்பது தெரிய வருகிறது. இக்கலைகளுள் ஓவியமும் சிற்பமும் மக்களின் உள்ளத்தை எளிதில் கவர்ந்து இன்பமூட்டும் உயரிய கலைகள் ஆகும்.

2. ஓவியமும் சிற்பமும் உடன் பிறப்புக் கலைகள் எனக் கூறுவது முற்றிலும் பொருந்தும். ஓவியக் கலையில் தேர்ச்சி பெற்ற கலைஞன் தன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளையும் தான் காணும் காட்சிகளையும் தூரிகை கொண்டு திரைச் சீலையிலேனும் சுவரிலேனும் வரைகின்றான். அவ்வாறு அவனால் வரையப்படுவது சிறந்ததோர் ஓவியமாகக் காட்சியளிக்கின்றது. சிற்பக் கலையில் வல்லான் ஒருவன் தன் எண்ணங்களையும் தான் காணும் காட்சிகளையும் உளியைக் கொண்டு மரத்திலேனும், கல்லிலேனும் செதுக்குகிறான். இவ்வாறு சிற்பம் அமைகின்றது. சுருங்கக்கூறின், வரையப்படுவது ஓவியம்; செதுக்கப்படுவது சிற்பம் எனலாம். நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள இவ்விரு கலைகளும் பண்டை நாளில் நம் நாட்டில் மிகுந்த சிறப்பைப் பெற்றிருந்தன.

3. பழந் தமிழகத்தில் ஓவியக் கலை பெரிதும் போற்றப்பட்டது. ஓவியக் கலைஞர்களை மன்னர்களும், வள்ளல்களும் போற்றி வந்தார்கள். **புகார், மதுரை,** வஞ்சி போன்ற பெருநகரங்களில் சிறந்து விளங்கிய மாடமாளிகைகளிலும், மன்னர்களின் அரண்மனைகளிலும் சிறந்த ஓவியங்கள் தீட்டப் பெற்றிருந்தன என்னும் செய்தியை நாம் சங்க இலக்கியங்களாலும் **சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை** முதலிய காப்பியங்களினாலும் நன்கு உணரலாம். இவ்வாறே சிற்பக் கலையையும் பண்டைத் தமிழர் போற்றி வந்தனர். சிற்பக் கலையின் பழமைக்கு நமது நாட்டில் உள்ள பழமையான கோயில்களே தக்க சான்றாகும். மதுரை மீனாட்சியம்மன் கோயிலும், தில்லை நடராஜர்

திருக்கோயிலும் தமிழகத்தின் மிகப் பழமையான சிற்பி களின் கைத்திறனைப் பறைசாற்றிக் கொண்டிருக் கின்றன. அந்த ஆலயங்களில் உள்ள ஒவ்வொரு சிற்பமும் தன்னைச் செதுக்கிய சிற்பிகளின் ஆற்றலை விளக்கிக் காட்டுகின்றது.

4. இடைக்காலத்திலும் இவ்விரு கலைகளும் சிறப்புற்று விளங்கின. பல்லவ மன்னர் இவற்றைப் போற்றுவதில் பெரும் பங்கு கொண்டனர். மகேந்திர வர்ம பல்லவன் புதுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள சித்தன்ன வாசல் என்னும் மலையில் ஒரு மண்ட பத்தைக் குடைவித்து, அதில் பல ஓவியங்களைத் தீட்டச் செய்திருக்கிறான். அவ்வோவியங்கள் இன்னும் எழிலுற விளங்கிக் காண்போரின் உள்ளத்தையும் கண் களையும் கவர்கின்றன. அம்மன்னன் ஓவியக் கலையில் பெரிதும் ஆர்வம் கொண்டிருந்தான். அவனைப் போன்ற மற்றைய பல்லவ மன்னரும் இக்கலையைக் கண்ணுங் கருத்துமாகப் போற்றி வந்தனர்.

5. மகேந்திர வர்மனும் அவன் மைந்தனான நரசிம்ம வர்மனும் சிற்பக் கலையைப் பெரிதும் போற்றினார்கள். மாமல்லபுரத்தில் உள்ள புகழ் வாய்ந்த பஞ்ச பாண்டவ ரதங்கள், பாறைச் சிற்பங்கள் முதலியன இவர்கள் காலத்திலேதான் அமைக்கப் பட்டன. தமிழகத்தின் சிற்பக் கலைக்குச் சிகரமாய் விளங்கும் இச் சிற்பங்களை அயல் நாட்டினர் பலரும் கண்டு களித்துச் செல்கின்றனர். பின்வந்த பல்லவரும் சிற்பக் கலையைப் பெரிதும் போற்றி வளர்த்தனர்.

6. பல்லவர்களுக்குப் பிறகு தமிழகத்தில் சோழர் ஆட்சி சிறப்புற விளங்கியது. சோழ மன்னர்கள் இவ்விரு கலைகளையும் சிறந்த முறையில் போற்றினுர்கள். திக்கெட்டும் வெற்றிக்கொடி நாட்டிய இராச ராச சோழன் தன் தலைநகரான தஞ்சையில் **பிரகதீசுவரம்** என்னும் பெருங்கோயிலை அமைத்தான். சிற்பத்திறன் வாய்ந்த சிற்பியர் பலரும் ஓவியக் கலைஞர் பலரும் தஞ்சைப் பெருநகரில் கூடினர்; இரவு பகலாக இடை யருது உழைத்துக் கலைக்கோயில் ஒன்றை உருவாக் கினர். இக்கோயில் சிற்ப, ஓவியக் கலைகளின் சிறப் பிற்குச் சிறந்த சான்ருய் மிளிர்கின்றது. கோயிலின் உட்புறச் சுவரில் இராசராசன் காலத்தில் தீட்டப்பெற்ற ஓவியங்களை நாம் இன்றும் காணலாம். இராசராசன் தவ மைந்தனுன இராசேந்திரன், தான் கங்கைக் கரை வரையில் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றதற்கு அறிகுறியாகக் **கங்கை கொண்ட சோழபுரம்** என்னும் புதிய நகரை நிறுவினுன்; அதனைத் தன் தலைநகராகவும் அமைத்துக் கொண்டான். அப்பெரு வேந்தன் கங்கை கொண்ட சோழபுரத்தில் ஓர் ஆலயத்தைக் கட்டினுன். **கங்கை கொண்ட சோழீச்சரம்** என்னும் பெயர் கொண்ட அத் திருக் கோயிலும் சோழர் காலச் சிற்ப, ஓவியங்களின் சிறப்பை உணர்த்துகின்றது.

7. சோழருக்குப் பின்னர்த் தஞ்சையில் ஆட்சி புரிந்த மகாராட்டிர மன்னர்களும் இக் கலைகளை வளர்க்கப் பெரிதும் முயன்ருர்கள். தஞ்சையில் உள்ள **சரசுவதி மகால், கலியாண மகால்** முதலிய இடங் களில் அவர்கள் காலத்தில் தீட்டப்பட்ட வண்ண ஓவியங்கள் காட்சியளிக்கின்றன. இவ்வாறு பண்டு தொட்டுச் சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய தனிப் பெருங்கலைகள் நாளடைவில் சீர்குலையத் தொடங்கின.

தமிழ்நாட்டின் அரசியலில் குழப்பம் நேர்ந்தது. நிலையான அரசு இங்கு அமையவில்லை. ஆங்கிலேய ருக்கு அடிமைப்பட்ட பின்னர், தமிழகத்தின் பழங் கலைகள் பெருமையிழந்தன. இக்கலைகளுக்குப் பொது மக்களின் ஆதரவு இன்மையால், இவற்றைக் கற்பாரும் குறைந்தனர்.

8. கி. பி. பத்தொன்பதாம் நூற்ருண்டின் தொடக் கத்தில் ஓவியக்கலை புத்துயிர்பெறத் தொடங்கிற்று. மேனுட்டு ஓவியக்கலையின் முறைகளைக் கற்றறிந்து நம் நாட்டு ஓவியக் கலையை வளர்க்கும் பணியில் சிலர் ஈடுபட்டனர். அவர்களுள் தலைசிறந்தவர் இராஜா ரவிவர்மா ஆவர். அவர் திருவாங்கூரைச் சேர்ந்தவர். அவரால் தீட்டப் பெற்ற ஓவியங்கள் இந்நாளில் பெரிதும் சிறப்புற்று விளங்குகின்றன. இக்காலத்தில் ஓவியக் கலையின் சிறப்பினை மக்கள் உணரத் தொடங்கி யுள்ளார்கள். இக்கால மாணவர் பலர் ஓவியத் துறையில் பெரிதும் ஆர்வம் காட்டிக் கற்று வருகின்றனர். ஆனுல், இந்த அளவிற்குக்கூடச் சிற்பக்கலை இந்நாளில் சிறப்புருமல் மங்கிக் கிடக்கின்றது. கோயில் திருப்பணி களில் ஈடுபடும் சிலர் மட்டுமே இக்கலையில் திறமை பெற்றுள்ளனர். நாமும் நம் முன்னேர்களைப் போலவே இவ்விரு கலைகளையும் வளர்த்துப் பயன் பெற்று வாழ வேண்டும்.

## அருஞ்சொற்பொருள்:

தூரிகை—ஓவியந் தீட்டும் கோல், வினைஞர்—செயல் புரிபவர், அண்மையில்—அருகில், எழில் உற—அழகு பொருந்த, திக்கெட்டும்—எட்டுத் திசைகளிலும், சிற்பத் திறன்—சிற்பக் கலையின் திறமை, இடையருது—இடை விடாமல், பண்டு தொட்டு—பழங்காலம் தொடங்கி.

## வினுக்கள்:

1. சிற்பமும் ஓவியமும் எவ்வாறு தொடர்புடைய கலைகள் ஆகும் ?

2. சிற்பக் கலையைப் பண்டைத் தமிழர் எவ்வாறு பாதுகாத்தனர் ?

3. பல்லவர் எவ்வாறு ஓவியக் கலையை வளர்த்து வந்தனர் ?

4. நரசிம்ம வர்மன் எவ்வாறு சிற்பக் கலையைப் போற்றினுன் ?

5. இராசராசன் சிற்பக் கலைக்குச் செய்த தொண்டு யாது ?

6. கங்கைகொண்ட சோழீச்சரத்தின் சிறப்பை எழுதுக.

7. சிற்ப, ஓவியக் கலைகள் எவ்வாறு சீர்குலைந்தன ?

## பயிற்சி

1. **வாக்கியங்களில் அமைக்க :—**

உணர்ச்சி, பறை சாற்றுதல், சிறப்புற, ஆர்வம்.

2. **எதிர்ச் சொற்கள் எழுதுக :—**

இன்பம், பழமை, அண்மையில், கற்பார், இக்காலம்.

3. **பிரித்து எழுதுக :—**

புத்துயிர், அவ்வோவியங்கள், கற்றறிந்து.

## இலக்கணம் :

### (இன எழுத்து)

உச்சரிப்பு : வடிவம், பிறப்பு முதலியவற்றில் ஒருவாறு ஒத்திருக்கும் எழுத்துக்கள் இன எழுத்துக்கள் எனப்படும்.

ஒவ்வொரு குற்றெழுத்திற்கும் அதற்கடுத்த நெட்டெழுத்து இனவெழுத்தாகும். ஐகாரத்திற்கு இகரமும்; ஒளகாரத்திற்கு உகரமும் இனமாகும்.

அ, ஆ; இ, ஈ; உ, ஊ; எ, ஏ; ஒ, ஓ; ஐ, இ; ஒள, உ.

மெய்யெழுத்துக்களில் ஒவ்வொரு வல்லெழுத்திற்கும் அதற்கடுத்த மெல்லெழுத்து இன எழுத்தாகும். இடையினம் ஆறும் ஓரினம்.

க், ங்; ச், ஞ்; ட், ண்; த், ந்; ப், ம்; ற், ன்; ய், ர்; ல், வ்; ழ், ள்.

**கீழ்வரும் சொற்றொடர்களிலுள்ள இன எழுத்துக்களை எடுத்து எழுதுக :—**

1. ஆய கலைகள் அறுபத்து நான்கு.
2. இக்கால மாணவர் பலர் ஓவியக் கலையில் ஆர்வம் காட்டுகின்றனர்.

---

# 8. நூல் அரங்கேற்றம்

(திரு. த. சே. உமாபதியவர்கள், M. A., L. T.)

1. 'அரங்கேற்றம்' என்பது யாது? ஒரு புலவர் தாம் இயற்றி முடித்த நூல் ஒன்றை அரசனையோ, செல்வனையோ, தலைவனுக் கொண்ட புலவர் அவையில், வரி வரியாகப் படித்துக் கொண்டே போவார். அதனை அவையிலுள்ள புலவர் கூர்ந்து கவனித்துக் குற்றங் காணில் எடுத்துக் காட்டுவர்; ஐயமோ, திரிபோ ஏற்படின் விளக்கம் கேட்பர். தம் நூலை அரங்கு (சபையில்) ஏற்றும் புலவர், அவற்றுக்குத் தக்க விடையிறுத்து, ஐயந்திரிபுகள் அகலுமாறு விளக்கம் தரவேண்டும். குற்றம் இல்லாத நூல் அவையோரின் பாராட்டுதலுடன் வெளி வரும். அந் நூலாசிரியர்க்கு அவைத் தலைவர் பரிசுகள் அளிப்பர். மிகுதியும் குற்றமுடைய நூலாயின், அது அவையோரால் கண்டிக்கப்பட்டு ஒதுக்கப்படும். சில குற்றங்களுடைய நூலாயின், அரேங்கேற்றுபவர் அவற்றைத் திருத்தி அமைத்த பின் அந்நூல் அவையோரின் ஆதரவைப் பெறும்.

2. இவ்வண்ணம் அரங்கேற்றம் செய்யப்படாத நூல் எதனையும் அக்காலப் புலவர்கள் ஏற்பதில்லை. மக்களும் அதனை விரும்பாமல் ஒதுக்கி விடுவார்கள். எனவே, அரங்கேற்றம் பெருத நூல் கிழித்தெறிதற்குரிய பயனற்ற நூலே ஆகும். நம் நாட்டில் உலாவி வரும் பழந்தமிழ் நூல்களனைத்தும் இவ்வாறு அரங்கேற்றம் பெற்று வெளிவந்தனவே ஆகும்.

3. அனந்தையதிபதி சந்திரவாணன் என்ற குறுநிலத் தலைவன் ஒருவன், தன்மீது கோவை ஒன்றினைப் பாடியருளுமாறு அந்தகக்கவி வீரராகவ முதலியாரை வேண்டிக் கொண்டான். அக் குறுநிலத் தலைவனது வேண்டுகோளை அந்தகக் கவி ஏற்றுக் கொண்டு, அவன்மீது ஒரு கோவையைப் பாடினார். பாடிமுடித்த பின்னர், அதனை அரங்கேற்றம் செய்வதற் குரிய ஏற்பாட்டைச் சந்திரவாணன் விரைந்து செய்யாமல் காலந் தாழ்த்தினான். அதனையறிந்த அந்தகக் கவி,

மின்னு மாளிகை அனந்தை யாதிபதி
சந்திர வாணமகி பாலன்முன்
வீர ராகவன் விடுக்கு மோலைதன்
விருப்பி னுல்வலிய வேஅழைத்(து)

உன்னு காவியம திற்பெ ருத்ததொரு
கோவை யோதுகென வோதினன் ;
ஓதி மாதமொரு மூன்று போகியொரு
நாலு மாதமள வாகவும்

இன்ன முந்தனது செவியி லேறவிலை
யென்னி லென்னவுல கெண்ணுமோ !
இராச ராசர்திறை கொள்ளு மென்கவிதை
யிங்கு வந்துகுறை யாகுமோ !

தன்னை என்சொலுவர்? என்னை என்சொலுவர் ?
தான்த மிழ்க்குமண னல்லவோ ?
தன்பு கழ்க்குமிது நீதியோ ? கடிது
தாளி னின்னேரை வேணுமே.

என்னும் சீட்டுக்கவி தீட்டி அனுப்பச் சந்திர வாணன் தன்மீது அந்தகக்கவி பாடிய கோவையை அரங்கேற்று

வதற்கு ஏற்பாடுகள் செய்து முடித்தான்; ஒரு குறிப்பிட்ட நாளில் காஞ்சீபுரத்தில் புலவர் பெருமக்களை அவை கூட்டினுன். நூலாசிரியர் குருடராதலின், கோவையை அரங்கில் படிப்பதற்கு அவர் மாணவர் ஒருவர் நியமிக்கப்பட்டார். அம்மாணவர் ஒவ்வொரு செய்யுளாகப் படித்து வந்தார்.

"மாலே நிகராகுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாய்ந்துசெந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சேற்றி னமுதவயல்
மேலே முளைத்த கரும்போ இம்மங்கைக்கு
மெய்யெங்குமே!"

என்னும் செய்யுளைப் படித்தபோது அந்த அவையில் இருந்த புலமைச் செல்வியாகிய அம்மைச்சி என்பவள், "கவிராயர்க்குக் கண்தான் கெட்டது; மதியும் கெட்டதோ?" என்ருள். அந்தகக்கவி அம்மைச்சியின் துடுக்கான போக்கைக் கண்டு வருந்தி, ஒருகணம் அசைவற்றிருந்தார்.

4. "முப்பழச் சேற்றின் அமுத வயல் மேலே முளைத்த கரும்பு" என்பது பொருந்தவில்லை என்று அம்மைச்சி கூற, உடனே அந்தகக் கவி வீரராகவர் ஏட்டைப் படித்து வருபவராகிய தம் மாணவரைப் பார்த்து, "கொம்பை வெட்டிக் காலை இடும்," என்று கூறினுர். இதனுல், 'சேற்றின்' என்னும் சொல் 'சாற்றின்' என்ருகி 'முப்பழச் சாற்றின் அமுத வயல் மேலே முளைத்த கரும்பு' என்ருயிற்று. அம்மைச்சியும் அங்கிருந்த புலவர் அனைவரும் இச்செயல் கண்டு மகிழ்ந்து அந்தகக் கவியின் கூர்ந்த அறிவினைப் பெரிதும் பாராட்டினர்.

5. பிறகு அந்தகக் கவியின் மாணவர் அந்நூல் முழுவதையும் படித்து வர, அந்நூலில் உள்ள செய்யுட்களின் சொல் நயம், பொருள் நயம் முதலியவற்றை அறிந்து, அவ்வவையிலிருந்த புலவர் அனைவரும் மகிழ்ச்சிப் பெருக்கில் மூழ்கித் திளைத்து, அந்தக் கவி வீரராகவரைப் பெரிதும் பாராட்டினர். சந்திரவாணனும் புலவரின் திறத்தை வியந்து, அவர் மனம் மகிழுமாறு நிறையப் பரிசில்கள் அளித்துப் பெருமைப் படுத்தினன்.

## அருஞ்சொற்பொருள்

பேரவை-பெரிய சபை, திரிபு-அறிவு மயக்கம், அதிபதி-தலைவன், அந்தகக்கவி - கண்களை இழந்த கவிஞர், திரை-கப்பம், கடிது - விரைவில், மால் - திருமால், வரை - மலை, முப்பழம் - (மா, பலா, வாழை என்னும்) மூன்று கனிகள், மதி - அறிவு, கூர்ந்த - கூர்மையான, நயம் - இனிமை, திளைத்து-அனுபவித்து.

## பயிற்சி

I. விடை எழுதுக:—

1. அரங்கேற்றமாவது யாது?

2. அரங்கேற்றம் செய்யப்படாத நூல்கள் ஏன் பதிக்கப்படுவதில்லை?

3. சந்திரவாணன் கோவை யாரால் யார்மீது பாடப் பெற்றது?

4. அம்மைச்சி என்பவள் யாவள்? அவள் அந்தகக் கவி பாடலில் என்ன தவறு கண்டாள்?

5. அந்தகக் கவியின் அறிவுக் கூர்மையைச் சான்று காட்டி விளக்குக.

**II.** பிரித்து எழுதுக:—

அரங்கேற்றம், செந்தமிழ், சிறுகாப்பியம்.

**III.** எதிர்ச் சொற்கள் எழுதுக:—

இனிய, பலவகையான, விரும்புதல், மறுத்தல், பெருமை, புகழ்தல்.

## இலக்கணம்

### (மாத்திரை – குறில் - நெடில்)

மாணவர்களே, ‘ அ ’ என்னும் எழுத்தை உச்சரித்துப் பாருங்கள், ‘ ஆ ’ என்பதையும் உச்சரித்துப் பாருங்கள். ‘ அ ’ என்னும் எழுத்தைக் காட்டிலும், ‘ ஆ ’ என்பது நீண்டு ஒலிக்கிறதல்லவா? அதுபோல, க, கா என்னும் எழுத்துக்களையும் உச்சரித்து பாருங்கள். ‘ க ’ என்னும் எழுத்தை விடக் ‘ கா ’ என்னும் எழுத்து நீண்டு ஒலிக்கிற தல்லவா? ‘ அ ’ — ‘ க ’ என்னும் எழுத்துக்கள், தனித் தனியே, ஒரு கண்ணிமைப் பொழுது அல்லது ஒரு கை நொடிப் பொழுது ஒலிக்கின்றன. ‘ ஆ ’ — ‘ கா ’ என்னும் எழுத்துக்கள் இரு கண்ணிமைப் பொழுது அல்லது இரு கைநொடிப் பொழுது ஒலிக்கின்றன. எழுத்துக்களை உச்சரிக்கவேண்டிய கால அளவு மாத்திரை எனப்படும். கண் இமைப் பொழுது அல்லது கைநொடிப் பொழுது ஒரு மாத்திரை அளவாகும்.

நெடிலுக்குரிய மாத்திரை இரண்டு. குறிலுக்குரிய மாத்திரை ஒன்று.

---

# 9. நான் பார்த்த திருவிழா

[வித்வான் பு. செல்வராசனுரவர்கள்]

1, நேதாஜி தெரு,
சிதம்பரம்,
25—10—1960.

அன்புள்ள நண்பா,

வணக்கம்! நலம் அறிய அவா. நான் சென்ற வாரத்தில் இங்கு நடைபெற்ற திருவிழாவிற்கு வரும்படி உனக்குக் கடிதம் எழுதியிருந்தேன். ஆனுல் நீ அவ் விழாவிற்கு வர இயலாது என்று கடிதம் எழுதி விட்டாய். அதனைப் பார்க்க எனக்கு மிகவும் வருத்தம் ஏற்பட்டது. மேலும், நீ அக்கடிதத்தில் திருவிழாவின் பொருட்டுச் செலவு செய்வது வீண் எனவும் குறிப் பிட்டிருந்தாய். திருவிழாக்களின் சிறப்பை அறியாத காரணத்தினுலேதான் நீ அவ்வாறு எழுதியிருக்கிருய்.

நம் முன்னேர்கள் காலத்தையும் பொருளையும் வீணுக்குவதற்காகவா திருவிழாக்களைக் கொண்டாடி வந்தார்கள்? உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டினரும் பற்பல விழாக்களைக் கொண்டாடி வருகின்றனரே! அவையெல்லாம் பயனற்றவையென்பதுதான் உனது எண்ணமா? விழாக்கள் யாவும் விழுமிய நோக்கத் துடனேதான் கொண்டாடப்பட்டு வருகின்றன.

நமது நாட்டில் ஊர்தோறும் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. ஓர் ஊரில் விழா நடைபெறும் போது, அயலூரார் பலர் வந்து அவ்வூரிற் கூடுகின்றனர். அனைவரும் சாதிமத வேறுபாடுகளை மறந்து, இறை வழிபாட்டில் ஈடுபடுகின்றனர். மக்களிடையே கடவுட் பற்றையும் ஒழுக்கத்தையும் வளர்க்கின்ற உயரிய சாதனமாகத் திருவிழாக்கள் இலங்குகின்றன. எனவே, திருவிழாக்கள் பயனற்றவையென்ற உன் கருத்தை மாற்றிக் கொள்வாய் என்று நினைக்கிறேன்.

அருமை நண்பா, எங்கள் ஊரில் நடைபெறும் திருவிழாவைப் பற்றி இக்கடிதத்தில் உனக்கு விரிவாகக் கூற விரும்புகிறேன். சிதம்பரம் சைவர்களுக்குச் சிறந்த புண்ணியத் தலமாகும். இங்கே தான் நடராசப் பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கின்றார். இத்தலம் சைவ சமயச் சான்றோர்களால் புகழ்ந்து பாடப்பெற்ற சிறப்பினையுடையது. அம்பலத்தில் ஆடுகின்ற இறைவரைக் கண்டு வணங்கி அவரது இன்னருளைப் பெறுவதற்குப் பக்தர் பலர் நமது நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் இவ்வூருக்கு வருவர்.

எங்கள் ஊரில் ஆண்டிற்கு இருமுறை நடராசப் பெருமான் திருக்கோயிலில் திருவிழா நடைபெறும். ஆனி மாதத்திலும், மார்கழி மாதத்திலும் இவ்விழாக்கள் நடைபெறும். விழா நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாகப் பத்து நாட்கள் நடைபெறும். ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் கடவுளரின் திருமேனிகள் கோவிலைச் சூழ்ந்துள்ள நான்கு பெரிய வீதிகளிலும் உலா வரும். அவ்வாறு உலா வரும்போது சிறந்த நாதசுரக் கச்சேரிகள்

நடைபெறும். அவ்வுலாவைத் தொடர்ந்து தேவார, திருவாசகப் பாக்களைப் பாடும் இசைக் குழுவினர் கல்லும் கனிந்துருகுமாறு பாடிக்கொண்டு செல்வர். கோவிலில் உள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் ஒவ்வொரு நாளும் சைவ சமயப் பெருமையை உணர்த்தும் சிறப்புச் சொற்பொழிவுகள் நடைபெறும். தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் சிறந்த சமயப் பேச்சாளர்கள் அங்கு வந்து சொற்பொழிவு ஆற்றுவார்கள்.

இவ்விழா நாட்களில் இறுதி மூன்று நாட்கள் மிக்க சிறப்புடையவையாகும். இம்மூன்று நாட்களிலும் தில்லைத் திருப்பதி கண்கொள்ளாக் காட்சியளிக்கும். எங்கு நோக்கினும் மக்கள் திரண்டிருப்பார்கள். விழாவின் ஒன்பதாம் நாள் தேர்த் திருவிழா நடை நடைபெறும். கடவுளின் திருவுருவங்களைத் தேரின் மீது ஏற்றிப் பூசை புரிவர். அதன் பின்னர்த் தேரில் பிணைக்கப்பட்டுள்ள நீண்ட வடங்களை ஆயிரக்கணக் கான மக்கள் பற்றி இழுத்துக்கொண்டு நான்கு வீதி களையும் வலமாக வருவார்கள். இவ்வாறு தேர் வடத்தைப் பற்றி இழுப்பவர்களில் எவரும் கூலிக்காக இபபணியைச் செய்பவர் அல்லர். கடவுட் பற்றினல் உந்தப்பட்ட பலர் தாமாகவே முன் வந்து தேரை இழுத்துச் செல்கின்றனர். அந்நிலையில் அவர்கள் உள்ளத்தில் எவ்வித வேறுபாட்டுணர்ச்சியும் இடம் பெறுவதில்லை. செல்வர் முதல் வறியவர் ஈருக, கற்ருர் முதல் கல்லாதார் ஈருக, அனைவரும் ஒன்று பட்டுத் தேர் வடத்தைப் பற்றியிழுக்கும்போது இந்த ஒற்றுமையுணர்ச்சி என்றும் மக்களிடையே நிலவினல் நம் நாடு விரைவில் முன்னேற்றம் அடையும் என்ற எண்ணம் எனக்கு ஏற்படும். காலையில் நிலையத்தை

விட்டுப் புறப்பட்ட தேர் மாலையில் நிலையத்தை வந்து அடையும். தேர்த் திருவிழா இவ்வாறு சிறப்புற நடைபெறும்.

அதன் பின்னர் அன்றிரவு நடராசப் பெருமானும் சிவகாம சுந்தரியாரும் தேரிலிருந்து புறப்பட்டு ஆயிரக் கால் மண்டபத்தை அடைவர். இரவு முழுவதும் வழிபாடுகள் நடைபெறும். கடவுளரின் திருமேனிகள் புனித நீரினுல் நீராட்டப்பெறும்.

மறுநாள் கடவுளரின் திருமேனிகள் நன்கு அலங்கரிக்கப் பெற்று வழிபாடு நிகழ்த்தப் பெறும். பல்லாயிரக் கணக்கான மக்கள் அம்மண்டபத்தில் உள்ளும் புறமும் குழுமியிருப்பார்கள். அந்நன்னுளில் நல்லோரையில் நடராசப் பெருமான் தம் தேவியாருடன் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து புறப்பட்டு, ஆனந்த நடனமாடிக்கொண்டே தமது மூலத்தானத்திற்குச் செல்வார். இதனை நடராசர் தரிசனம் என்று மக்கள் கூறுவார்கள். இத் தரிசனத்தைக் காணும்பொருட்டுத் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் வந்து கூடியிருப்பார்கள். இத்தரிசனத்தை இவ்விழா நிகழ்ச்சி களில் சிகரமானது என்று கூறலாம்.

விழாவின் இறுதி நாளின் இரவில் மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற பெரிய பல்லக்குகளில் கடவுளர் திருமேனிகள் வைக்கப்பட்டு, வீதியுலா வரும். இவ்விழா மிகவும் சிறப்பாக நடைபெறும். இவ்வாறு பதினெரு நாட்கள் நடராசப் பெருமான் திருவிழா

வானது தொடர்ந்து கொண்டாடப் பெற்று முடிவு பெறும். ஆனி மாதத்தில் நடைபெறும் திருவிழா 'ஆனித் திருமஞ்சனம்' எனவும், மார்கழி மாதத்தில் நடைபெறுவது மார்கழித் திருவாதிரை எனவும் கூறப் பெறும்.

அன்பார்ந்த நண்பா, நான் இத்துணை விரிவாக எங்கள் ஊர் விழாவைப் பற்றி எழுதியதன் நோக்கம், நீ ஒரு முறையாவது வந்து இவ்விழாவைக் கண்டு களிக்கவேண்டும் என்பதேயாகும். ஆனித் திருமஞ்சன விழாவைக் காணும் வாய்ப்பை நீ இழந்து விட்டாய். மார்கழியில் நடைபெறும் திருவிழாவிற்கு நீ தவருது வரவேண்டும். நீ வரும்போது உன் பெற்ருேர்களையும் அழைத்துவா.

வணக்கம்.

உன் அன்புள்ள நண்பன்
பா. முருகையன்

முகவரி :
திரு. உருத்திரபதி,
திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
தண்டையார் பேட்டை,
சென்னை-21.

## அருஞ்சொற்பொருள்

நிலவுதல்-விளங்குதல், கேளிர்-உறவினர், பற்று-ஆசை, இறை. வழிபாடு-கடவுளை வழிபடுதல், சமயம்-மதம், திருப்பதி-சிறந்த நகரம், உந்தப்பட்ட-தள்ளப்பட்ட, கற்றூர்-படித்தவர், புனித நீர்-தூய்மையான நீர், குழுமி-கூடி, நல்லோரை-நல்ல நேரம்.

## வினாக்கள்

1. திருவிழாக்களின் சிறப்பை எழுதுக.

2. சிதம்பரம் எத்தகைய சிறப்பு வாய்ந்தது?

3. அங்கு எப்போது திருவிழா நடைபெறும்?

4. திருவிழாவின்போது நடைபெறும் நிகழ்ச்சிகள் யாவை?

5. தில்லையில் நடைபெறும் தேர்த் திருவிழாவைப் பற்றி விரிவாக எழுதுக.

6. நடராசர் தரிசனம் எவ்வாறு நடைபெறும்?

7. இறுதி நாள் திருவிழாவின் சிறப்பு யாது?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க:—வழிபாடு, நோக்கம், சொற்பொழிவு, எங்கு நோக்கினும், முன்னும் பின்னுமாக, வாய்ப்பு.

2. எதிர்ச் சொற்களை எழுதுக :— செலவு, ஒற்றுமை, புனிதமான, கற்றூர், செல்வர்.

3. பிரித்து எழுதுக:— நல்லோரை, பல்லாயிரம், வீதியுலா, இத்துணை, கடவுட்பற்று.

4. நீ உன் ஊரில் நடைபெறும் திருவிழாப் பற்றி வருணித்துக் கட்டுரையொன்று எழுதுக.

## இலக்கணம்

### (மாத்திரை—மெய்—ஆய்தம்)

'ஆனி மாதத்தில் நடைபெறும் திருவிழா ஆனித் திருமஞ்சனம்' எனப் பெயர் பெறும்.—இவ்வரியிலுள்ள மெய் யெழுத்துக்களைப் பாருங்கள், 'த், ம், ஞ்,' என்னும் மெய் யெழுத்துக்களை உச்சரித்துப் பாருங்கள்.

மெய்யெழுத்து, குறிலைவிடக் குறைந்த மாத்திரையைப் பெறும் என்பது தெரிகிறதல்லவா ?

மெய்யெழுத்துக்குரிய மாத்திரை, அரை.

'வெஃகாமை வேண்டும் பிறன்கைப் பொருள்'... இக் குறளடியில் உள்ள முதல் சொல்லைக் கவனி, 'வெஃகாமை' என்னும் சொல்லில் இரண்டாவது எழுத்து ஆய்த எழுத்து என்று சொல்லப்படும். இது மூன்று புள்ளி வடிவமுடையது. இவ்வெழுத்தும் மெய்யெழுத்தைப் போன்று அரை மாத்திரையைப்'பெற்று வரும்.

---

# 10. இராசேந்திரப் பிரசாது

(புலவர் முருகையனரவர்கள்)

1. டாக்டர் இராசேந்திரப் பிரசாது நம் நாட்டின் முதல் தலைவராய் வீற்றிருந்தார். பாரத நாட்டின் முப்பது கோடி மக்கட்குத் தலைமை தாங்கும் உயர்ந்த பதவியை வகித்த இவருடைய வரலாறு பிறருக்கு வழி காட்டியாய் உள்ளதாகும்.

2. நம் பாரத நாடு, 1947-ம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், பதினைந்தாம் நாள் நள்ளிரவு ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது. 1950-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 26ம் நாள் முதல் குடியரசு நாடாய் விளங்கி வருகின்றது. அன்று முதல் குடியரசு முறையில் நம் நாடு ஆளப் பெற்று வருகின்றது. வயது வந்த குடிமக்கள் அனைவரும் சேர்ந்து தங்கள் பிரதிநிதி களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் மூலம் ஆட்சி நடத்துவதே குடியரசு முறையாகும். இம்முறைப்படி மக்கள் பிரதிநிதிகள் டாக்டர் இராசேந்திரப் பிரசாது அவர்களை நாட்டின் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். எனவே, நம் நாடு குடியரசானவுடன் இவர் பாரத நாட்டுத் தலைவராய் அமர்ந்தார்.

3. ஒரு காலத்தில் மகத நாடு என்னும் பெயருடன் விளங்கியதும், இன்று பீகார் என வழங்குவதுமான பழம்பெரு நாட்டின் வடபாகத்தில் உள்ள சாரன் மாவட்டத்தில் 1884-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், மூன்றும் நாள், இராசேந்திரப் பிரசாது பிறந்தார். இவர் தந்தையார் மகாதேவ சகாயர்

என்பவர். அவர் காயஸ்தர் என்னும் கணக்கர் வகுப்பைச் சேர்ந்தவர். அவர்கள் வாழையடி வாழை யாய் நிலக்கிழாராய் இருந்தவர்கள்.

4. மகாதேவ சகாயரின் புதல்வர் ஐவருள் இராசேந்திரர் ஐந்தாம் புதல்வராவர். இவர் ஐந்து வயதடைந்ததும் மௌல்வி எனப்படும் முஸ்லிம் புலவர் ஒருவரிடம் கல்வி பயின்ருர். பின்னர் ஒன்பதாம் ஆண்டில் பள்ளியில் சேர்க்கப்பட்டார். இவர் பள்ளியில் எல்லா வகுப்புகளிலும் முதல்வராய் விளங்கினுர். இவர் பள்ளி விளையாட்டுக்கள் பலவற்றில் விருப்பங்கொண்டு அவற்றிற் ஈடுபட்டார். உதைபந்து விளையாட்டில் முதன்மை பெற்று விளங்கினுர்.

5. 1902-ஆம் ஆண்டில் இவர் மெட்ரிக்குலேஷன் தேர்வில் முதல்வராய்த் தேர்ச்சிபெற்ருர். அக்காலத்தில் பீகார் தனி மாநிலமாய் இராமல், வங்காளத்துடன் சேர்க்கப்பட்டிருந்தது. பீகார் மக்கள் அறிவிற் குறைந் தவர்கள் என்பது அக்கால வங்காளிகளின் எண்ணம். அது தவருன எண்ணம் என்பதை இராசேந்திரர் தாம் முதன்மையாகத் தேர்ச்சிபெற்றதன் மூலம் மெய்ப்பித்து விட்டார்.

6. பின்னர், இராசேந்திரர் கல்கத்தா நகரிலுள்ள மாகாணக் கல்லூரியில் சேர்ந்து, 1907–ல் எம். ஏ. பட்டம் பெற்ருர். பின்பு 1910–ல் சட்டக் கல்லூரியில் பி. எல். பட்டம் பெற்ருர். இவர் மாணவராயிருந்த போதே கழகக் கூட்டங்களில் கலந்து தாமும் பேசிப் பிற பீகார் மாணவரையும் பேச வைத்தார். இவ்வாறு சொற்பொழிவு நடத்துவதில் பீகார் மாணவர் பலரை நன்கு திறமை பெறச் செய்தார். அவர்களுக்கிடையே ஒற்றுமையையும் உள்ளன்பையும் பெருகச் செய்தார்.

7. இராசேந்திரர் 1911ல் கல்கத்தா உயர் நீதி மன்றத்தில் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டார்; தொழில் செய்த வண்ணம் எம். எல். தேர்வுக்குப் படித்து, 1915ல் அதில் தேர்ந்து, எம். எல். பட்டம் பெற்ருர். பிறகு பீகார் மாகாணம் தனியே பிரிக்கப்பட்டு பீகாரின் தலைநகரமாகிய பாட்ஞவில் 1916ல் உயர்நீதி மன்றம் அமைக்கப்பட்டபோது, அதில் வழக்கறிஞர் தொழிலை நடத்திஞர்.

8. அத்தொழிலில் விரைவாக இவருக்குப் புகழும் பொருளும் பெருகின. அத்தொழிலையே தொடந்து நடத்தி வந்திருந்தால், இவர் பெருஞ் செல்வம் திரட்டி யிருப்பார். ஆஞல், 1919ல் காந்தியடிகள் நம் நாட்டின் விடுதலை கோரி அறப்போர் தொடங்கிய போது, இராசேந்திரர் தம் தொழிலை உதறித்தள்ளிவிட்டு அறப்போரில் ஈடுபட்டார்.

9. இராசேந்திரர் இங்கிலாந்து சென்று ஐ.சி.எஸ். பட்டம் பெற வேண்டும் என்பது இவர் தமையஞர் மகேந்திரப் பிரசாதின் விருப்பம். ஆதலால், அவர் இராசேந்திரர் அறப்போரில் ஈடு பட்டதை விரும்ப வில்லை. ஆஞல், இவரோ, நாட்டுப்பற்று மிகுந்தவராய், செல்வத்தை வெறுத்து, அறப்போரில் ஈடுபடுவதே பெரிதெனக் கருதிஞர்.

10. பீகார் மாகாணத்தில் ஏற்பட்ட பல்கலைக் கழகத்தில் துணைத் தலைவர் பதவி இவருக்கு அளிக்கப் பட்டது. இவர் காங்கிரஸ் இயக்க நடவடிக்கைகளிலும், பல்கலைக் கழகச் செயல் முறைகளிலும், பொதுநலத் தொண்டுகளிலும் ஈடுபட்டு இடையருது தொண் டாற்றி வந்தார். இவற்றுடன், 'லா வீக்லி' என்னும்



சட்டத்தாளின் ஆசிரியராய் இருந்து, சட்ட நுணுக்கங்கள் பலவற்றைப் பற்றிக் கட்டுரைகள் வரைந்தார். 'சர்ச் லைட்' என்னும் ஆங்கிலத்தாள் ஆட்சிக் குழுவில் இடம் பெற்றிருந்தார். ஆனால், அறப்போரில் ஈடுபட்டவுடன் பல்கலைக் கழகத் துணைத்தலைவர் பதவியையும் விட்டொழித்தார். பிறகு, தேசியப் பல்கலைக் கழகம் ஒன்றைத் தொடங்கி, மாணவர்க்கு நாட்டுப் பற்று ஊட்டும் முறையில் பயிற்சி அளித்தார். ஆனால், 1930 ல் அரசாங்கம் அதனை மூடிவிட்டது.

11. இராசேந்திரர் அறப்போரில் தீவிரப் பங்கு எடுத்துக்கொண்டார்; கிராமச் சீரமைப்புத் தொண்டில் மிகுதியாக ஈடுபட்டார்; தமக்குரிய வேலைகளை ஒழுங்காக நிறைவேற்றினர். இதனால், மக்கள் இவரைப் பீகார் காந்தி என்று வழங்கினர்கள்.

12. இராசேந்திரர் வழக்கறிஞர் வேலையைத் துறந்தபோது, பெரிய வழக்கொன்று முடிவு பெருமலிருந்தது. அதனையறிந்த காந்தியடிகள் அவ் வழக்கை இறுதிவரை நடத்துமாறு கூறினர். அவ் வழக்கு 1928 ல் இங்கிலாந்தில் பிரிவுகவுன்ஸிலில் விசாரணைக்கு வந்தது. அதற்காக இங்கிலாந்து சென்ற இராசேந்திரர், வழக்கு முடிந்ததும் இங்கிலாந்தின் பல பகுதிகளுக்குச் சென்றூர். ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தார். பல்கலைக்கழகங்கள், ஆலைகள், தொழிலகங்கள் முதலியவற்றைப் பார்வையிட்டார். இப்பயணத்தின்போது பேரறிஞரும் காந்தியடிகளின் நண்பருமாகிய ரோமேன் ரோலண்டு என்னும் பெரியாரைச் சந்தித்துப் பேசினர். ஐரோப்பிய நாடுகளில் இவர் சுற்றுப்பயணம் செய்த போது கதர் உடுப்பும் கதர்க் குல்லாவுமே அணிந்திருந்தார்.

13. இராசேந்திரர் இந்தியா மீண்ட பிறகு 1930-ல் காந்தியடிகள் உப்புப் போர் தொடங்கினர். நாட்டு மக்களனைவரும் கலந்துகொண்ட அப்போரில் இராசேந்திரர் பங்கு கொண்டு, ஆறுமாத காலம் சிறைத் தண்டனை பெற்ருர். மீண்டும் 1932ல் கள்ளுக்கடை மறியல், அயல்நாட்டு ஆடைக்கடை மறியல் முதலியவற்றில் இராசேந்திரர் ஈடுபட்டு, மீண்டும் ஆறு மாதம் சிறைவாசம் செய்தார். மெலிந்த உடலையுடைய இவர் ஓய்வில்லாமல் செய்த வேலை களினலும், சிறைவாசத்தாலும் காச நோய்க்கு ஆளானர்.

13. இராசேந்திரர் இந்தி மொழியில் தேசம் என்னும் பெயரில் தினத்தாள் ஒன்றை நடத்தினர். அதில் நாட்டுப் பற்றை வளர்க்கும் கட்டுரைகளை வரைந்தார். அதனல், அரசாங்கம் அத்தினத்தாளை அவசரச் சட்டத்தின்கீழ் நிறுத்தி, இராசேந்திரரைப் பதினைந்து மாதச் சிறைவாசம் பெறச் செய்தது. ஆனல் பீகாரில் கொடிய நிலநடுக்கம் ஏற்பட்டு அளவு கடந்த சேதம் ஏற்பட்டதால், அரசாங்கம் இவரை உடனே விடுதலை செய்தது. இவர் அப்போது செய்த தொண்டு அளவிட முடியாதது. ஒன்பது மாத காலத்தில் இவர் முப்பது இலட்சம் ரூபாய் சேர்த்து, துன்பமடைந்த மக்களுக்கு எல்லாத் துறைகளிலும் உதவி புரிந்தார்.

15. இராசேந்திரர் 1934-ல் பம்பாய் நகரில் கூடிய காங்கிரஸ் மகாசபையின் தலைவரானர். அதனல் இந்தியா முழுவதும் சுற்றினர். 1937-ல் இந்திய மாகாணங்களில் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட

மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. பீகார் மாகாண முதலமைச்சர் பதவி இராசேந்திரருக்கு வழங்கப் பட்டது. ஆனால், இவர் பதவியை விரும்பாமல், அதனை ஏற்க மறுத்து விட்டார். 1939-ல் இரண்டாவது உலகப்போர் தொடங்கியது. மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட மந்திரி சபைகள் பதவியை விட்டு வெளி யேறின. காங்கிரஸ், அரசாங்கத்துடன் ஒத்துழைத்தல் கூடாது எனத் தீர்மானிக்கப்பட்டது. அதனால், இராசேந்திரர், காந்தியடிகள் முதலிய தலைவர்களுடன் சிறையில் வைக்கப்பட்டார்.

16. பிறகு நாட்டுக்கு உரிமை வழங்க ஆங்கி லேயர் முடிவு செய்தனர். அதன்படி நாட்டுக்குரிய திட்டங்களை வகுக்கும் வரை, இடைக்கால அரசியலை ஏற்று நடத்தியவருள் இராசேந்திரரும் ஒருவர். இவர் உணவுத்துறை அமைச்சராயிருந்து, பஞ்சக் கொடுமை யை நாட்டை விட்டு விரட்ட அரிய முயற்சிகளைக் கையாண்டார். பிறகு அரசியல் நிர்ணய சபையின் தலைமைப் பதவியும் இவருக்கே வழங்கப்பட்டது. இந்தியா முழு உரிமை பெற்ற குடியரசு நாடாயின பின் குடியரசின் தலைவராக இராசேந்திரர் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

17. இவர் சிறந்த நற்குணங்கள் உடையவர். எவரிடத்தும் இன்முகங் காட்டிப் பேசுவார். எந்நிலை யிலும் சினங்கொள்ள மாட்டார். பிறருக்கு மரியாதை காட்டுவதில் சிறிதும் தவற மாட்டார். இத்தகைய சீரிய பண்புகழுடைய பெரியார் தலைமையில் நம் நாடு சீரும் சிறப்பும் புகழும் பெற்று முன்னேற்றம் அடைந்தது.

## அருஞ்சொற் பொருள்

வீற்றிருந்தார்—அமர்ந்திருந்தார், பாரத நாடு—இந்தியா, மாவட்டம் — ஜில்லா, நிலக்கிழார் — நிலச் சொந்தக்காரர், வழக்கறிஞர் — வக்கீல், அறப்போர் — சத்தியாக்கிரகம், இடையருது — இடைவிடாமல், சீரிய — சிறந்த, சீர் — பெருமை, கோரி—விரும்பி.

## பயிற்சி

**I. விடை கூறுக:—**

1. நம் நாடு உரிமை ப பற்றது எப்போது? குடியரசானது எப்போது ?

2. நம் குடியரசு நாட்டின் முதல் தலைவர் யார் ?

3. இராசேந்திரர் எங்கு எப்போது பிறந்தார்?

4. இராசேந்திரர் இளமையிலேயே மாகாணப் பற்றுடையவர் என்பதை விளக்குக.

5. இவர் வழக்கறிஞர் தொழிலை ஏன் கைவிட்டார்?

6. பத்திரிகைத் தொழிலில் இவருக்கிருந்த தொடர்பு யாது?

7. இவருக்கு பல்கலைக் கழகத் தொடர்பு எவ்வாறு ஏற்பட்டது?

8. இவர் 'பீகார் காந்தி' எனப்பட்டதேன்?

9. இவர் இங்கிலாந்துக்குச் சென்றதேன்?

10. இவருக்குக் காசநோய் வந்ததேன்?

11. பீகார் நிலநடுக்கத்தின்போது இவர் செய்த தொண்டு யாது?

12. இவர் வகித்த பதவிகள் யாவை?

**II.** கீழுள்ள சொற் கூட்டங்களை வாக்கியங்களாக்குக:—

1. வீற்றிருந்தார் டாக்டர் நம் நாட்டின் அவர்கள் பிரசாது தலைவராக.

2. பங்கெடுத்து அறப்போரில் இராசேந்திரர் தீவிரமாக கொண்டார்.

## இலக்கணம்

### (சொல்)

'தை பிறந்தால் வழி பிறக்கும்,' என்னும் பழமொழியைக் கேட்டிருப்பீர்கள். 'தை' என்பது ஓர் எழுத்து. இது ஒரு மாதத்தின் பெயராய் அமைந்திருக்கிறது. இது சொல் எனப்படும்.

'வழி' என்பது இரண்டு எழுத்துக்களால் இயன்ற தொரு சொல்.

ஓர் எழுத்து தனித்து நினருவது பல எழுத்துக்கள் தொடர்ந்து நின்ருவது பொருள் தருவது 'சொல்' எனப் படும்.

இராசேந்திரர், கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டார்—இச் சொற்ருெடரில் வந்துள்ள இராசேந்திரர், கல்கத்தா, உயர்நீதி மன்றம் என்ற சொற்கள் பெயர்ச் சொற்கள் ஆகும். ஒன்றன் பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச் சொல் எனப்படும்.

இப்பாடத்தில் வந்துள்ள சில பெயர்ச்சொற்களைக் கூறு.

---

# 11. தாவீது லிவிங்ஸ்தன்

1. லிவிங்ஸ்தன் 1813-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள், பத்தொன்பதாம் நாள் ஸ்காட்லாந்து தேசத்தில் பிளாண்டயர் என்னுமிடத்தில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் நீல் லிவிங்ஸ்தன் என்பது; தாயார் பெயர் ஆக்னிஸ் என்பது.

2. லிவிங்ஸ்தன் பெற்ருேர் மிகவும் ஏழைகள். ஆதலால், இவர் தமது பத்தாவது ஆண்டில் ஒரு பஞ்சாலையில் வேலை செய்யத் தொடங்கினர்.

காலை ஆறு மணி முதல் மாலை எட்டு மணி வரை அங்கு வேலை செய்தார்; வேலை செய்துகொண்டே பாடங்களைப் படித்தார். இரவு எட்டு மணிக்குப் பின் ஆசிரியர் ஒருவ ரிடம் பாடங் கற்ருர். இலத்தீன் மொழியில் நன்கு பயிற்சி பெற்ருர். தரை நூல் பற்றிய பாடங்களை மிக்க விருப்புடன் கற்றுவந்தார்.

3. லிவிங்ஸ்தன், இளமையில் புத்தகங்களை மட்டும் படிப்பதோடு அமையவில்லை; விளையாட்டு களிலும் சிறந்து விளங்கினர். உயர்ந்த மலைகளில் ஏறுவதிலும், நீரில் நீந்துவதிலும் இவருக்கு விருப்பம் அதிகம். இவர் தமது கிராமத்தின் எல்லா மூலை முடுக்குகளிலும் சென்று அங்குள்ள இயல்புகளைக் கண்டறிந்தார்.

4. அக்காலத்தில் உலகத்தின் பல பாகங்கள் மக்களால் கண்டறியப்படாதிருந்தன. ஆப்பிரிக்காவின் உட்பகுதியும் அவற்றுள் ஒன்ருகும். அங்குள்ள மக்களைப் பற்றியும், நிலத்தின் இயல்பு பற்றியும் ஒருவரும் அறியார். ஆதலால், அதனை 'இருண்ட கண்டம்' எனக் கூறி வந்தனர்.

5. லிவிங்ஸ்தன் அங்குச் செல்ல விரும்பினர், மருத்துவராய் இருப்பின் சிறந்த சேவை செய்ய இயலும் என்று எண்ணி இலண்டன் சென்று மருத்துவக் கலை பயின்று, அதில் தேர்ச்சி பெற்ருர். ஒரு நாள் லிவிங்ஸ்தன் மொப்பாட்டு என்னும் மருத்துவ ஊழி யரைக் கண்டார். அவர் ஆப்பிரிக்காவில் கிறிஸ்தவ

மதத்தைப் பரப்பி வந்தார்; அங்கே ஊழியம் செய்ய ஒரு கிறிஸ்தவத் தொண்டர் வேண்டுமென்று அவர் கூறியதைக் கேட்ட லிவிங்ஸ்தன், மகிழ்ச்சியடைந்து, அங்குச் செல்லத் தாம் விரும்புவதை இலண்டன் கிறிஸ்தவத் தொண்டர் குழுவினரிடங் கூறினர். அவர்களிட மிருந்து பொருளுதவி பெற்று அங்கிருந்து புறப்பட்டு ஆப்பிரிக்காவை அடைந்தார்.

6. இவர் ஆப்பிரிக்காவின் தென்பகுதியில் உள்ள 'கேப் டவுன்' என்னும் இடத்தில் இறங்கினர். அங்கிருந்து ஆப்பிரிக்காவின் உட்பகுதியை நோக்கிப் பிரயாணம் செய்து 'குருமன்' என்னும் இடத்தை யடைந்தார். பின்னர் இருநூறு மைல தூரம மாட்டு வண்டியில் பிரயாணம் செய்து மபோட்ஸா என்னு மிடத்தில் தங்கித் தமது ஊழியத்தைச் செய்து வந்தார். அங்குள்ள மக்களின் மொழியைக் கற்ருர். அவர்களோடு நட்புக் கொண்டார்.

7. லிவிங்ஸ்தன் 1844-ஆம் ஆண்டு மொப்பாட்டு என்பவரின் மகளாகிய மேரி என்பவளை மணந்து கொண்டார். அவளுக்கு மூன்று குழந்தைகள் பிறந்தன.

8. மபோட்ஸா என்னுமிடத்தில் சிங்கங்கள் மிகுதி. அவற்ருல் அவ்வூர் மக்கள் மிக்க இன்னலுற்ருர்கள். லிவிங்ஸ்தன் அவற்றை வேட்டையாடுவதுண்டு. ஒரு நாள் சிங்கமொன்று இவர்மேல் பாய்ந்து இவரது தோளைப் பற்றிக் கொண்டது. இவர் நண்பர் அதனைக் குறி பார்த்துச் சுட்டார். குண்டு தவறிவிட்ட படியால் சிங்கம் அவரைத் தாக்கச் சென்றது. உடனே

இன்னொருவர் தமது ஈட்டியினால் அதனைக் குத்தவே, சிங்கம் அவர் மேல் பாய்ந்தது. இவர் நண்பர் மறு முறை அதனைச் சுட்டார்; சிங்கம் இறந்து விழுந்தது. பின்னர் லிவிங்ஸ்தன் மபோட்ஸா என்னுமிடத்தினின்று புறப்பட்டுக் கலகாரிப் பாலைவனத்தைக் கடந்து, நாமி என்னும் அழகிய ஏரியையும், சாம்பஸி ஆற்றின் ஒரு பகுதியையும் கண்டு பிடித்தார். பின்னர் லோவண்டா என்னும் இடத்திற்குச் சென்றார். சாம்பஸி ஆற்றிலுள்ள நீர்வீழ்ச்சியைக் கண்டு அதற்கு விக்டோரியா நீர்வீழ்ச்சி எனப் பெயரிட்டு வழங்கினார்.

9. இங்ஙனம் பதினாறு ஆண்டுகள் கழிந்த பின் லிவிங்ஸ்தன் தம் தாய் நாடு திரும்பினார். திரளான மக்கள் இவரை ஆர்ப்பரிப்புடன் வரவேற்றார்கள். அரசாங்கம் இவருக்குப் பல பரிசுகளை அளித்தது. லிவிங்ஸ்தன் தாம் கண்டறிந்தவைகளைக் குறித்துப் பல சொற்பொழிவுகள் ஆற்றினார். ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் முதலிய பல்கலைக் கழகங்கள் இவருக்கு பல கௌரவப் பட்டங்களை வழங்கின. இங்கிலாந்து மந்திரியார் இவரைக் கிழக்கு ஆப்ரிக்க அயல் நாட்டு மந்திரியாராக்கினார்.

10. மீண்டும் இவர் 1859-ஆம் ஆண்டு ஆப்பி ரிக்காவிற்குச் சென்றார். சாம்பஸி ஆற்றின் கிளைகளை யும், சொங்சோன், ஷிரே என்னும் ஆறுகளையும், ஷிர்வா, நயாஸா என்னும் ஏரிகளையும் கண்டுபிடித்தார். அக்காலத்தில் ஆப்பிரிக்காவில் நடைபெற்ற அடிமை வியாபாரத்தை அகற்ற விரும்பினார். ஆகையால், அடிமை வியாபாரிகள் இவரைப் பகைத்தனர். இவருக்குப் பற்பல இடையூறுகளை இழைத்தனர். ஆயினும், இவர் அவற்றைப் பொருட்படுத்தாமல்,

அடிமைத் தளையை அகற்ற அரும்பாடு பட்டார். அதனால் சினங் கொண்ட எதிரிகள், இவர் தோழர் பலரைக் கொன்றார்கள். இவர் மனைவியும் நோய்வாய்ப் பட்டு உயிர் நீத்தாள். ஆதலால், லிவிங்ஸ்தன் தம் தாய் நாடு திரும்பி விட்டார்.

11. சேவையுள்ளம் படைத்த செம்மல் வாளா யிருப்பாரோ? இவர் மூன்றும் முறை நண்பர் பலருடன் ஆப்பிரிக்காவை அடைந்தார். அங்கு ரோஷிமா நதியையும், தங்கனியகா ஏரியையும் கண்டுபிடித்தார்.

12. 1872-ஆம் ஆண்டு ஸ்டான்லி என்பவர் லிவிங்ஸ்தனுக்குத் துணையாக அனுப்பப்பட்டார். லிவிங்ஸ்தன் அவரைக் கண்டு மகிழ்ச்சி கொண்டார். இடைவிடாத பிரயாணத்தாலும் உழைப்பாலும் சில நாட்களில் லிவிங்ஸ்தன் நோய்க்கு ஆளானார். அவ்வா றிருக்கையில் கொடிய வயிற்றுப் போக்கால் பீடிக்கப் பட்டு1872-ஆம்ஆண்டு,ஏப்ரல் திங்கள் 28-ஆம்நாள் தம் பூதவுடம்பை நீத்துப் புகழுடம்பு எய்தினர். இவர் எலும்புகள் இங்கிலாந்துக்குக் கொண்டு வரப்பட்டன. அவற்றை எல்லாவித மரியாதைகளுடன் வெஸ்ட் மினிஸ்டர் ஆபே என்னும் கோயிலில் அடக்கம் செய்தனர்.

13. 'லிவிங்ஸ்தனைப் போல விடாமுயற்சி, வீரம் பொறுமை, தன்னல மறுப்பு, எதிரிகளிடம் அன்பு ஆகிய அருங்குணங்கள் படைத்த ஒருவரை யான் கண்டதில்லை', என ஸ்டான்லி என்பவரே கூறியுள்ளா ரென்றால் இவரது அரிய பண்புகளை நாம் என்னென்று கூறுவோம்!

14. இருண்ட கண்டத்தைக் கண்டறிந்த லிவிங்ஸ்தன் புகழ் என்றும் நின்று நிலவத் தக்க தன்றே!

## அருஞ்சொற்பொருள்

இயல்பு-தன்மை, ஆன்றோர்-பெரியோர், திகழ்ந்தார்-விளங்கினர், சேவை-ஊழியம், குழுவினர்-கூட்டத்தினர், இன்னல்-துன்பம், இடையூறு-துன்பம், செம்மல்-சிறந்தவர், பீடிக்கப்பட்டு-துன்புறுத்தப்பட்டு.

## வினக்கள்

1. லிவிங்ஸ்தன் எவ்வாறு பாடங்கற்றுத் தேறினர்?

2. ஆப்பிரிக்காவை 'இருண்ட கண்டம்' என ஏன் கூறி வந்தனர்?

3. லிவிங்ஸ்தன் ஆப்பிரிக்காவுக்குச் சென்ற வரலாறு யாது?

4. மபோட்ஸா என்னுமிடத்தில் நிகழ்ந்தது என்ன?

5. ஆப்பிரிக்காவில் அவரால் கண்டுபிடிக்கப்பட்டன யாவை?

6. அங்கு அவர் என்ன சேவை செய்தார்?

7. அவருடைய அருங்குணங்கள் யாவை?

## கட்டுரைப் பயிற்சி

கீழ் வருவன பற்றி ஒவ்வொரு பக்கம் எழுது:—

1. டேவிட் லிவிங்ஸ்தனது இளமைப் பருவம்.

2. லிவிங்ஸ்தனது ஆப்பிரிக்கப் பிரயாணம்.

## இலக்கணம்

### (இடுகுறிப் பெயர்—காரணப் பெயர்)

நமக்குப் பொருள்களின் பெயர்களுள் பலவற்றிற்குக் காரணம் தெரியவில்லை. பொருட்காரணம் தெரியாத பெயர் களை இடுகுறிப் பெயர் என்று சொல்லுகிறோம்.

'கல்தோன்றி மண்தோன்றாக் காலம்'—இவ்வரியிலுள்ள இடுகுறிப் பெயர்களைக் காண்க.

மலை, ஆறு என்ற சொற்கள் காரணம் பற்றி வழங்குவன. மலை என்ற சொல், தன் உயர்வினால் கண்டோரை மலைக்கச் செய்வது என்ற காரணத்தால் அப்படி வழங்கப்பட்டது. அது போன்று, மலை நீர் நிலத்தை அறுத்துக் கொண்டு செல்வதால், ஆறு எனப்பட்டது. இதுவும் காரணப் பெயர்.

**கீழேவரும் சொற்களுக்குக் காரணம் காண்க:—**

வெள்ளி, அணி, பறவை, வளையல், காற்றாடி, அகழி.

---

# 12. மனோன்மணீயம்

1. மனோன்மணீயம் என்பது தமிழ் மொழியில் அமைந்த நாடக நூல். இதன் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் எம். ஏ. ஆவர். ஆங்கில மொழியில் லிட்டன் பிரபு எழுதிய 'இரகசிய வழி' என்ற செய்யுள் நூலைத் தழுவி இந்த நூல் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலை, 'அழகாகத் தீட்டப்பெற்ற ஒளி படைத்த வைரம்' என்றும், 'தமிழ் இலக்கிய வானிலே ஓர் ஒளிப் பிழம்பு' என்றும் கூறலாம்.

2. சங்கம் கூடித் தமிழ் வளர்த்த மதுரைமா நகரைத் தலைநகராகக் கொண்டு 'சீவக வழுதி' என்னும் அரசன் பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். அவன் கள்ளம் கபடம் அறியாதவன். அவன் அமைச்சன் குடிலன் மிகவும் சூழ்ச்சித் திறன் உடையவன். அவன் அரசனிடம் பற்றுள்ளவன்போல நடித்து, அரசனைத் தன் கைப்பாவையாக்கிக் கொண்டான், பாண்டியன் மகளான மனோன்மணியைத் தன் மகன் பலதேவனுக்கு மணம் முடித்து அரசைக் கைப்பற்றத் திட்டமிட்டான்; அதற்காக மதுரையை விட்டுத் திருநெல்வேலியைத் தலைநகராகக் கொண்டு கோட்டை கொத்தளங்களை அமைத்துக் கொண்டான். சீவக வழுதி நயவஞ்சகனான குடிலன் வயப்பட்டு நிற்பதை அறிந்த அவன் குலகுருவாகிய சுந்தர முனிவர், அரசனுக்கு யாது விளையுமோ என இரக்கம் கொண்டார்; திருநெல்வேலிக்கருகில் ஓர் ஆச்சிரமம் அமைத்து அதில் வசித்து வந்தார். ஒருநாள்

முனிவரைச் சீவக வழுதி தன் கோட்டைக்கு அழைப் பித்தான். அரசன் குடும்பத்திற்கும் கோட்டைக்கும் நன்மையுண்டாகப் பூசைகள் செய்ய வேண்டும் எனக் கூறி முனிவர் அரண்மனையில் ஓர் அறையைத் தம தாக்கிக் கொண்டார்.

3. அரசன் மகள் மனோன்மணி சேர நாட்டரசன் புருடோத்தமனைக் கனவிற் கண்டு, அவனை நேரிற் காணாமலே அவன்மேல் காதல் கொண்டாள். மனோன் மணியின் மனநிலையை முனிவர் தம் கூர்த்த மதியால் அறிந்து கொண்டார். அவர் அரசனை நோக்கி, மனோன் மணிக்கு மண வினை நிகழ்த்த வேண்டும் என்றும், மணமகன் சேர வேந்தனான புருடோத்தமனே என்றும், திருமணத்தைப் பற்றிப் பேச வல்லவன் நடராசனே என்றும் கூறிச் சென்றார். மனோன்மணிக்கு உயிர்த் தோழி வாணி. வாணியின் காதலன் நடராசன். வாணி யின் தந்தை சகடன், சீவகனிடம் நடராசனைப் பற்றி இழித்தும் பழித்தும் இயம்பியிருந்தான். அதை உளங் கொண்ட பாண்டியன் குருமொழியைக் கொள்ளாது குடிலனிடம் ஆலோசனை கேட்டான்.

4. 'புத்தியே சகல சத்தியும்', என்ற கோட் பாடுடைய குடிலன், முனிவர் மொழிந்தபடி திருமணம் நடந்தேறினால் தன் எண்ணம் ஈடேறாது என எண்ணினான்; தன் மகன் பலதேவனைத் தூது அனுப்புவதாகக் கூறினான். "அரசே வஞ்சி நாட்டில் செந்தமிழ் வழங்கும் தேயம் ஒன்றிருக்கிறது. அது நாஞ்சில் நாடு எனப் பெயர் பெறும். சில ஆண்டு களுக்கு முன் சேரர் அதனைக் கைப்பற்றிக் கொண்டனர்.

இப்பொழுது அதனைத் தருமாறு கேட்போம். அவன் மறுத்தால், "மனோன்மணியை மணந்து அந்நாட்டைப் பெறுக, எனக் கூறுவோம். சேரன் திருமணத்திற்கு இசைவான்," என்றனன். சீவகன் குடிலன் கூற்றை நம்பி பலதேவனைத் தூதனாகச் சேரநாட்டுக்கு அனுப்பினான்.

5. சேர வேந்தன் புருடோத்தமன் கனவில் மனோன்மணியைக் கண்டு, அவளை நேரிற் காண இயலாமையால் மனம் புழுங்கி, யாருடனேனும் போர் தொடுத்தால், அதனால் கனாத் தவிர்தல் கூடும் என்று எண்ணிக் கொண்டிருந்தான். இந்நிலையில் பலதேவன் சேரன் அவைக்குச் சென்று, சேரனை இழிவாகப் பேசினான். புருடோத்தமன் சினங்கொண்டு பாண்டி நாட்டின்மீது போர் தொடுத்தான். அச்செய்தியறிந்து சீவகனும் போருக்கு ஆயத்தமானான். இரு திறப் படைகளும் திருநெல்வேலிக்கருகில் சண்டையிட்டன. பாண்டியன் படை பின்வாங்கியது. சேர நாட்டுப் படை கோட்டையைத் தாக்கியது. பாண்டியன் படையில் குழப்பம் ஏற்பட்டதால், பாண்டியன் உயிருக்கே ஆபத்து நேரிட்டது. கோட்டைக் காவலி லிருந்த நாராயணன் சில குதிரை வீரர்களுடன் வந்து அரசனைக் காப்பாற்றி அரண்மனைக்குள் அழைத்துச் சென்றான். கோட்டையின் பல பகுதிகளைச் சேர நாட்டுப் படைகள் அழித்து விட்டன.

6. கோட்டை இவ்வாறு சீரழிந்ததற்குக் காரணம் என்ன என்று மன்னன் மந்திரியிடம் வினவினான். குடிலன், கோட்டைக் காவலிலிருந்த நாராயணன்

அதனை விடுத்துப் போர்க்களம் புகுந்ததால் பகைவர் கோட்டையை அழிக்க நேரிட்டது என்று சாதுரியமாகக் கூறினான். எடுப்பார் கைப் பிள்ளையான மன்னன், தன்னுயிரைக் காப்பாற்றிய நாராயணனைக் கழு வேற்றும்படி ஆணையிட்டான். அவ்வேளையில் அரசன் முனிவரைக் காணச் சென்றமையால் நாராயணன் கழுவேற்றப்படவில்லை. முனிவர், அரண்மனையில் தம்பாலுள்ள அறையிலிருந்து ஆச்சிரமத்துக்குச் செல்ல சுருங்கை ஒன்றை அமைத்திருந்தார். ஆதலின் அரசனையும் மனோன்மணியையும் அவ்வழியாக வெளி யேற வழி கூறினார். அரசன் மறுத்தான்; மனோன் மணியை மட்டும் நள்ளிரவில் அனுப்ப இசைந்தான்.

7. முனிவர் சென்ற பிறகு, மன்னன் குடிலனை வரவழைத்து முனிவர் மொழிந்தவற்றைக் கூறி அவன் கருத்தைத் தெரியலானான். அப்பாதகன் தன் மனக் கோள் நிறைவேற்றற்குரிய காலம் அதுவே என்று எண்ணி, " அரசே, மனோன்மணி இச்சமயம் வெளி யேறுதல் நன்மையே ஆயினும், மணவினை முடிக்காமல் வெளியேறுதல் பழிப்புக் கிடமாகும்," என்றான். அரசன் அந்த நள்ளிரவில் தன் மகளுக்கு ஏற்ற மணமகன் யாவன் என எண்ணி, இறுதியில் பலதேவனுக்கே மணமுடித்து வைக்கத் துணிந்தான். திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தொடங்கினர். மனோன்மணி 'இருதலைக் கொள்ளி எறும்பு போலத்' தத்தளித்து நிலைமையை அறிந்து திருமணத்திற்கு இசைந்தாள்.

8. தான் விரும்பிய விதமெல்லாம் அரசனை ஆட்டிப் படைக்கும் குடிலன், முனிவர் அமைத்த சுருங்கையைக் கண்டு பிடித்து, அது வழியாகச் சேரனது பாசறைக்கருகில் வந்து சேரனைக் கண்டு வணங்கினான். தன்னுடன் வந்து பாண்டியனைச் சிறை செய்து, தன்னை மன்னன் ஆக்கினால், தான் சேரனுக்கு அடங்கி நடப்பதாகப் பணிவுடன் வேண்டிக் கொண்டான். வஞ்சக வழியிலே வாகை சூடக் கருதாத புருடோத்தமன், குடிலனை விலங்கிட்டு, அவனுடன் சுருங்கை வழியாக அரண்மனையை அடைந்தான்.

9. அங்கே முனிவர், சீவகன் முதலியோர் முன்னிலையில் மனோன்மணி பலதேவனுக்கு மாலையிட மணமாலையுடன் நின்று கொண்டிருந்தாள். புருடோத்தமன் தான் கனவில் கண்ட காரிகை அவளே என்பதை உணர்ந்தான். 'பள்ளத்துட் பாயும் வெள்ளம் போல'ப் புருடோத்தமன் அவள் எதிர் சென்று நின்றான். அவளும் அவனைக் கண்டு தன் கனவில் தோன்றிய கட்டழகன் அவனே எனத் தெளிந்து, அவன் கழுத்தில் மணமாலையை இட்டாள். சேரன் வஞ்சகமே உருவெடுத்தாற் போன்ற நஞ்சனைய குடிலனைக் காட்டி அவன் துரோகச் செயலைச் சீவகனுக்கு விளக்கிக் கூறினான். யாவரும் சேரனது செயலையும் குணத்தையும் பாராட்டினர். சுந்தரமுனிவர் ஆணையின்படி சீவகன் தன் மகளையும் மருமகனையும் வாழ்த்தினான். அது கண்ட அனைவரும் ஆனந்தம் அடைந்தனர்.

## அருஞ்சொற்பொருள்:

பிழம்பு — தொகுதி, பற்று — ஆசை, கைப்பாவை — கையால் ஆட்டும் பொம்மை, கொத்தளம் — மதிற்புறம், வதிதல் — வசித்தல், கூர்த்த — கூரிய, மதி — புத்தி, இயம்புதல் — சொல்லுதல், சக்தி — வலிவு, கோட்பாடு — கொள்கை, ஈடேருது — நிறைவேருது, வஞ்சிநாடு — சேர நாடு, நாஞ்சில் — கலப்பை, கூற்று — சொல், புழுங்குதல் - வருந்துதல், தவிர்தல் — நீங்குதல், ஆயத்தம் — முன்னேற் பாடு, சீரழிதல் — சிறப்புக் குலேதல், சாதுரியம் — சாமர்த் தியம், சுருங்கை — பூமிக்குள் அமைத்த சுரங்க வழி, மனக் கோள் — எண்ணம், பாசறை—படைவீடு, வாகை-வெற்றி, காரிகை-பெண், ஆணே-கட்டளே.

## பயிற்சி:

1. பிரித்து எழுதுக:—

நள்ளிரவு, நாடக நூல், சேரவேந்தன், இயம்பியிருந் தான், உளங்கொண்ட, செந்தமிழ், கழுவேற்றுதல், பழிப்புக்கிடம், மணமகன், விலங்கிட்டு.

2. பொருள் எழுதுக :—

அறை, அரை; வழி, வளி; நல்லிரவு, நள்ளிரவு.

## விஞக்கள்

1. மனேன்மணீயத்தைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

2. குடிலன் திருநெல்வேலியைத் தலே நகராக்கக் காரணம் யாது?

3. சுந்தர முனிவர் அரண்மனேயில் ஓர் அறையைத் தமதாக்கிக் கொள்ளக் காரணம் யாது?

4. மனோன்மணியின் நிலையை அறிந்த சுந்தர முனிவர் சீவக வழுதியிடம் யாது கூறிச் சென்றார்?

5. சீவக வழுதி அவர் சொல்லைக் கேளாதது ஏன்?

6. குடிலன், சீவக வழுதியிடம் பலதேவனைத் தூது அனுப்புவதற்கு முன் கூறியன யாவை?

7. புருடோத்தமன் என்ன எண்ணிக் கொண்டிருந்தான்?

8. சேரன் பாண்டி நாட்டின் மீது படையெடுக்கக் காரணம் யாது?

9. கோட்டை அழிவுக்கு காரணம் யாதெனக் குடிலன் கூறினான்?

10. 'சீவக வழுதி எடுப்பார் கைப்பிள்ளை' என்பதற்கு இரண்டு எடுத்துக் காட்டுகள் தருக.

11. குடிலன் தன் மனக்கோள் நிறைவேறும் பொருட்டு சீவக வழுதியிடம் கூறியன யாவை?

12. குடிலன், சேரவேந்தனைக் கண்டு யாது கூறினான்?

13. மனோன்மணி சேரன் கழுத்தில் மாலையிடக் காரணம் யாது?

14. 'பள்ளத்துட் பாயும் வெள்ளம் போல,' 'இருதலைக் கொள்ளி எறும்பு போல' — விளக்குக.

## இலக்கணம்

### (சுட்டுப் பெயர்)

'மனோன்மணி, அவன் மேற் காதல் கொண்டாள்'

'புருடோத்தமன் அவன் எதிரிற் சென்று நின்றான்'

'அவர் அரசனைப் பார்த்தார்'

'அது நாஞ்சில் நாடு எனப் பெயர் பெறும்.'

இங்கே காட்டப்பட்டுள்ள நான்கு சொற்றொடர்களில் அவன், அவள், அவர், அது என்னும் நான்கு சொற்கள் சுட்டின் அடியாகப் பிறந்த பெயர்கள். ஒரு பொருளைச் சுட்டிக் காட்டும் பெயர் சுட்டுப் பெயராகும்.

இங்கே காட்டியுள்ள நான்கு சுட்டுப் பெயர்களும் எப்பெயர்களைச் சுட்டியுள்ளன என்பதைக் கண்டறிக.

---

# 13. ஔவையாரின் அருந்திறன்

1. சேர நன்னாட்டில் அருந் தமிழ் வளர்த்த ஔவையார் தோன்றினார். அவர் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்று நல்லிசைப் புலமை மெல்லியராய் விளங்கினார். கேட்டார்ப் பிணிக்கும் தன்மையமைந்த தமிழ்ச் செய்யுட்களைப் பாடும் ஆற்றலும் பெற்றிருந்தார். அவருடைய பாடல்கள் சொல்லழகும், பொருளழகும், கருத்தாழமும் உடையவை. அவர் இசைத் தமிழும் நாடகத் தமிழும் நன்கு அறிந்து, கற்றவரும், மற்றவரும், கொற்றவரும் போற்றும் அருந்திறன் அமையப் பெற்று, அருந் தமிழ்ப் புலவராய் விளங்கினார். தமிழ் அரசர்களைப் பாடி, அவர்களுக்கு என்றும் இறவாப் புகழ் ஈந்த பெருமை அருந்தமிழ் ஔவையாரைச் சாரும்.

2. ஔவையாரின் அருந்திறனை அறிந்த அக்கால மன்னர்களும் மற்றையோர்களும் அவரிடம் மட்டிலா மதிப்பு வைத்திருந்தார்கள். நாளும் இன்னிசை பாடித் தமிழ் வளர்த்த ஔவையார், அரசர்களையும் வள்ளல்களையும் அடைந்து நம் புலமைத் திறனை வெளிப்படுத்தியும், விறல்பட ஆடியும் அவர்களை மகிழ்விப்பார். அவர்கள் உள்ளம் உவந்து கொடுக்கும் பரிசில்களைப் பெற்றுத் தம் வாழ்க்கையை வளம்பட நடத்தி வந்தார்.

3. கடை எழு வள்ளல்களுள் ஒருவனான அதியமான், தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவன் போர் செய்வதில் இணையற்ற வீரன். மழவர்களுக்குத் தலைவன்; தமிழ்மொழி மீதும் தமிழ்ப் புலவர்கள் மீதும் பெரிதும் அன்புடையவன்; தன்னைப் பாடிவரும் தமிழ்ப் புலவர்களுக்குப் பொன்னும், மணியும், துகிரும், பட்டும் நல்கும் நன்னராளன்.

4. அதியமானுடைய அறிவையும் பண்புகளையும் கொடைத் திறனையும் பற்றி ஔவையார் கேள்விப் பட்டார். அதியமான் அரண்மனையை அடைந்தார். அதியமான் ஔவையாரை அன்புடன் வரவேற்று, மூதாட்டியார் தன்னூருக்கு வந்தது தான் முன் செய்த தவப்பயனே என்று எண்ணி இன்மொழிகள் பல இயம்பி உபசரித்தான். ஔவையார் மிகவும் மகிழ்ந்து, அதியமானுடைய சிறந்த பண்புகளையும், கொடையையும், வீரத்தையும் பாராட்டிப் பல பாக்கள் பாடினார். அதியமான் ஔவையார் பாடலைக் கேட்டு அகமகிழ்ந்தான். ஔவையாரைத் தன்னுடன் சில நாட்கள் தங்கி இருக்குமாறு அன்புடன் வேண்டிக் கொண்டான். ஔவையார் அவனுடன் சில நாட்கள் தங்கியிருந்தார்.

5. அதியமான் தமக்குப் பரிசில் மிகத் தருவான் என்று ஔவையார் எண்ணியிருந்தார்; அவன் ஒன்றும் கொடாமல் காலம் தாழ்த்தினன். அதைக் கண்டு ஔவையார் அவன்மேல் வெறுப்பும் வெகுளியும் கொண்டார். உடனே வாயிற் காவலனை அழைத்து, "வாயிற் காவலனே, அதியமான் புலவர்களுடைய தகுதியை நன்கு அறிந்து கொள்ளவில்லை. என்னைப் போன்ற புலவர்களைப் போற்ற மன்னர் பலர் உளர். இப்பொழுதே இவ்வரண்மனையை விட்டுப் போகின்றேன். எத்திசை செல்லினும் அத்திசையில் எனக்குச் சோறு கிடைக்கும்" என்று கூறிப் புறப்பட்டார்.

6. இச் செய்தியை வாயிற்காப்போன் மூலமாக அதியமான் அறிந்தான்; விரைந்து வந்து ஔவையார் செலவைத் தடுத்தான்; பரிசில்கள் பல கொடுத்தான். ஔவையார் அதியமானின் அருங் குணத்தைப் பாராட்டினர்; அவனை வாழ்த்தினர்.

7. ஔவையார் அதியமான் அவைக்களப் புலவராய் நீண்டகாலம் தங்கியிருந்தார். அதியமான் ஒருநாள் வேட்டையின் நிமித்தம் கானகம் நண்ணினன். வேட்டையாடித் திரும்பும் வழியில் குதிரைமலைச் சாரலில் அமிழ்து விளை நெல்லிக் கனி ஒன்றை அரிதின் முயன்று பெற்றான். அக்கனியை உண்பவர்கள் நீண்ட காலம் உயிர் வாழ்வார்கள் என்பதைத் தெரிந்திருந்தான்; தெரிந்தும் அதனைத் தானுண்ணாது தமிழ் மூதாட்டியாரை உண்பிக்க

எண்ணினன்; அரண்மனையை அடைந்ததும் ஔவையாரிடம் அக்கனியைக் கொடுத்தான்.

8. ஔவையார் அதன் சிறப்பியல்புகளை அறியாது உண்டார்; பின்பு அதன் பெருமையைத் தெரிந்து கொண்டார்; அதியமானுடைய தன்னலங் கருதாத் தன்மையைப் பாராட்டினர்; 'தனக்கென வாழாப் பிறர்க்குறியாளன் அதியமான்;' எனப் புகழ்ந்தார். அதியமான் கருநெல்லிக் கனியைத் தமக்கு நல்கி நீண்டநாள் வாழ்வு கிடைக்கச் செய்தான் அல்லவா? அதுபோல ஔவையாரும் இலக்கிய வானில் ஓர் அழியாத இருப்பிடத்தை அதியமானுக்கு அழித்தார். அவனைத் தமிழ் மொழியுள்ளளவும் வாழச் செய்த பெருமை ஔவையாருக்கு உரியது. ஔவையார், அதியமானை, 'நீல மணிமிடற்று ஒருவன் போல மன்னுக பெரும!' என வாழ்த்தினர்.

9. அதியமான் பல போர்முனைகளில் வாகை மிலைந்தான்; கோவலூரைக் கைப்பற்றினன். ஔவையார் அவன் வெற்றிச் சிறப்பைச் செந்தமிழ்ப் பாக்களாக வடித்து, நாம் படித்து மகிழத் தந்துள்ளார். அவன் புகழ் ஓங்குவதைக் கண்டான் தொண்டைமான். தொண்டைமான் நல்லிசைப்புலவர் வரிசையில் வைத்து எண்ணும் ஏற்றமுடையவன். நற்றிணையில் சில பாடல்கள் அவன் யாத்தவையே. "இளந்திரையம்" என்னும் இன்றமிழ் நூல் ஒன்றும் இயற்றியவன்; பொறாமை காரணமாக அதியமானுடன் போர்

தொடுக்க எண்ணினுன். இதை ஒற்றரால் அறிந்தான் அதியமான். அறைகூவி வீருடன் போருக்கெழுந்தான். தொண்டைமானது தண்டமிழ்ப் பற்றை அறிந்த ஔவையார், அதியமானை அமைதிப் படுத்திக் காஞ்சி செல்ல எண்ணினுர்.

10. ஔவையார், காஞ்சிமா நகரை அடைந்தார். தொண்டைமான் ஔவையார் வருகையை அறிந்து, தாய்முகம் கண்ட சேய்போல அகமும் முகமும் மலர்ந்து வரவேற்றுன். ஔவையார் சில நாட்கள் அவனுடன் உறைந்திருந்தார். தொண்டைமான், ஔவையார் தகடூரிலிருந்து வந்துள்ளார் என்பதைத் தெரிந்து கொண்டான். ஔவையாரை அழைத்துச் சென்று தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டினுன். படைக்கலங்கள் எல்லாம் புத்தம் புதியவை; மலர் மாலை சூட்டப் பெற்றவை; நெய் பூசப் பெற்றவை; மயிர்ப்பீலி அணியப் பெற்றவை. காம்புகள் நன்கு திருத்தப் பெற்று அணியாக அழகுடன் பொலிந்தன. அப்படைக்கலங்கள் ஒருமுறையாவது போர் முகத்தைக் கண்டதுமில்லை; பகைவர் செங்குருதியை உண்டதுமில்லை. பொருட்காட்சி மன்றத்தில் வைக்கப்பட்ட காட்சிப் பொருளாகவே அவைகள் தென்பட்டன.,

11. அவைகளை ஔவையார் கண்ணுற்ருர். தொண்டைமானை நோக்கி, "மன்ன, உன் படைக்கலங்கள் மிகவும் மேம்பட்டவைகள்; காவலுடன் கூடிய அரண்மனையில் அழகாய் இருக்கின்றன. அதியமான் படைக்கலங்கள் காவலின்றிக் கொல்லன் பணிக்களரியில் உள்ளன; பகைவர்களோடு சண்டை

யிடுவதால் கங்கும் நுனியும் முறிந்துள்ளன; அடிக்கடி போர் முனைக்குச் சென்றதால் புலால் நாற்றத்தை யுடையன,'' என்று தொண்டைமானைப் புகழ்வது போன்று பழித்தும், அதியமானைப் பழிப்பது போன்று புகழ்ந்தும் பாடினர். ''உன் படைக் கலங்கள் பார்ப் பதற்கு அழகாக இருப்பினும், போரில் பயன்படுத்தப் படாதவை; அதியமானுடைய படைக்கலங்கள் போர்க் களத்தில் அடிக்கடி பயன்படுத்தப்பட்டவை. அதிய மானும் போர் செய்வதில் மிகவும் திறமையுடையவன். அவனுடன் போர் தொடுத்தால் அவனை வெல்வது கடினம்,'' என்றும் குறிப்பால் விளக்கினர்.

12. அதை அறிந்த தொண்டைமான், தன் இறுமாப்பை விட்டொழிந்தான்; போர் செய்வதால் ஏற்படும் தீமைகளை எண்ணிப் பார்த்தான்; அதியமான் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை அறவே மறந்தான்; தான் செய்யவிருந்த தீய செயலுக்காக மிகமிக வருந்தினன்; தனக்கு அறிவு கொளுத்திய ஒளவையாரைத் தெய்வம் எனத் தொழு தான்; ஒளவையாருடைய ஒரு சிறு செய்யுள் எத்துணை உயிர்களைக் காப்பாற்றியது! என்று எண்ணி வியந் தான்; 'வாழும் உயிரினை வாங்கிவிடல் மண்ணில் யாவர்க்கும் எளிது; வீழும் உடலை எழுப்பிவிட வேந் தனுலும் ஆகாது,' என்பதைத் தெளிந்தான்; தன்னை நல்வழிப்படுத்தி நல்லோர் புகழச் செய்த நல்லிசைப் புலவர் ஒளவையாரை ஏத்திப் பரிசில் பல வழங்கினன். போரை நிறுத்திய ஒளவையாரின் அருந்திறனை அதிய மானும் போற்றினன். இதனல், பண்டைத் தமிழ் புலவர்களுள் பெண்பாற் புலவரும் வேந்தரது அரசியல்

தூதுவராய்ச் சென்று வெற்றி கண்டனர் என்பது வெள்ளிடைமலே என விளங்குகிறது.

## அருஞ்சொற்பொருள்

விறல்-வெற்றி, உவந்து-மகிழ்ந்து, கடை எழு வள்ளல்கள்-பாரி, காரி, ஓரி, நள்ளி, பேகன், ஆய், அதியமான் என்பவர்கள், பரிசில்-வெகுமதி, தகுதி-திறமை, செலவு-செல்லுதல், கோடு-கொம்பு, நண்ணினுன்-அடைந்தான், பிறர்க்குரியாளன்-பிறருக்கு உதவி செய்பவன், நல்கி-கொடுத்து, மிடறு-கழுத்து, மன்னுதல்-நிலைபெறுதல், மிலேதல்-சூடுதல், வென்றி-வெற்றி, ஏற்றம்-பெருமை, யாத்தல்-கட்டுதல்,ஒற்றர்-இரகசியமாகச் செய்தி அறிவோர், சாக்காடு-இறப்பு, பீலி-மயில் தோகை, பொலிதல்-விளங்குதல், குருதி-இரத்தம், மன்றம்-சபை, பணிக்களரி-வேலே செய்யும் இடம், கங்கு-பக்கம், பார்-பூமி.

## பயிற்சி

1. பிரித்து எழுதுக:—

மயிற்பீலி, செங்குருதி, பொருட்காட்சி.

2. பொருள் எழுதுக:—

உரை, உறை; அறி, அரி; முரி, முறி; ஒளி, ஒலி.

## வினக்கள் :

I. விடை கூறுக:—

1. சங்க காலத் தமிழகத்தைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.

2. ஔவையாரின் தன்மைகளேக் கூறுக.

3. ஔவையாரால் பாராட்டப் பெற்ற மன்னர் யாவர்?

4. ஔவையார் தமது வாழ்க்கையை எவ்வாறு வளம்பட நடத்தி வந்தார் ?

5. கடையெழு வள்ளல்கள் யாவர் ?

6. பரிசில் பெறுவதற்கு முன் ஔவையார் வாயிற் காவலனிடம் யாது கூறினர் ?

7. தொண்டைமான் இளந்திரையனைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.

8. தொண்டைமானது படைக்கலக் கொட்டிலைப் பார்த்தவுடன் ஔவையார் யாது கூறினர் ?

9. ஔவையாரின் அருந்திறனைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

II. இடம் சுட்டுக:—

1. "நீலமணி மிடற்று ஒருவன் போல மன்னுக பெரும!"

2. "எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"

3. "ஒரு முறையாவது போர்முகத்தைக் கண்டது மில்லை."

## இலக்கணம்

### [வினைப் பெயர்]

கடையெழு வள்ளல்கள் யாவர் ? ஔவையார் யாது கூறினர் ? இங்கு வந்தவர் யார் ? எவன் நல்ல பையன் ? எது நல்ல வழி ?

இச்சொற்ருெடர்களில் யாவர், யாது, யார், எவன், எது என்னும் சொற்களே வினுப் பொருளைத் தருவன. ஒருசொற் ருெடரில் வினுப்பொருளைத் தரும் பெயர்கள் வினுப் பெயர்கள் என்று சொல்லப்படும். இவ்வினுப் பெயர்கள் ஐந்து பால்களிலும் வரும்.

---

## 14. தமிழ்த்தாய் கூறும் தன் வரலாறு

1. அன்பிற்குரிய அருமை மக்களே, உறங்கியது போதும், உணர்வு கொண்டு எழுங்கள்! மடியென்னும் மாசு உங்கள் வாழ்க்கையில் இடம் பெற்ருல், இந்த மண்ணுலகில் நீங்கள் பெருமையுடன் வாழ முடியாது. விழித்து எழுங்கள்! வீறுகொண்டு உழையுங்கள்! உலகில் உள்ள பிறநாட்டு மக்கள் தம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கும், தாய்மொழியின் வளர்ச்சிக்கும் பாடுபடும் வகையினைப் பாருங்கள்!

குழந்தைகளே! "யார் இவள்? நமக்கு அறிவுரை கூற இவளுக்கு என்ன தகுதி இருக் கிறது?" என்று எண்ணுதீர்கள். நான் தான் உங்கள் அருமைத் தமிழன்னை; உங்களைப் பெற்றெடுத் தவள்; பேணி வளர்த்துத் தாலாட்டிச் சீராட்டிப்

பாராட்டிய நாள்முதல் உங்களுடன் தொடர்பு கொண்டு உங்கள் முன்னேற்றத்திலும், கல்வியறிவிலும் பெரிதும் அக்கரை கொண்டவள். அன்னை நலத்தைக் காப்பது அருமை மைந்தர்களின் கடமையல்லவா? நான் பண்டைக் காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கினேன். இடைக் காலத்தில் அருமை அறியாத மைந்தர்களின் புறக்கணிப்புக்கு ஆட்பட்டு அல்லலுற்றேன்; இன்று ஓரளவு மன ஆறுதல் அடைந்துள்ளேன். என் அருமை மக்களாகிய உங்கள் மனதில் ஒரு மாற்றம் இருப்பதை உணர்கின்றேன். இடைக் காலத்தில் அறியாமையால் செய்த தவறுகளை உணர்ந்து விட்ட நீங்கள் இன்று என்னுடைய நலத்தைப் பாதுகாக்க முன்வந்துள்ளீர்கள்! இந்த நேரத்தில் நீங்கள் சோம்பல் கொண்டால், மறுபடியும் என்னை வாழ்விக்க உங்களால் முடியாது. எனது பழம்பெரு வரலாற்றைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். உங்கள் உள்ளத்தில் புத்துணர்ச்சியும் உடலில் புது வலிவும் ஏற்பட அது உதவும்.

3. நான் எப்போது பிறந்தேன் என்பது எவராலும் அறிய முடியாத ஒன்றாகும். உலகில் நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்து நானும் வாழ்ந்து வருகிறேன். பொதிய மலையில் வாழ்ந்த அகத்தியன் என்னும் அருந்தவ முனிவன் என்னை வளர்த்துவந்தான். பொதிய மலைச் சாரலிலே நான் பொன்னூசல் ஆடினேன். பாண்டியர்கள் மடிமீது வைத்து என்னைப் பாராட்டி வளர்த்தார்கள். பாவன்மை படைத்த பாவலர்கள் மதுரையில் சங்கம் அமைத்து என்னைப் பெருமைப் படுத்தினார்கள். அந்நாளில் என் மைந்தர்கள்

என்னைப் பாராட்டிய விதத்தை என்னென்று உரைப்பேன்!

4. நக்கீரன், கபிலன் முதலிய என் மைந்தர்கள் பற்பல நூல்களை இயற்றி என் பாதத்தில் அணிவித்தார்கள். இளங்கோ என்னும் அருமை மகன் என் பாதங்களைச் சிலம்பினுல் அணி செய்தான். சாத்தன் என் இடைக்கு மணிமேகலையைப் பூட்டினுன். குண்டலகேசி என் செவிகளில் இடம் பெற்றது. வளையாபதி என் கை வளையாய் அமைந்தது. வள்ளுவன் வான் குறளை எனக்குக் காணிக்கையாக்கினுன்.

5. என் வீர மைந்தர்கள் திக்கெட்டும் என் பெருமையைப் பறைசாற்றி வந்தார்கள். மூவேந்தர்கள் இமயமுதல் குமரிவரை என் புகழைப் பரப்பினுர்கள். அகத்தில் மகிழ்ச்சி நிறைய அரியணையில் வீற்றிருந்தேன் நான். அந்நாளில் என் பெருமையைக் குலைக்கவும், என் நிலையைத் தாழ்த்தவும் ஆரிய மொழி என்னும் அணங்கு என் மைந்தர்களுடன் உறவாடத் தொடங்கினுள். ஆனுல் அப் பெண்மகள் என் வளர்ச்சியைத் தடை செய்ய முடியாமல் தடுமாற்றம் உற்ருள். அக்காலத்தில் என்னைப் போன்ற எழிலுடன், மொழிகளாகிய பெண்டிர் பலர் விளங்கினர்! அந்தோ! காலமென்னும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டார்கள்! எத்துணையோ இடையூறுகள் எனக்கும் வாய்த்தன. ஆனுல், என் வலிமையினுலும், இனிமையினுலும் அவற்றை வென்றேன்.

6. மைந்தர்களே, இவ்வாறு சீரும் சிறப்புமாகப் பாரோர் புகழ வாழ்ந்த நான் இடைக்காலத்தில் உற்ற துன்பங்களை எண்ணிப் பாருங்கள்! என் மைந்தர் களிடையே ஒற்றுமையில்லாக் குறை நிலவியது. **'யாதும் ஊரே; யாவரும் கேளிர்'** என்றும், **'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'** என்றும் உலகிற்கு உயரிய நெறியைப் போதித்த என் மக்கள் இடைக் காலத்தில் சமயப் பூசல்களில் ஈடுபட்டார்கள். புறச் சமயத்தாரைத் தூற்றினார்கள். இந்நிலையில் எனது பெருமையையும் சிறப்பையும் அவர்கள் சிறிது சிறிதாக மறக்கத் தொடங்கினார்கள். இத்தகைய இன்னல் மிகுந்த நிலையிலும் கவி பாடும் ஆற்றல் பெற்ற சில மைந்தர்கள் என் பெருமையைப் போற்ற முற்பட்டார்கள். **கம்பன்** என்னும் அருமை மகன், தன் கற்பனைத் திறனால் மக்களின் உள்ளங்களை கவர்ந் தான். சுவை பொருந்திய **இராமாயாணத்தை** இயற்றி எனக்கு அணிவித்தான். **திருத்தக்க தேவன், சிந்தாமணியை** என் சென்னியில் பொருத்தினான். **சேக்கிழான்** பெருமைக்குரிய **திருத்தொண்டர் புராணத்தைப்** பாடி எனக்குப் பாமாலை சூட்டினான். இத்துணைச் சிறப்புடன் ஈடும் எடுப்பும் இன்றி வாழ்ந்து வந்த நான் பதினேழாம் நூற்றாண்டிற்குப் பின்னர் மிக்க சீரழிவை அடைந்தேன்.

7. அமைதியாய் வாழ்ந்த என் மக்களுடைய வாழ்க்கையில் அயலார் புகுந்து அல்லல் விளைத்தனர். வெள்ளையர்களின் ஆட்சி இந்நாட்டில் பரவியது.

ஆங்கிலம் என்னும் அழகு மங்கையொருத்தி எனக்குக் காலனாய் வாய்த்தாள். அவள் அருளைப் பெற்றால் உயர்பதவி பெற முடியும் என எண்ணிய என் மைந்தர்கள், பெற்ற தாயாகிய என்னைப் புறக்கணித்தார்கள்; அரியணையில் அமர்ந்து ஆட்சி புரிந்த என்னை அடிமைப் படுகுழியில் தள்ளி விட்டார்கள். நான் சீரழிந்தேன்; சிறப்பு இழந்தேன்; செங்கோல் இழந்தேன். அவ்வளவில் என் துன்பம் நின்று விட்டதா; தாங்காத சோகத்தை அளிக்கும் தொடர் கதையாக அது நீண்டு கொண்டிருந்தது. புத்தம் புதிய கலைகளைப் பற்றிக் கூறும் சொல்வளம் என்னிடம் இல்லையென்று கூறித் திரிந்தனர் சிலர். அச்சொற்கள் என் உயிரைக் கொள்ளை கொள்வது போன்ற பெருந்துன்பத்தை எனக்கு அளித்தன. எத்தனை நாட்கள் எனக்கு ஏற்பட்ட இழிவை நினைத்து நான் கண்ணீர் விட்டுக் கதறியிருக்கிறேன்! நான் பட்ட தொல்லைகளுக்கெல்லாம் முடிவு காலம் வந்து விட்டது.

8. மைந்தர்களே, நமது நாடு அயலாரின் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது. நீங்கள் அடிமை விலங்கை முறித்து என்னை மீட்டு விட்டீர்கள். என்னை இந்த நாட்டின் ஆட்சிமொழியாகவும் ஆக்கிவிட்டீர்கள். கலைச்சொற்கள் இல்லையென்ற குறையையும் போக்க முயன்று வருகிறீர்கள். ஆனால் நீங்கள் இந்த அளவில் மகிழ்ந்து சும்மா இருத்தல் கூடாது. பிற மொழிகளில் உள்ள உயர்ந்த கலைச்செல்வங்கள் யாவற்றையும் என்னிடம் கொண்டுவந்து சேருங்கள். புதிய புதிய கலை நூல்களை இயற்றி என்னை அணி செய்யுங்கள்; இப்பொழுதே எழுங்கள்; என் மேன்மைக்குப் பாடுபட

உறுதி கொள்ளுங்கள்; வருங்காலம் உங்களுக்கு வாழ்வு அளிக்கும்! தமிழர் பெருமை தரணியெங்கும் பரவும்! வாழ்க உங்கள் முயற்சி!

## அருஞ்சொற்பொருள்:

உணர்வு - உணர்ச்சி, மடி-சோம்பல், பேணி-போற்றி, வளே-வளேயல், மூவேந்தர்கள்-சேர சோழ பாண்டியர்கள், அரியணே - சிங்காசனம், பாரோர் - உலகில் உள்ள மக்கள், நிலவியது - விளங்கியது, சமயப் பூசல் - மதப்போர், இன்னல் - துன்பம், ஈடு - சமம், எடுப்பு - உயர்வு, காலன் - இயமன், புறக்கணித்தல் - அலட்சியம் செய்தல், தரணி - உலகம், சென்னியில் - தலேயில், அகத்தில் - உள்ளத்தில்.

## விஞக்கள்

1. தமிழ் எங்கு வளர்ந்தது? அவளே வளர்த்தவன் யாவன்?

2. பண்டைகாலப் புலவர்கள் தமிழை எவ்வாறு சிறப்பித்தனர்?

3. இடைக்காலத்தில் தமிழ் அடைந்த நிலே யாது?

4. அயலார் ஆட்சியில் தமிழன்னே உற்ற இன்னல்கள் யாவை?

5. நம் நாடு விடுதலே பெற்ற பிறகு தமிழ் எவ்வாறு சிறப்பு அடைந்துள்ளது?

6. தமிழ்த்தாய் கூறும் அறிவுரைகள் யாவை?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களிற் பயன்படுத்துக :—

பெருமையுடன், முன்னேற்றம், அறியாமை, புத்துணர்ச்சி, காணிக்கை, அல்லல், மேன்மை.

2. பின்வரும் எதிர்ச் சொற்களை இணைத்து எழுதுக :—

பெருமை, ஒற்றுமை, மேன்மை, உயர்ந்த, அருமை, வன்மை, அகம், இனிமை, புகழ்ச்சி, குறைவு.

மேன்மை, வேற்றுமை, இகழ்ச்சி, புறம், நிறைவு, கீழ்மை, இன்னுமை, சிறுமை, தாழ்ந்த, எளிமை.

3. ஒரு பொருள் தன் வரலாறு கூறுவது போன்று ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

### (திணை)

கண்ணன் படிக்கிருன்.
மாடு மேய்கிறது.
மரம் வளர்கிறது.
நிலம் வலிது.

இச் சொற்றொடர்களில் கண்ணன், மாடு, மரம், நிலம் என்னும் பெயர்கள் நான்கும் பொருட் பெயரே. அவை இயல்பில் வேறுபாடுடையன. கண்ணன் பகுத்தறியும் ஆறறிவுள்ளவன் ; மாடு பகுத்தறியும் அறிவு அற்றது. ஆகவே, இந்நான்கு பெயர்களையும் ஒரே இனமாகக் கொள்ளுவது தவறல்லவா ? அதனுல் பகுத்தறியும் அறிவுள்ள உயிர்களை மட்டும் ஓரினமாகவும், மற்றைய எல்லாவற்றையும் ஓரினமாகவும் பிரித்திருக்கின்றனர். இப்பிரிவு இலக்கணத்தில் திணை எனப் பெயர் பெறும்.

மனிதர்களும் தேவர்களும் **உயர்திணை.** அவ்விருவரையும் தவிர மற்ற உயிருள்ள பொருள்களும் உயிர் இல்லாத பொருள்களும் **அஃறிணை** ஆகும்.

கீழ்வரும் சொற்களிலிருந்து உயர்திணை, அஃறிணைச் சொற்களை எடுத்து எழுதுக:—

குழந்தைகள், இவள், தமிழ்த்தாய், நக்கீரன், கபிலன், மணிமேகலை, சிலம்பு, பெண்டிர், தேவன், எருமை, வீடு, கிளி, மலை, ஆதிசேடன்.

---

# 15. ஹென்றி போர்டு

1. 'உழைப்பே உயர்வளிக்கும்' என்பது ஆன்றோர் வாக்கு. உழைப்பினால் உயர்வடைந்தவர் பலர். அவருள் ஹென்றி போர்டு என்பவரும் ஒருவராவர்.

2. ஹென்றி போர்டு அமெரிக்க ஐக்கிய நாடுகளுள் ஒன்றாகிய மிச்சிகன் நாட்டில் டியர்பார்ன் என்னும் சிற்றூரில் 1863-ம் ஆண்டு, ஜூலைத் திங்கள் 30-ம் நாள் பிறந்தார். அவர் பெற்றோர் வறியவர்; பண்ணைகளில் வேலை செய்து வாழ்க்கை நடத்தினர். ஹென்றி போர்டு முதலில் தாயிடமே கல்வி கற்றார்; பின்னர், பள்ளியிற் சேர்ந்து படித்தார். பள்ளிப்பாடம் அவருக்கு வேம்பாகவே இருந்தது.

3. அக்காலத்தில் உழவர்கள் மிக எளிய நிலையில் இருந்தார்கள். உழு தொழிலில் அவர்களுக்குக் கிடைத்த ஊதியம் மிகக் குறைவாகவே இருந்தது. உழவுத் தொழிலை எளிதாகச் செய்வதற்குரிய பொறி ஒன்றும் இல்லாமையால், அவர்கள் உடல் வருந்தி உழைத்து வந்தார்கள். அதனைக் கண்ட ஹென்றி போர்டு, அவர்களது உழைப்பை எளிதாக ஆக்குவதற்குரிய பொறியொன்றமைக்க ஆர்வங் கொண்டார். ஆனால், சிறிது காலத்தில் அவரது உள்ளத்தில் வேறொரு புதிய எண்ணம் தோன்றியது. மக்கள் விரைவாக ஓர் இடத்திலிருந்து வேறோர் இடத்திற்குப் போக உதவும் ஓர் இயந்திரத்தை உற்பத்தி செய்ய வேண்டுமென்பதே அந்த எண்ணம். அஃது அவரது உள்ளத்தில் வேரூன்றி வளர்வதாயிற்று.

4. பன்னிரண்டு ஆண்டுப் பருவமுடைய இளைஞராயிருக்கும்போதே போர்டு ஓர் இயந்திரத்தைச் செய்ய முயன்றார். அதற்கு வேண்டிய பல பொருள்களைச் சேர்த்தார். ஒரு நாள் நீராவியால் இயங்கிய ஓர் ஊர்தியைக் கண்டார்; அதனைச் செலுத்தியவரிடம் சென்று அதனைப் பற்றிய பல நுட்பங்களைக் கேட்டறிந்தார். ஒரு நாள் நண்பர் ஒருவர் கடிகாரமொன்றை அவருக்குப் பரிசாகக் கொடுத்தார். போர்டு அதனைப் பல தடவை பிரித்தும் பொருத்தியும் பார்த்து அதன் அமைப்பு முறையை நன்கறிந்து கொண்டார்.

5. இவ்வாறு போர்டுக்கு வயது பதினேழாயிற்று. அவர் தம் தந்தையாரிடம் அனுமதி பெற்று ஓர் இயந்திரத் தொழிற்சாலையில் பயிற்சி பெற்றார்.

பகல் வேளையில் இயந்திரத் தொழிற்சாலையில் பயிலு வதும், இரவு வேளையில் கடிகாரங்களைச் செப்பம் செய்வதுமாக மூன்றுண்டுகளைக் கழித்தார். பின்னர் நீராவியால் இயங்கும் பொறிகளைச் செய்து வாணிகம் நடத்திய வெஸ்டிங் ஹௌஸ் என்னும் கம்பெனியில் சேர்ந்து, அங்கு நீராவிப் பொறிகளைச் செப்பம் செய்யும் தொழிலைச் செய்து வந்தார்.

6. போர்டுக்கு திருமணத்திற்குரிய பருவம் வந்தது. பெற்றேரின் இசைவு பெற்று அவர் கிளாரா என்னும் பெண்மணியை மணந்தார். பின்பு அவர் தம் தந்தையாரிடமிருந்து நாற்பது ஏக்கர் நிலம் வாங்கி அவ்விடத்தில் ஒரு வீடு அமைத்து, இல்லறம் நடத்தி வந்தார். தாம் கண்டுபிடித்த மரமறுக்கும் கருவியால் அங்குள்ள தேக்கு மரங்களை அறுத்து விற்று வாழ்க்கை நடத்தினர். இங்ஙனம் சில ஆண்டுகள் கழிந்த பின் போர்டு, டெட்ராய்ட்டு மின்சாரக் கம்பெனியில் பொறி யியல் வல்லுநராய் அமர்ந்தார்; ஆதலால், தம் மனைவி யுடன் அங்கு சென்று வாழ்ந்து வரலானர். அங்கு வாழ்ந்து வருகையில் அவர் இளமையிற் கண்ட கனவு நனவாகும் காலம் நெருங்கியது. அவர் தாம் அரிதின் முயன்ற மோட்டார் வண்டியை முதன் முதலாகச் செய்து முடித்து வீதியில் ஓட்டிக் காட்டினர். அஃது அவர் விரும்பிய முறையில் அமையாதபடியால் அதனை விற்று வேறோர் ஊர்தியமைத்தார்.

7. அக்காலத்தில் வேறு பலரும் மோட்டார் வண்டிகளைச் செய்ய முற்பட்டனர். ஆதலால்,

மோட்டார் வண்டிப் பந்தயங்கள் மிகுதியாக நடை பெற்றன. போர்டு அவ்விதப் போட்டியொன்றில் பங்கு கொண்டார். அவரது மோட்டார் மணி யொன்றுக்கு 91.37 மைல் விரைவில் ஓடி வெற்றி பெற்றது. மக்கள் ஆரவாரம் செய்து போர்டை வாழ்த்தினார்கள். அது முதல் போர்டின் புகழ் எங்கணும் பரவத் தொடங்கிற்று.

8. இங்ஙனம் புகழ் படைத்த போர்டு, தமது தளரா முயற்சியின் பயனாக 1903-ஆம் ஆண்டு போர்டு மோட்டார் கம்பெனி என்னும் பெயரால் ஒரு மோட்டார் தொழிற்சாலையை நிறுவினார். ஆறாயிரம் பவுன் முதற்பொருளாகக் கொண்டே இத் தொழிற்சாலை தொடங்கப்பட்டது. இக்கம்பெனியில் மோட்டாரின் பற்பல பாகங்களும் தனித்தனியாகத் தொழிற்கூடங் களில் செய்து முடிக்கப் பெற்றன. முதல் ஆண்டில் ஒரே அமைப்பினையுடைய 1780 வண்டிகளும், மறு ஆண்டில் இரு வேறு அமைப்பையுடைய 1695 வண்டி களும் செய்யப்பட்டன. முதன் முதல் 300 தொழி லாளர் அங்கு வேலை செய்தனர். வர வர இரண்டாயிர வருக்கும் மேற்பட்டோர் உழைத்து வரலாயினர். இப்போது 1,60,000 பேர் வேலை செய்கின்றனர்.

9. அங்கே தொழில் நடைபெறும் முறை மிகச் சிறந்ததாகும். மோட்டார் வண்டியின் வெவ்வேறு உறுப்புக்களைத் தனித்தனியே தொழிற் கூடங்களில் செய்வார்கள். அவ்வுறுப்புக்கள் மின்சார இயக் கத்தால் குறிப்பிட்ட இடங்களில் வந்து சேரும்.

ஆங்காங்கே உறுப்புக்களை ஏற்ற முறையில் இணைப் பதில் சிலர் ஈடுபட்டிருப்பர். அவர்கள் இடம் விட்டு இடம் பெயரத் தேவையில்லை. இவ்வாறு இணைக்கப் பட்டு வண்டி முழு உருவம் பெறுகிறது. இம்முறையில் மிகவும் குறைந்த நேரத்தில் வேலை செய்யப்படுகிறது.

10. இங்ஙனம் போர்டு, மோட்டார் தொழிலில் தம்மை ஒப்பாகும் மிக்காரும் இல்லை என்னுமாறு விளங்கி, 'தொழிலரசர்' என்னும் பாராட்டிற்குரிய வராய்த் திகழ்ந்தார். தொழிற் கல்வியால் தாம் உயர் வடைந்தாற்போல உலகமும் உயர்வடைய வேண்டும் என்னும் நல்ல நோக்கத்தோடு, 1916-ஆம் ஆண்டு போர்டு தொழிற்கல்விச் சாலை யொன்றை நிறுவினர். அங்கு மாணவர்களுக்குப் பொருள்களைச் செய்ய நேர் முகமாகக் கற்பிக்கப்படுகிறது. இருநூறு இளைஞர் அங்குக் கல்வி கற்று வருகின்றனர். நூற்கல்வி சிறிது நேரமும், தொழிற்கல்வி அதிக நேரமும் கற்பிக்கப்படு கின்றன. மாணவர்களின் தகுதிக்கேற்ப நானூறு டாலர் முதல் அறுநூறு டாலர் வரையில் உபகாரச் சம்பளம் கொடுக்கப்படுகிறது.

11. இவ்வாறு தொழிற்கல்வியை ஊக்கி வரும் வள்ளல் ஹென்றி போர்டு, ஒரு மருத்துவக் கூடமும் நிறுவியுள்ளார். அங்கு ஒரு நோயாளியை மருத்துவர் பலர் பரிசோதிப்பர். பின்னர், அவர்கள் தத்தம் கருத்தைத் தலைமை மருத்துவ நிபுணருக்குத் தெரிவிப் பார்கள். தலைமை மருத்துவர் நோயாளியை நேரிற் பார்த்து நோயை நன்கு ஆராய்ந்தறிந்து, துணை

மருத்துவரின் குறிப்புகளையும் நோக்கி, ஏற்ற மருந்தைக் கொடுப்பார். இம்முறை உலகில் வேறு எங்குமே இல்லையெனலாம்.

12. இத்தகைய அரிய சேவையுள்ளம் படைத்த ஹென்றி போர்டு, ஊக்கமும், விடாமுயற்சியும் உடையவர். இயற்கையாகவே நுண்ணறிவுடையவர், 'உண்மையும் உழைப்புமே வெற்றி தரும்' என்னும் கொள்கையைக் கடைப்பிடித்தவர். தொழிலாளரிடம் மிகவும் அன்புடையவர். ஏழைகளிடம் கருணை காட்டுபவர். அவர் தமது தொழிற்சாலையில் குருடர், செவிடர், முடவர் முதலியவர்களையும் சேர்த்து ஆதரித்தார். ஒரு தொழிலாளிக்கு ஒரு நாளைக்கு ஆறு டாலர் முதல் பத்து டாலர் வரையில் சம்பளம் கொடுக்கிறார்.

13. இத்தகைய சீரிய பண்புகள் அமைந்த போர்டு உலக மக்களுக்குப் பின் வருமாறு பல அறிவுரைகள் கூறியுள்ளார். "ஒழுங்குடனும் உண்மையுடனும் தொழில் நடத்த வேண்டும். நேர்மையான முறையில் பணக்காரனாக விரும்புபவன் இடைவிடாது உழைக்க வேண்டும். மனிதன் தனது ஊக்கத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டும். தனது கடமையைக் கருத்துடன் செய்வதே இறைவனுக்குச் செய்யுந் தொண்டு. கடமையுணர்ச்சியும் நேர்மையான வாழ்க்கையுமே இன்ப வாழ்க்கைக்கு அடிப்படை."

14. இங்ஙனம் உயர்ந்த புகழீட்டிய அரும் பெருங் குணங்களையுடைய போர்டு, 1954-ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்க்கையை நீத்தார். பின்னர் அவர்

மகனுகிய எட்சல் போர்டு என்பவரே போர்டு நிலையத்தின் உரிமையாளரானுர்.

15. தளரா ஊக்கத்தால் நிகரற்று விளங்கினுர் போர்டு. குடிசையில் பிறந்து கோமகனுய் வாழ்ந்தார். உயர்ந்த பண்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாய் இலங்கினுர். அவரது வாழ்க்கை வழிகளை நாமும் பின்பற்றுவோமாக.

## அருஞ்சொற்பொருள்

பண்ணை—வயல் (கழனி), ஊதியம்—வருவாய், பொறி—இயந்திரம், ஆர்வம்—ஆசை, ஊர்தி—வண்டி, வாணிகம்—வியாபாரம், நுண்ணறிவு—நுட்ப அறிவு, சீரிய—சிறந்த.

## பயிற்சி :

பிரித்தெழுதுக:—

இவ்வாறு, முதன் முதல், பற்பல, தொழிற்கல்வி, பெருங்குணம்.

## கேள்விகள்

1. ஹென்றி போர்டுக்கு இளமையிலேயே பொறியியலில் ஆர்வம் இருந்தது என்பதை விளக்குக.
2. போர்டுக்குத் தொழிற் பயிற்சி எங்ஙனம் கிடைத்தது ?
3. போர்டு எவ்வாறு இல்வாழ்க்கை நடத்தினுர் ?
4. போர்டின் புகழ் எங்கும் பரவத் தொடங்கிய வரலாறு யாது ?
5. போர்டு மோட்டார் கம்பெனியைப் பற்றிக் கூறுக.
6. போர்டின் தொழிற்சாலையில் மோட்டார் எங்ஙனம் செய்யப்படுகிறது ?

7. போர்டின் தொழிற் கல்வியைப் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

8. போர்டின் மருத்துவக்கூடத்தில் நோயாளிக்கு எவ்விதம் மருந்து கொடுக்கப்படுகிறது ?

9. போர்டின் சீரிய பண்புகள் யாவை ?

10. போர்டு கூறிய அறிவுரைகள் எவை ?

## கட்டுரைப் பயிற்சி

கீழ் வருபவை பற்றி ஒவ்வொரு பக்க அளவில் கட்டுரை எழுதுக:—

(1) ஹென்றி போர்டின் பொறியியல் ஆர்வம்.
(2) போர்டு தொழிற்சாலை.
(3) போர்டின் குண நலன்கள்.

## இலக்கணம்

### (பால்)

முருகன் அருள் செய்தான்.
வள்ளி மயிலைக் கண்டாள்.
மனிதர்கள் உண்டார்கள்.

முருகன் ஆண்பால், வள்ளி பெண்பால், மனிதர்கள் பலர் பால். வினை முற்றுக்களை கொண்டும் பால்களை அறியலாம். செய்தான், கண்டாள், உண்டார்கள்—இவ்வினை முற்றுக்களுக்கு எழுவாய் முறையே ஆண்பால் பெண்பால் பலர்பால் ஆகவே அமையும் எனத் தெரிகிறதல்லவா? இங்கே காட்டப்பட்ட முருகன், வள்ளி, மனிதர்கள் எனும் மூன்று சொற்களும் உயர்திணைச் சொற்களல்லவா? ஆகவே உயர்திணை மூன்று பால்களைக் கொண்டது என்பதை அறிகிறோம். பால்—பகுப்பு.

உயர் திணையை ஆண்பால், பெண்பால், பலர்பால் எனப் பகுக்கலாம். அதுபோல அஃறிணையைப் பிரிக்க முடியுமா ? முடியாது. ஏன்? உயிருள்ள விலங்கு பறவை முதலியவற்றுள் சிலவற்றிற்குத்தான் ஆண், பெண் என்னும் பாகுபாடு அஃறிணையில் காணப்படுகிறது. உயிருள்ள மரம், செடி முதலியவற்றிலும் கல், மண், மலை, கட்டில் முதலிய உயிரற்ற பொருள் எல்லாவற்றிலும், ஆண், பெண் என்ற பிரிவுகள் இல்லை. மயில் அகவுகிறது. மரங்கள் வளர்கின்றன. மயில் ஒன்றன்பால், மரங்கள் பலவின்பால். ஒன்றைக் குறிப்பது ஒன்றன்பாலாகும். பலவற்றைக் குறிப்பது பலவின்பால் ஆகும்.

உயர்திணை மூன்று பால்களை உடையது. (1) ஆண் பால், (2) பெண்பால், (3) பலர்பால்.

அஃறிணை இரு பால்களை உடையது. (1) ஒன்றன்பால் (2) பலவின்பால். இவைகளைச் சேர்த்து ஐம்பால் என்றும் கூறலாம்.

---

# 16. மாணவரும் பொதுநலத் தொண்டும்

1. நமது பாரதநாடு பல்லாண்டுகளாக அயலாரின் ஆட்சிக்கு அடிமைப்பட்டுத் தன் உரிமைகள் அனைத்தையும் இழந்து, நம் நாட்டின் தொழில்களும் கலைகளும் நசித்துப் போயின. நாட்டு மக்கள் பல தொல்லைகளை அனுபவித்தார்கள். நாட்டு விடுதலையில் ஆர்வங்கொண்ட நல்லோர் பலர் மேற்கொண்ட முயற்சியால், இந்நாடு 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள், பதினைந்தாம் நாளில் அயலார் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது. அதன் பின்னர், 1950-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 26-ஆம் நாளன்று குடியரசு நாடாயிற்று. நாம் அனைவரும் முழு உரிமை பெற்ற நாட்டின் குடிமக்கள் ஆகிவிட்டோம். எல்லோரும் இந்நாட்டு மன்னராக வேண்டுமென்று பாரதியார் கண்ட கனவு நனவாயிற்று.

2. இவ்வாறு அரும்பாடுபட்டு நாம் பெற்ற உரிமையைப் பேணிப் போற்ற வேண்டுவது நமது கடமையாகும். நாம் அனைவரும் தன்னலம் கருதும் மனப்பான்மையை விடுத்துப் பொது நலத்திற்குப் பாடுபட வேண்டும். அதிலும், குறிப்பாக மாணவர்கள் பொதுநலப் பணிகளில் ஈடுபடுவது மிகவும் இன்றியமையாததாகும். ஏனெனில், மாணவர்களே ஒரு நாட்டின் வருங்கால முன்னேற்றத்தில் பெரும் பங்கு வகிக்கப் போகின்றவர்களாய் இருக்கின்றார்கள். இக்கால மாணவர்களே வருங்காலத்தில் தலை

சிறந்த தலைவர்களாகவும், சிறந்த விஞ்ஞானிகளாகவும், கலை வல்லுநர்களாகவும் விளங்குதற்கு உரியவர்கள். எனவே, அவர்களிடம் பொதுநலத்திற்குப் பாடுபடும் மனப்பான்மை வளரவேண்டுவது மிகவும் அவசிய மாகும். இக்கருத்தினாலேதான் நமது நாட்டுச் சான்றோர்கள் மாணவர் யாவரும் பொதுநலப் பணி களில் ஈடுபடவேண்டும் என்று கூறி வருகிறார்கள். நமது நாட்டின் பிரதம மந்திரியான ஜவஹர்லால் நேரு அவர்கள் கல்லூரிகளில் பயிலும் மாணவர்கள் பட்டம் பெறுவதற்கு முன்னால் ஓராண்டுக் காலம் கட்டாய மாகப் பொதுநலப் பணிகளில் ஈடுபட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி வருகின்றார்கள். இனி மாணவர்கள் மேற்கொள்ளுதற்குரிய பொதுநலப் பணிகள் யாவையென நோக்குவோம்.

3. நம் நாட்டு மக்களிற் பொரும்பாலோர் கல்வி யறிவு அற்றவராய் உள்ளனர். அவர்கள் தூய்மையாக வாழ்வதன் அவசியத்தை அறியாமல் இருக்கின்றார்கள். அம்மக்கள் தங்களுடைய இல்லங்களையும், சுற்றுப்புறங் களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளாமையால் பல நோய்களுக்கு உள்ளாகி வருந்துகின்றார்கள். மாணவர்கள் தங்களுடைய ஓய்வு நேரங்களில் இத்தகைய மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும். அவர்கள் வாழும் இடங்களுக்குச் சென்று சுத்தத்தின் அவசியத்தை விளக்குதல் வேண்டும். அவர்களுடைய இல்லங்களையும் சுற்றுப்புறங்களையும் தூய்மைப் படுத்திக் காண்பித்து அவர்களும் அம் முறையில் வாழக் கற்பிக்க வேண்டும்.

4. தம்முடைய இளமைப் பருவத்தில் பற்பல காரணங்களினுல் கல்வியைக் கல்லாது விட்ட முதியவர்கள், இந்நாளில் பெரிதும் துன்புறுகின்ருர்கள். செய்தித் தாள்களைப் படித்து உலகச் செய்திகளையும் அவர்களால் உணர முடியாது. பிறர் எழுதும் கடிதங்களைப் படித்து உணர்ந்து கொள்ள அவர்களால் இயலாது. அதுபோன்றே பிறருக்குக் கடிதம் முதலியன எழுதவும் அவர்கள் அறியமாட்டார்கள். அத்தகைய முதியோர்களிற் பலர் தமது நிலைக்குப் பெரிதும் வருந்தி வெட்கமுற்ற நிலையில் வாழ்கின்றனர். மாணவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் ஓய்வு நேரங்களில் அத்தகைய முதியோர்களுக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொள்ளுவது நன்மை பயக்கும் நற்பணியாகும்.

5. மாணவர்கள் தங்களுடைய விடுமுறை நாட்களில் சுற்றுப் புறங்களில் உள்ள கிராமங்களுக்குச் சென்று பொதுநலப் பணி புரிதல் வேண்டும். நம் நாட்டில் பல சிற்றூர்களில் செம்மையான பாதைகள் இல்லை. அத்தகைய ஊர்களுக்கு மாணவர்கள் திரளாகச் சென்று, ஊர் மக்களுடன் ஒத்துழைத்து, பாதையை அமைக்கும் பணியில் ஈடுபடலாம். இந்நாளில் உயர்நிலைப் பள்ளிகளில் பயிலும் மாணவர்களும், கல்லூரி மாணவர்களும் தங்கள் வேனிற்கால விடுமுறையின் போது கிராமப் புறங்களுக்குச் சென்று, பல நாட்கள் தங்கியிருந்து, பொதுநலப் பணிகளைப் புரிகின்ருர்கள். சேரி வாழ் மக்களுக்குச் சுகாதாரத்தின் அவசியத்தை எடுத்துக் கூறுகின்ருர்கள்; தாங்களே

சேரியில் உள்ள தெருக்களைப் பெருக்கித் தூய்மை செய்கின்றனர்கள்; அவர்களுக்குக் கல்வியின் சிறப்பை விளக்கிக் கூறிச் சொற்பொழிவு செய்கின்றனர்கள்.

6. இவ்வாறு பொதுநலப் பணி புரிவதால் மாணவர்களுக்கு பல நன்மைகள் ஏற்படுகின்றன. பல தரப்பட்ட மக்களிடையே பழகும் வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கிறது. இப்பணிகளில் ஈடுபடும் மாணவர்களிடையே பொறுமை, நல்லொழுக்கம், தன்னம்பிக்கை முதலிய நற் பண்புகள் அமையப் பெறுகின்றன. மாணவர் அனைவரும் சாதி மத வேறுபாடின்றியும், உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற உணர்ச்சியின்றியும் பழகிப் பொதுநலத் தொண்டு புரிவதால், அவர்களிடையே ஒற்றுமையுணர்ச்சி உருவாகின்றது. குறுகிய மனப்பான்மை அவர்கள் உள்ளத்தில் இடம் பெறுவதில்லை. 'ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும்' என்னும் உயரிய நோக்கம், மாணவரிடம் அமைவதற்குப் பொதுநலத் தொண்டுகள் வழி வகுக்கின்றன. மேலும், பொதுநலப் பணி புரியும் மாணவர்களைக் கிராம மக்கள் ஆர்வத்துடன் வரவேற்கின்றனர்கள். அவர்களுடன் ஒத்துழைத்து உற்சாகத்துடன் தங்கள் ஊரைச் செம்மைப்படுத்த முன்வருகின்றனர்கள்.

7. இவ்வாறு மக்களுக்குச் செய்யும் பொதுநலப் பணிகளைச் சான்றோர் அனைவரும் பாராட்டுவர். கடவுட் பற்று வாய்ந்த பெரியோரும் உலகில் உள்ள உயிர்களுக்குப் பணி புரிவதே இறைவனுக்குச் செய்யும்

பணியாகும் என்று கூறியுள்ளனர். இறைவன் பிற உயிர்களுக்குத் தொண்டு புரிபவனுடைய உள்ளத்திலேதான் வீற்றிருக்கின்றான் என்று சான்றோர் பலர் கூறியுள்ளனர். எனவே, மாணவர் அனைவரும் பொது நலத் தொண்டு புரிய ஆர்வத்துடன் முன்வர வேண்டும்.

## அருஞ்சொற்பொருள்

நசித்தல் - கெடுதல், நனவு - நினைவு, பேணி - பாதுகாத்து, வல்லுநர் - தேர்ச்சி பெற்றவர், வலியுறுத்துதல்-வற்புறுத்திக் கூறுதல், பயிலும் - பழகும்.

## வினாக்கள்

1. மாணவர் பொதுநலத்தொண்டு புரிய வேண்டுவது எதனால்? விளக்குக.

2. மாணவர்கள் எத்தகை பொதுநலத் தொண்டுகளைப் புரியலாம்?

3. மாணவர்கள் முதியோர்களுக்கு எவ்வாறு உதவி புரிய வேண்டும்?

4. இந்நாளில் கல்லூரிகளிலும், உயர் நிலைப் பள்ளிகளிலும் பயிலும் மாணவர்கள் செய்யும் தொண்டுகள் யாவை?

5. பொதுநலத்தொண்டு புரிவதனால் ஏற்படும் நன்மைகள் யாவை?

## பயிற்சி

**1. வாக்கியங்களில் பயன்படுத்துக:—**

நசித்தல், நனவு, வலியுறுத்தி, மனப்பான்மை, உற்சாகத்துடன், ஐயமில்லை.

**2. எதிர்ச் சொற்கள் எழுதுக:—**

நல்லோர், தாய்மை, சுத்தம், அவசியம், தன்னலம்.

**3. நீ செய்துவரும் பொதுநலத் தொண்டுகளைக் குறித்து உன் நண்பனுக்குக் கடிதம் எழுதும் முறையில் கட்டுரை ஒன்று எழுதுக.**

## இலக்கணம்

### (எண்)

'கலைஞன் கண்ட கனவு நனவாயிற்று'

இச்சொற்றொடரில் கலைஞன் என்னும் சொல் ஒருமையாகும். ஒரு பொருளைக் குறிப்பதால் ஒருமை எனப்படும். பல பொருளைக் குறிப்பது பன்மையாகும். பொருள்களின் எண்ணிக்கை எண் என்று பெயர் பெறும்.

ஒருமைக்குரியவை: ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால். பன்மைக்குரியவை: பலர் பால், பலவின் பால்.

**கீழ்க்காணும் ஒருமைகளுக்குப் பன்மையும், பன்மைகளுக்கு ஒருமையும் எழுதுக:-**

மலைகள், துண்டு, கம்பி, மனிதன், சோழர்கள், பசுக்கள், கல், அவன், அது, அரசன், புலவன், குழந்தை, குரு, புருக்கள், மரம்.

---

# 17. மார்க்கோ போலோ

1. ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்கள் ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களைப் பெயரளவில் அறிந்திருந்தார்கள். அதற்குக் காரணம், அக்கண்டங்களின் பெரும்பகுதிகள் அக்காலத்தில் ஆராய்ந்து அறியப்படாததுதான். ஆயினும், அவ்வப்போது ஐரோப்பியர் சிலர் ஆசியா விலும் ஆப்பிரிக்காவிலும் துணிகரமான பயணங்கள் செய்து, பல பகுதிகளை ஆராய்ந்து அறிந்தனர். அவர் களுள் ஒருவர் **மார்க்கோ போலோ** என்பவர்.

2. மார்க்கோ போலோ ஐரோப்பாக்கண்டத்தைச் சேர்ந்த இத்தாலி நாட்டில் உள்ள **வெனிஸ் நகரத்தில்**, கி.பி. 1254-ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் இளைஞரா யிருந்த போது அவர் தந்தையாராகிய **நிக்கோலோ போலோ**, தம் சகோதரருடன் ஆசியாக் கண்டத்தின் கீழ்பகுதியில் உள்ள சீன நாட்டுக்குச் சென்றார். இக் காலத்தைப் போல அக்காலத்தில் போக்குவரவு சாதனங்கள் இல்லை. ஆதலால் போலோ சகோதரர்கள் நிலம்வழியாகவே பிரயாணம் செய்து, சீன நாட்டை அடைந்தார்கள். அக்காலத்தில் சீனாவுக்குக் கதே என்னும் பெயர் வழங்கி வந்தது. **பீக்கிங் பட்டணத்தை** தலை நகராய்க் கொண்டு குப்ளேகான் என்ற மங்கோலியப் பேரரசர் சீனப் பேரரசை ஆட்சி புரிந்து வந்தார். அவரை நாடிச் சென்ற போலோ சகோதரர்களை அவர் நன்கு வரவேற்று உபசரித்தார். அவர்களைத் தமது அரண்மனையிற் சிறிதுகாலம் விருந்தினராய்

இருக்கச் செய்தார். போலோ சகோதரர்கள் மூலம் கிறிஸ்து மதத்தைப் பற்றி அறிந்த குப்ளேகான், தம் நாட்டு மக்களையும் கிறிஸ்தவர்களாக்க விரும்பினர். ஆதலால், அவர் கிறிஸ்து மதப் பிரசாரகர்களை அழைத்து வரும்படி போலோ சகோதரர்களை ஐரோப்பாவுக்கு அனுப்பி வைத்தார்.

3. போலோ சகோதரர்கள் வெனிஸ் நகரத்துக்குத் திரும்பியபோது மார்க்கோ போலோவுக்கு வயது பதினைந்து. அவர் தம் தந்தையார் மூலம் ஆசிய நாடுகளைப் பற்றிக் கேட்டறிந்தார். அது முதல் சீன நாட்டைக் காண வேண்டுமென்ற ஆவல் மார்க்கோ போலோவுக்கு ஏற்பட்டது. கி. பி. 1271-ஆம் ஆண்டில் போலோ சகோதரர்கள் மீண்டும் சீனவுக்குத் திரும்பியபோது மார்க்கோ போலோவும் உடன் சென்ருர்.

4. அவர்கள் மூவரும் நிலம் வழியாகவே சென்றனர். ஆசியாக் கண்டத்தின் இடையில் உள்ள பாமிர் பீடபூமியைக் கடந்து செல்லுகையில் அவர்கள் வழியிற்கண்ட காட்சிகளைப் பற்றிய பல குறிப்புக்களை மார்க்கோ போலோ எழுதி வைத்தார். அவர்கள் பீக்கிங் பட்டணத்தை யடைய நான்காண்டுகள் ஆயின. அவர்களை மீண்டும் குப்ளேகான் நன்கு வரவேற்று உபசரித்தார்.

5. குளேப்கான் இளைஞராயிருந்த மார்க்கோ போலோவிடம் சிறந்த அறிவுக் குறிகளைக் கண்டார். ஆதலால், அவர் மார்க்கோ போலோவைத் தமது அரண்மனையில் உத்தியோகத்தில் அமர்த்திக் கொண்டார்.

மார்க்கோ போலோவும் தம்முடைய கடமைகளைச் செம்மையாகச் செய்து, சக்கரவர்த்தியாரின் அன்பையும் ஆதரவையும் பெற்று விளங்கினர். அதன் பயனாக மார்க்கோ போலோ யுன்னுன், கொச்சின் சீனு, தென்னிந்தியா ஆகிய நாடுகட்குச் சீனப் பேரரசரின் இராச தூதராக அனுப்பப்பட்டார். எதையும் நன்கு ஊன்றிக் கவனிக்கும் இயல்புடைய மார்க்கோ போலோ, தாம் சென்று தங்கிய நாடுகளின் இயல்பு, மக்களின் வாழ்க்கை முதலியவற்றைப் பற்றிச் சிறந்த குறிப்புகள் சேகரித்துக் கொண்டு திரும்பினர்.

6. ஏறத்தாழப் பதினேழு ஆண்டுகள் சீனுவில் தங்கியிருந்தபின், கி. பி. 1292-ல் போலோ சகோதரர்களும் மார்க்கோ போலோவும் சீனுவை விட்டுப் புறப்பட்டார்கள். அவர்கள் அப்போது நிலம் வழியாகப் பிரயாணம் செய்தார்கள். அவர்கள் வழியில் கிழக்கிந்தியத் தீவுகளைப் பார்த்துக் கொண்டு, பாரசீக வளைகுடாவை அடைந்தார்கள். அங்கிருந்து நிலம் வழியாகச் சென்று வெனிஸ் நகரத்தை அடைந்தார்கள்.

7. மார்க்கோ போலோ தமது நாய் நாடு திரும்பிய சிறிது காலத்திற்குப் பிறகு வெனிஸுக்கும் ஜினேவாவுக்கும் நடைபெற்ற போரில் கலந்துகொண்டு, பகைவரால் சிறை பிடிக்கப்பட்டார். அவர் சிறைச்சாலையில் இருக்கையில் தாம் கீழ்நாடுகளிற் பிரயாணம் செய்தபோது அங்குக் கண்டவற்றை யெல்லாம் குறித்து வைத்தார். சில ஆண்டுகட்குப் பின் மார்க்கோ போலோ விடுதலையடைந்து, பல ஆண்டுகள் மகிழ்ச்சியுற்று வாழ்ந்து வந்தார். பின்னர்க் கி. பி. 1324-ல் அவர் மரணமடைந்தார்.

8. மார்க்கோ போலோவின் குறிப்புகளை அவருக்குப் பின் வந்த மாலுமிகள் நன்கு படித்துப் பயனடைந்தார்கள். அன்றியும், அக்குறிப்புகள், சீன நாட்டையும், கிழக்கிந்தியத் தீவுகளையும் காணவேண்டுமென்ற ஆவலைத் தூண்டின. எனவே, கிழக்கிந்தியத் தீவுகட்கும், சீனுவுக்கும் கடல் வழியொன்றைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் ஐரோப்பியர் மனதில் நன்கு நிலைபெற்று விட்டது.

## அருஞ்சொற்பொருள்

ஏறத்தாழ-ஏறக்குறைய, மாந்தர்-மக்கள், துணிகரம்-அச்சம் அற்ற தன்மை, பயணம்-பிரயாணம், பேரரசர்-சக்கரவர்த்தியார், பேரரசு-பெரிய இராச்சியம், பிரசாரகர்-பரப்புபவர், சகோதரர்-உடன்பிறந்தவர், செம்மை-ஒழுங்கு, வளைகுடா-பூமியைக் குடைந்து சென்றிருக்கும் கடற் பகுதி, மாலுமி-கப்பலோட்டி.

## பயிற்சி

**1. விடை எழுதுக:—**

1. முற்காலத்தவர் கண்டங்களையும், சமுத்திரங்களையும் பற்றி அறியாதவராய் இருந்தது ஏன்?

2. மார்க்கோ போலோ எங்கு, எப்பொழுது பிறந்தார்?

3. குப்ளேகான் போலோ சகோதரர்களை எவ்வாறு உபசரித்தார்?

4. போலோ சகோதரர்கள் ஐரோப்பாவிற்கு ஏன் திரும்பினுர்கள்?

5. மார்க்கோ போலோ எப்பொழுது சீனுவிற்குச் சென்ருர்?

6. குப்ளேகான் மார்க்கோ போலோவுக்கு எவ்வாறு சிறப்பளித்தார்?

7. மார்க்கோ போலோ எப்பொழுது தம் நாட்டிற்குத் திரும்பினுர்?

8. அவர் சிறையில் இருந்தபோது செய்தவை யாவை?

9. மார்க்கோ போலோவின் குறிப்புகளால் ஏற்பட்ட நன்மைகள் யாவை?

## இலக்கணம்

### (வினைச்சொல்)

1. மார்க்கோ போலோ சீன நாட்டுக்குச் சென்ருர்

2. மங்கோலியப் பேரரசர் சீனப் பேரரசை ஆட்சி புரிந்து வந்தார்.

3. மார்க்கோ போலோ பல குறிப்புக்களை எழுதி வைத்தார்.

இச்சொற்ருெடர்களிலுள்ள பெயர்ச் சொற்கள் யாவை? மார்க்கோ போலோ, பேரரசர், பேரரசு, சீன நாடு என்பன பெயர்ச் சொற்கள். சில சொற்கள் வினைகளை உணர்த்து கின்றன. அவை **சென்ருர், வந்தார், வைத்தார்** என்பன.

இவைகளிலிருந்து நாம் என்ன அறிந்து கொள்கிருேம்? வினை என்பது ஒரு பொருளின் தொழில் என்பதை அறி கிருேம். வினைச்சொல் என்பது பொருளின் தொழிலை உணர்த்த வந்த சொல் என்பதும் தெரிகிறதல்லவா?

1. மாணவர் கல்வி கற்றனர்.

2. கண்ணன் கல்வி கற்கிருன்.

3. கண்ணப்பன் கல்வி கற்பான்.

இம்மூன்று சொற்ருெடர்களேயும் கவனியுங்கள். இவைகளில் உள்ள விணச் சொற்களேக் காண்க. இவ்விணச் சொற்களில் ஏதாவது வேறுபாடு தெரிகிறதா? கற்றனர் என்ற சொல் நடந்த செயலேக் காட்டுகிறதல்லவா? கற்கிருன் என்பது செயல் நடக்கிறதைக் காட்டுகிறதன்ருே? கற்பான் என்பது இனிமேல் நிகழும் செயலேக் குறிக்கும் அல்லவா? இதிலிருந்து நாம் என்ன அறிந்து கொள் கிருேம்? விணச் சொல்லுக்குக் காலம் உண்டு என்பதை அறிகிருேம். தொழில் நேரத்தைக் காட்டுவதே காலம் ஆகும்.

---

# 18. குண்டலகேசி

1. வளம் பல நிறைந்த வடவிந்தியாவில் 'இராசகிருகம்' என்ற நகரத்தை ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவன் ஆட்சியில் பொருட்காப்பாளன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது. கண்டோர் கண்களேயும் கருத்தையும்

கவரும் கட்டழகு வாய்ந்திருந்தது அக்குழவி. அதற்குப் பத்திரை எனப் பெயரிட்டனர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் அக்குழவி வளர்ந்தது. மங்கைப் பருவம் எய்திஞள் பத்திரை. ஒருநாள் தன் மாளிகையின் மேல்மாடியிலிருந்து தெருவில் செல்வோரைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள். ஓர் ஆண் அழகனை அவ்வூர்க் காவலர்கள் கொலைக் களத்திற்கு அழைத்துச் சென்றனர். அவன் வழிப் போக்கர்களைக் கொள்ளையடித்தவன். அவ்வூர்க் கோயில் குருக்கள் மகன்; சத்துகன் என்னும் பெயரினன். அவனைக் காளன் என்றும் கூறுவர். அவன் அழகில் ஈடுபட்டாள் பத்திரை. அவனை மணக்க உறுதிகொண்டாள். தந்தையிடம் சென்று தன் கருத்தைத் தெரிவித்தாள். 'ஊழிற் பெருவலி யாவுள?' என்ற முதுமொழியை உணர்ந்த அவள் தந்தை, அதற்கு இசைந்தான். அவன் இசைவுக்குக் காரணம், தன் மகள்மேல் கொண்ட அன்பின் மிகுதியே ஆகும். அவன் ஊர்க்காவலர்களுக்கு நிரம்பப் பொருளைக் கொடுத்து, சத்துகனை விடுதலை செய்வித்தான். விடுதலை அடைந்த கள்வன் சத்துகனுக்கும் பத்திரைக்கும் திருமணம் நடந்தேறியது. அவ்விருவரும் சிறிதுகாலம் இல்லற வாழ்க்கையை இன்பமாக நடத்தி வந்தனர்.

2. ஒருநாள் இருவருக்கும் கருத்து வேறுபாடு உண்டாயிற்று. அப்போது பத்திரை சத்துகனை நோக்கி நீ முன்பு கள்வனுகத்தானே இருந்தாய்?

என்னால் அல்லவோ உனக்கு விடுதலை கிடைத்தது!'' என்று கூறினாள். இச்சொற்கள் வெந்த புண்ணில் வேல் நுழைந்ததைப் போன்று இருந்தன சத்துகனுக்கு. அவன் மிக்க கோபம் கொண்டான்; வெகுளியை வெளிக்காட்டாது அடக்கிக்கொண்டான். பத்திரையின் அணிகலன்களை எல்லாம் கவர்ந்து கொண்டு அவளை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டுமென்று திட்டமிட்டான்.

3. அதனால் சத்துகன் ஒருநாள் பத்திரையை நோக்கி, ''முன்பு ஊர்க்காவலர்களால் சிறைப்பட்ட பொழுது, எனக்கு விடுதலை கிடைத்தால், நான் மலை வாழ் தேவுக்குக் காணிக்கை கொடுத்து வழிபாடியற்றுவதாக மனத்தில் எண்ணியிருந்தேன். அத்தேவின் அருளால் விடுதலை கிட்டியது. வழிபாடு இயற்றுவதற்காக அம்மலையுச்சிக்குச் செல்லப் போகிறேன். நீயும் என்னுடன் வருதல் வேண்டும்'', என்றனன். இதைக் கேட்ட பத்திரை மிகவும் மகிழ்ச்சி கொண்டாள். உயர்ந்த அணிகலன்களை அணிந்து கொண்டு சத்துகனுடன் மலைமுகட்டுக்குப் புறப்பட்டாள்.

4. இருவரும் கடவுட்பூசைக்குரிய பொருள்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டனர். சத்துகன் முன் செல்லப் பத்திரை பின் தொடர்ந்தாள். இருவரும் பசும் படாம் விரித்தாற்போன்ற பயிர்களையுடைய கழனிகளையும் வானுற வளர்ந்துள்ள மரங்களைக் கொண்ட காடுகளையும், பளிங்கன்ன நீர் செல்லும் ஆறுகளையும்

கடந்து சென்றனர்; குயில் கூவுவதையும் மயில் ஆடுவதையும் கண்டு மகிழ்ந்து, தென்றலில் திளைத்து ஒரு மலையுச்சியை அடைந்தனர்.

5. சத்துகன் பத்திரையைப் பார்த்து, "நீ முன்பு ஒருநாள் என்னைக் கள்வன் என்று எள்ளி நகையாடினாய் அல்லவா? இன்று உன் அணிகலன்களை எல்லாம் கவர்ந்து, உன்னைக் கொல்லவே இவண் அழைத்து வந்தேன். உன் நகைகளை எல்லாம் கழற்றி என்னிடம் கொடு!" என்று கோபத்துடன் கூறினான். பத்திரை அவனைப் பணிவுடன் நோக்கி "என் ஆருயிர்த் தலைவரே, இவ்வணிகலன்கள் மட்டுமா உங்களுக்கு வேண்டும்? நானும் உங்கள் உடமை அன்றோ?" என்று பணிவுடன் பகர்ந்தும், அவன் மனமிரங்கவில்லை.

6. பத்திரை தன்னை அவன் கொல்லுவதற்கு முன் தான் அவனைக் கொல்லவேண்டும் என்று எண்ணினாள். அவள் அவனைப் பார்த்து "தலைவரே, எனக்குக் கணவரே தெய்வம். ஆதலால், யான் உம்மை மும்முறை வலம் வந்து வணங்கிப் பணிகின்றேன்!" என்று கூறிச் சத்துகனைக் கைகூப்பித் தொழுதாள். பின் வலம் வருபவள் போலப் பின்சென்று, அவனை மலைச் சிகரத்தினின்றும் தள்ளி விட்டாள். சத்துகன் கூக்குரலுடன் தலை கீழாக விழுந்தான். அவன் உடல் கற்பாறைகளில் மோதி அழிந்தது.

7. பத்திரை உலக வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டாள். சமண மதத்தில் சேர்ந்தாள்.

சமண மத வழக்கப்படி அவள் கருங்குழல் நீக்கப்பட்டுச் சமணத் துறவியானுள். அவள் தலையில் மீண்டும் கூந்தல் சுருண்டு வளர்ந்தது. அதனுல், அவளை எல்லோரும் குண்டலகேசி என்று வழங்கினர். 'குண்டலகேசி' என்பதற்குச் சுருண்ட கூந்தலை யுடையவள் என்பது பொருள்.

8. சமணத் துறவியாகிய குண்டலகேசி அந்தச் சமய நூல்களை நன்கு கற்ருள்; பின் சமய வாதம் புரியப் புறப்பட்டாள். பல ஊர்களுக்குச் சென்ருள். அக்காலத்தில் சமயவாதம் புரிய நினைப்பவர், ஊர் நடுவில் மணலைக் குவித்து, ஒரு நாவல் மரக் கிளையை நட்டு வைப்பர். அவருடன் வாது புரிய விரும்புவோர் அக்கிளையைக் கீழே தள்ளிவிடுவர். குண்டலகேசி பல ஊர்களுக்குச் சென்று அவ்வாறு செய்தாள். அவளுடன் ஒருவரும் வாதம் செய்ய முன்வரவில்லை. அவள் சிராஸ்வதி என்ற ஊரை அடைந்தாள். அவ்வூர் நடுவில் மணலைக் குவித்து நாவல்மரக் கிளையை நட்டு விட்டு உணவு பெற வெளியே சென்ருள்.

9. புத்தருடைய சீடருள் ஒருவரான சாரி புத்தர் குண்டலகேசியுடன் வாதம் புரிய நினைத்தார். சிறுவர்களைக் கொண்டு நாவல் மரக் கிளையைப் பிடுங்கி எறியும்படி செய்தார். வெளியே சென்ற குண்டலகேசி நடந்ததைத் தெரிந்து கொண்டாள். அவ்வூர் மக்கள் முன்னிலையில் குண்டலகேசிக்கும் சாரிபுத்தருக்கும் இடையே சமயவாதப் போர் நடைபெற்றது. குண்டல கேசி தோற்றுப் போனுள். சாரிபுத்தர் அவளுக்குப்

பௌத்த சமய உண்மைகளை எடுத்துரைத்தார். பின்பு குண்டலகேசி புத்த பிரானை அடைந்து வணங்கினள். புத்த பிரான் அவளுக்கு உபதேசம் செய்து, அவளைப் புத்த மதத்தில் சேர்த்துக் கொண்டார். ஏறக்குறைய அவள் ஐம்பது ஆண்டுகள் உயிர் வாழ்ந்தாள். பின்பு முத்தி அடைந்தாள்.

10. அவளைப்பற்றிய வரலாற்றைத் தெரிவிப்பதே ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்ருகிய குண்டலகேசி என்பது. அந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை.

## அருஞ்சொற்பொருள்

குழவி - குழந்தை, குருக்கள் - பூசாரி, ஊழ் - விதி, வெகுளி - கோபம், அணிகலன் - நகை, காணிக்கை - பொருட் கொடை, முகடு - உச்சி, படாம் - போர்வை, ஆலுதல் - ஆடுதல், எள்ளி - இகழ்ந்து, இவண் - இங்கே, ஆருயிர் - அருமையான உயிர், சிகரம் - உச்சி, சார்பு - தொடர்பு, குழல் - கூந்தல், கேசி - கூந்தலையுடையவள், வாதம் - சொற்போர்.

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :—

   பொருட்காப்பாளன், முதுமொழி, வழிபாடியற்றுதல், கடவுட்பூசை, பசும்படாம், ஆருயிர்.

2. பொருள் எழுதுக :—

   எறி, எரி ; அழி, அளி ; குழவி, குளவி.

## வினாக்கள்

I. விடை கூறுக:

1. சத்துகனைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லக் காரணம் என்ன?

2. பத்திரை தன் தந்தையிடம் சென்று யாது கூறினாள்?

3. சத்துகன் எவ்வாறு விடுதலை பெற்றான்?

4. சத்துகன் யாது திட்டமிட்டான்?

5. இருவரும் மலையுச்சியை அடையுமுன் கண்ட காட்சிகள் யாவை?

6. சத்துகன் மலையுச்சியை அடைந்தவுடன் யாது கூறினான்?

7. சத்துகன் முடிவு என்ன?

8. பத்திரைக்குக் 'குண்டலகேசி என்று ஏன் பெயர் வந்தது?

9. சாரிபுத்தர் யார்?

II. இடம் சுட்டி விளக்குக:—

'முன்பு நீ கள்வன் தானே?'
'எனக்குக் கணவரே தெய்வம்'

## இலக்கணம்

### (காலம்)

கீழ்வரும் சொற்றொடர்களைக் கவனிக்க:—

1. இராசகிருகம் என்ற ஊரை ஓர் அரசன் ஆண்டு வந்தான்.

2. மலையுச்சிக்குச் செல்லப் போகிறேன்.

3. குண்டலகேசியின் வரலாற்றைக் காண்போம்.

இச்சொற்றொடர்களில் வந்தான், போகிறன், காண் போம் என்பன வினை முற்றுக்கள்.

'வந்தான்' என்பது செயல் முடிந்ததைக் 'காட்டுவதால் இறந்த காலம் எனப்படும்.

'போகிறேன், என்பது, செயல் நிகழ்கிறதைக் காட்டு வதால் நிகழ் காலம் எனப்படும்.

'காண்போம்' என்பது, செயல் நிகழப் போவதைக் காட்டுவதால் எதிர் காலம் எனப்படும்.

ஆகவே, வினைச் சொல் மூன்று காலங்களில் ஏதாவது ஒன்றைக் காட்டும் என்பது தெரிகிறது.

**கீழே காட்டிய வினைச் சொற்களை மேலே கொடுத் துள்ள கால முறைப்படி எடுத்தெழுதுக:—**

எழுதுவான், சென்றன், பாடினன், அசையும், பயின் றனர், கண்டனர், கடிக்கின்றன, பயந்தன, காட்டுவேன், சிரித்தார்கள், உண்பான்.

---

# 19. இமயத்தை வென்ற இணையற்ற வீரர்கள்

"மன்னும் இமய மலைஎங்கள் மலையே!
மானில மீதது போற்பிறி திலையே"

என்று பாரதியார் பாராட்டிக் கூறிய இமயமலை நமது பாரதநாட்டின் வட எல்லையாகத் திகழ்கிறது. இது உலகில் உள்ள மலைகள் யாவற்றினும் உயர்ந்தது. 'இமம்' என்ற சொல்லுக்குப் 'பனி' என்பது பொருள்.

இம்மலை பனியால் மூடப்பட்டிருத்தலின், பனி மலை எனப் பொருள்படும் இமயமலை என்ற பெயர் இதற்கு அமைந்தது. இது உயர்ந்த சிகரங்கள் பலவற்றைக் கொண்டது. அச்சிகரங்களுள் மிகச் சிறந்தவை தவளகிரி, காஞ்சன சிருங்கம், காரகோரம், எவரெஸ்டு என்பனவாகும். இவற்றுள் மிக உயர்ந்தது எவரெஸ்டு சிகரமாகும். இதன் உயரம் 29,002 அடி. இச் சிகரத்தின்மீது ஏற முயன்று உயிரிழந்தோர் பலராவர்.

2. இமயமலையின் உயர்ந்த சிகரமான எவரெஸ்டின்மீது ஏறுவது எளிதான செயலன்று. இம் மலையில் பனிப் படலங்கள் படிந்து காணப்படும். மலையின் உயரச் செல்லச் செல்ல, தாங்க முடியாத குளிரினால் உடல் உறுப்புக்கள் வெடித்துப் போகும்; கால் வழுக்கும். பனிச் சரிவுகளும், கொடும் பள்ளங்களும் இம்மலையில் ஏறியவர்களுக்குப் பெருந் துன்பத்தை அளித்தன. இத்தகைய பல இடையூறுகளுக்கிடையே மலையேறும் முயற்சியில் பலர் ஈடுபட்டனர்; இடைவிடாமல் பல்வேறு குழுவினர் பற்பல முறை முயன்று தோல்வியுற்றனர். ஆனால் தோல்வியைக் கண்டும், உயிரை இழப்பதற்கு அஞ்சியும், மலையேறும் முயற்சியை மாந்தர் கைவிடவில்லை. பல்லாண்டுகளாக எவராலும் கண்டறியப் படாது இறுமாந்து நின்ற எவரெஸ்டு கொடுமுடி இறுதியில் 1953-ஆம் ஆண்டு மே மாதத்தில் தென்சிங்கு நார்கே, எட்மண்டு ஹில்லாரி என்னும் வீரர் இருவரின் முயற்சிக்குப் பணிந்தது. இனி இமயத்தை வெல்ல முயன்றவர்களின் வரலாற்றை நோக்குவோம்:

3. எவரெஸ்டு சிகரத்தின்மீது ஏற முயலுபவர்கள் வழிகாட்டிகளை அழைத்துக் கொண்டு, மூட்டைகளைச் சுமந்து செல்வதற்குக் கோவேறு கழுதைகளுடனும், கூலியாட்களுடனும் செல்வார்கள். இவ்வாறு செல்லும் போது இடையில் அவர்களுக்குப் பல இடையூறுகள் ஏற்படும். முதன் முதலாக 1921-ஆம் ஆண்டில் கர்னல் ஹாவர்டு பெரி என்ற ஆங்கிலேயர் தலைமையில் ஒரு குழுவினர் எவரெஸ்டு சிகரத்தைக் காணும் முயற்சியில் ஈடுபட்டனர். அக்குழுவினர் இருபத்து மூவாயிரம் அடி வரை சென்றனர். அதற்கு மேல் அவர்களால் செல்ல இயலவில்லை. எனவே அவர்களுடைய முயற்சி பயனற்றதாய் விட்டது.

4. 1922-ல் வேறொரு குழுவினர் மலையேறும் முயற்சியில் ஈடுபட்டனர். இருபத்தேழாயிரம் அடி வரையிலேதான் அக்குழுவினரால் செல்ல முடிந்தது. அக்குழுவினரில் சிலர் இடைவழியில் இறந்தனர். 1924-ஆம் ஆண்டில் ஆங்கில நாட்டைச் சேர்ந்த மற்றொரு குழுவினர் இம்முயற்சியில் ஈடுபட்டனர். அக்குழுவினர் சிகரத்தின் உச்சியை நோக்கி நெடுந் தூரம் முன்னேறிச் சென்றனர். அங்கு அவர்களுக்கு எண்ணற்ற இடையூறுகள் நேர்ந்தன. குளிரினால் சிலரது உடல் உறுப்புக்கள் வெடித்து விட்டன. பனிப் பாறைகள் சரிந்து கூடாரங்களை அழித்தன. பல இடையூறுகளுக்கிடையே அவர்கள் மேன்மேலும் முன்னேறிச் சென்றார்கள். இருபத்தெட்டாயிரம் அடிகள் வரை அவர்கள் சென்று விட்டார்கள். ஆனால், அதற்கு மேல் முன்னேறிச் சென்று சிகரத்தின் உச்சியை அடைய முடியவில்லை. அக்குழுவினரில்

மெலோரி, இர்வின் என்னும் இருவரைத் தவிர மற்றையோர் அனைவரும் திரும்பி விட்டனர். அவ்விருவர் மட்டும் தம்முடைய முயற்சியில் வெற்றியடையாமல் திரும்புவதில்லையென்ற உறுதியுடன் அரும்பாடுபட்டுச் சிகரத்தை நோக்கிச் சென்றனர். ஆனால், அவர்கள் மீளவேயில்லை; அங்கேயே இறந்தார்கள்.

5. அதன் பின்னர், 1933-ஆம் ஆண்டில் வேறொரு குழுவினர் சிகரத்தின் மீது ஏறினர். அவர்களாலும் உச்சியைக் காண முடியவில்லை. 1936-ல் இம் முயற்சியில் ஈடுபட்ட குழுவினரும் தோல்வியே கண்டனர். இடையில் சில ஆண்டுகள் இச்சிகரத்தின்மீது ஏறுவதால் உண்டாகும் இடையூறுகளுக்கு அஞ்சி இம் முயற்சியைக் கைவிட்டனர். சிலர் ஆகாய விமானத்தின் மூலமாக எவரெஸ்டு சிகரத்தின்மீது பறந்து சென்று பல பகுதிகளைப் புகைப் படம் பிடித்து வந்தனர். அப் புகைப் படங்களை மக்கள் பலரும் காணும்படி செய்தனர்.

6. பின்னர் 1952-ல் சுவிட்ஸர்லாந்து நாட்டைச் சேர்ந்த மலையேறும் குழுவினர் எவரெஸ்டின் மீது ஏறும் முயற்சியில் இரு முறை ஈடுபட்டும் வெற்றி பெறவில்லை. இறுதியில் 1953-ஆம் ஆண்டு மே மாதத்தில் கர்னல் ஹண்டு என்னும் ஆங்கிலேயர் தலைமையில் ஒரு குழுவினர் எவரெஸ்டின்மீது ஏற முற்பட்டனர். அக்குழுவைச் சேர்ந்த தென்சிங்கு நார்கே என்ற இந்தியரும் எட்மண்டு ஹில்லாரி என்ற நியூசீலந்து தேசத்தவரும் மிகவும் முயன்று மே மாதம் முப்பதாம் நாளன்று எவராலும் வெல்ல முடியாது நிமிர்ந்து நின்ற எவரெஸ்டு

சிகரத்தின் உச்சியின்மீது தம் காலை வைத்தனர். அவ்வமயம் தென்சிங்கு நம் நாட்டுக் கொடியை அங்கு நாட்டினர். அவ்வாறே ஹில்லாரி ஆங்கில நாட்டுக் கொடியைச் சிகரத்தின் உச்சியில் நாட்டினர். இவ்வாறு கர்னல் ஹண்டு தலைமையில் சென்ற குழுவிற்கு வெற்றி கிடைத்தது.

7. உயிரையும் துரும்பென மதித்து உயரிய முயற்சியில் ஈடுபட்ட இக்குழுவினரை அனைவரும் பாராட்டினர். இந்திய வீரரான தென்சிங்கு மலையேறுவதில் திறமை பெற்றவர். நேப்பாள நாட்டினர். அவரது அரிய முயற்சியை நம் அரசியலார் பாராட்டிப் பரிசுகள் பல நல்கினர். அவரது அருஞ்செயலைப் புகழ்ந்து நமது நாட்டுத் தலைவர் பலர் பாராட்டுரைகள் வழங்கினர். கர்னல் ஹண்டு, தென்சிங்கு, ஹில்லாரி ஆகிய மூவருக்கும் உலக நாடுகளில் வரவேற்புக் கிடைத்தது. இங்கிலாந்தின் அரசியார் இம்மூவருக்கும் 'சர்' பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளார்.

8. இவ்வாறு பலர் உயிரைக் கொள்ளை கொண்டு அனைவருக்கும் அச்சத்தை அளித்துப் பணியாது நின்ற எவரெஸ்டு கொடுமுடி இறுதியில் மனித முயற்சிக்குப் பணிந்து விட்டது. 'முயன்றால் முடியாதது இல்லை' என்ற முன்னோர் வாக்கு மெய்யாகி விட்டது. மெய்வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும், கண் துஞ்சாமலும் தாம் மேற்கொண்ட செயலிலேயே தம் சிந்தையைச் செலுத்திய அவர்களைப் போன்று நாமும் முயன்று முன்னேறுவோமாக!

## அருஞ்சொற்பொருள்

மன்னும்-நிலைபெற்ற, பிறிது-வேறொன்று, இறுமாந்து-செருக்குக் கொண்டு, எண்ணற்ற-அளவில்லாத, நல்கினர்-கொடுத்தனர், எண்ணிய-நினைத்தவற்றை, திண்ணியர்-மனவுறுதியைப் பெற்றவர், துஞ்சுதல்-தூங்குதல், கொடுமுடி-சிகரம்.

## வினாக்கள்

1. இமயமலையின் உயர்ந்த சிகரங்கள் யாவை?

2. எவரெஸ்டின் மீது ஏறுவது ஏன் எளிய செயலன்று?

3. எவரெஸ்டின்மீது ஏறிய மெலோரியும், இர்வினும் உற்ற துன்பங்களை எழுதுக.

4. எவரெஸ்டை யார் எப்போது வென்றனர்? அவர்கள் எவ்வாறு பாராட்டப் பெற்றார்கள்?

## பயிற்சி

**1. வாக்கியங்களில் அமைக்க:—**

செல்லச் செல்ல, பல்லாண்டுகளாக, அரும்பாடு பட்டு, பராட்டுரை, வரவேற்பு.

**2. பிரித்து எழுதுக:—**

பிறிதிலையோ, எண்ணற்ற, பனிப்பாறைகள், அருஞ்செயல், இக்குழுவினர், நாட்டுக்கொடி.

# இலக்கணம்

## (சொல்)

1. 'நட'-என்ற அடிச்சொல்லிலிருந்து தோன்றிய மூன்றுகால வினை முற்றுக்களையும் பின் வரும் கட்டத்தில் காண்க.

| | இறந்தகாலம் | நிகழ் காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| நட | நடந்தான் | நடக்கிருன் | நடப்பான் |

கீழ் வரும் சொற்றொடர்களை இறந்தகால வினை முற்றுகளால் முடித்துக் காட்டுக:—

1. இம்மலை ஏறியவர்களுக்குப் பெருந்துன்பத்தை——
2. எவரெஸ்டைக் காணும் முயற்சியில்———

கீழ்வரும் சொற்றொடர்களை நிகழ்கால வினை முற்றுக்களால் முடித்துக் கூறுக:—

1. முருகன் வயலில் நாற்றை———
2. எங்கள் உறவினர் சென்னையில்———

கீழ் வரும் சொற்றொடர்களை எதிர்கால வினைமுற்றுகளால் முடித்துக் காட்டுக:—

1. என் தம்பி உயர்நிலைப் பள்ளியில் படி———
2. அடுத்த ஆண்டில் நீங்கள் ஏழாவது வகுப்பில்——
3. நாளைக்கு நான் நெல்லைக்கு———

II. உண்டான் - என்ற சொல்லை உண் + ட் + ஆன் என்று பிரிக்க வேண்டும். 'உண்' என்பது பகுதி; 'ட்' - இடை நிலை; ஆன் - விகுதி. இம்மூன்று உறுப்புக்களில் காலத்தைக் காட்டுவது எது? அது 'ட்' என்னும் இடை நிலையே. 'ட்' என்னும் இடைநிலை இறந்த காலத்தைக் காட்டும்.

செய்கிருன் — செய் + கிறு + ஆன். 'கிறு'—என்னும் இடை நிலை நிகழ்காலத்தைக் காட்டும்.

செய்வான் — செய் + வ் + ஆன். 'வ்' என்னும் இடை நிலை எதிர்காலத்தைக் காட்டும். இவை போன்று இன்னும் பல இடைநிலைகள் உண்டு. அவைகளையும் அறிந்து கொள்ளுவது நலம்.

குதிப்பார்கள், ஆடுகிருள், கண்டாள் — இவைகளிலுள்ள இடைநிலையைக் கண்டுபிடித்து எழுதுக.

---

## 20. எத்தரை ஏய்த்த சித்தன்

1. கங்கைக் கரையில் அமைந்துள்ள பார்வதிபுரம் என்பது ஒரு சிறிய ஊர். அவ்வூரில் இராமன், பரதன், கண்ணன், கோபாலன் என்ற பெயருடைய இளைஞர் நால்வர் இருந்தனர். இந்நால்வரும் ஒத்த கருத்தும், ஒத்த குணமும், ஒத்த செயலும் உடையவர்; உழைக்காமல், ஏய்த்து உண்டும் உடுத்தும் ஊர் சுற்றுவதையே தொழிலாகவும் உடையவர். இவ்வாறு சோம்பலைத் துணையாகக் கொண்டு சுற்றித் திரிவதை

அவ்வூர்ப் பெரியவர்கள், பெரிதும் முயன்றும் இவ் விளைஞர்களைத் திருத்த முடியவில்லை.

2. ஒரு நாள் அவ்வூருக்கு வெளிப்புறத்தில் இருந்த சத்திரத்தில் அயலூரான் ஒருவன் வந்து தங்கி யிருந்தான். தோற்றத்திலிருந்து அவன் ஒரு செல் வந்தன் என்பதும், அறிவிற் சிறந்த சித்தன் என்பதும் தெரிந்தன. அவனைக் கண்ட பார்வதிபுரத்து இளைஞர் நால்வருக்கும் மனத்தில் ஒரு திட்டம் உதித்தது. எப்படியேனும் அந்த அயலூரானை ஏய்த்து, அவனிட மிருந்து ஏதேனும் பொருள் பெறவேண்டும் என்று அவர்கள் எண்ணினர்.

3. தமது திட்டப்படி அந்நால்வரும் சத்திரத் திற்குச் சென்று அயலூரானைக் கண்டனர்; அவனை அணுகிப் பேசினர். இவ்வண்ணம் சிறிது நேரம் கழிந்த பிறகு, கண்ணன் பிறரை நோக்கி, "தோழர் களே, நாம் பொழுதை வேடிக்கையாகக் கழிக்கலாம். நம்முள் ஒவ்வொருவரும் தாம் நிகழ்த்திய விந்தைச் செயலை விரித்துரைக்க வேண்டும். அவ்விந்தைச் செயல் உண்மையானதோ அன்றோ என எவர் ஐயுறு கின்றாரோ, அவர் விரித்துரைத்தவருக்குப் பத்து ரூபாய் கொடுத்துவிட வேண்டும். இவ்வாறு பந்தயம் கட்டி அவரவர் அனுபவங்களைக் கூறினால் நன்றாயிருக்கும்" என்றான்.

4. இந்த ஏற்பாட்டினை மற்ற இளைஞர் மூவரும் ஏற்றுக்கொண்டது போலவே, அயலூரானும்

ஏற்றுக்கொண்டான். இதற்கிணங்கிய அவ்வயலூரான் ஒரு முட்டாள் என இளைஞர் நால்வரும் எண்ணி, அவனை ஏய்ப்பது எளிது என்று உள்ளூர மகிழ்ந்தனர். தாங்களும் கூறும் பொய்களில், அவ்வயலூரான் மதி மயங்கி, மெய்மறந்து, கண்டிக்க முனைவான் என்றும், அதனால் தாங்கள் வெற்றி பெற்று,' அவனிடமிருந்து பத்து ரூபாய்களைப் பெற்று விடலாம் என்றும் மனக் கோட்டை கட்டினர். எனவே, கோபாலன் ஊருக்குச் சென்று நாட்டாண்மைக்காரரை அழைத்து வந்து, தங்கள் ஏற்பாட்டை அவரிடம் விளக்கி, நடுவுநிலை யாளராய் இருக்குமாறு அவரை அமர்த்தினன்.

5. முதன்முதலாகக் கண்ணன் தன் விந்தைச் செயலை பின்வருமாறு விரித்துரைத்தான்: "நான் என் தாயாரின் கருவில் வளர்கையில், எங்கள் வீட்டெதிரில் இருந்த கொய்யா மரத்திலிருந்து இரண்டு பழங்களைப் பறித்துத் தருமாறு என் தாயார் என் தந்தையாரிடம் வேண்டினர். அம் மரத்தின்மீது ஏறத் தம்மால் இயலா தென்று அவர் கூறிவிட்டார். பிறகு என் தாயார் என் னுடைய அண்ணன்மாரிடத்தில் கேட்டார். அவர்களும் மறுத்து விட்டார்கள். என் தாயார், கொய்யாப்பழத்தின் மீது ஆசைப்பட்டு அது கிடைக்காமல் ஏமாறும்படி ஆயிற்றே என்று நான் வருந்தினேன். கருவுற்றிருக்கும் தாயாரின் ஆசையை நிறைவேற்றி ஆகவேண்டுமென்று முடிவு செய்தேன். மெல்ல வெளியே வந்து மரத்தின் மீதேறினேன். பழங்கள் சிலவற்றைப் பறித்து என் சட்டையில் மூட்டை கட்டி அடுக்களையில் வைத்து

விட்டு, மீண்டும் என் தாயார் கருப்பையில் நுழைந்து கொண்டேன். கொய்யாப்பழம் அங்கு எப்படி வந்த தென்று எவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. என் தாயார் வேண்டியவரை பழங்களைத் தின்றார். பிறகு ஆளுக்கு ஏழு பழங்கள் வீதம் வீட்டில் இருந்த எல்லா ருக்கும் கொடுத்தார். இன்னும் நிறைய இருந்தபடியால் அந்தத் தெருவாருக்கெல்லாம் வழங்கினார். பிறகு மீதிப் பழங்களை வீட்டுவாயிலிற் கொண்டுசென்று குவித்தார். வீட்டு வாயிலே தெரியாதவாறு மூடிக்கொள்ளும் அள வுக்கு அம்மீதிப் பழங்கள் மலைபோலக் குவிந்து கிடந்தன''.

6. இவ்வாறு கண்ணன் கதை கூறி முடித்து அயலூரானை நோக்கியபோது, அவன் நிதானமாக இந்தக் கதையைத் தான் அப்படியே நம்புவதாகக் கூறினான். மற்ற மூவரும் அப்படியே கூறினர். எனவே தன் பொய்களால் அயலூரானை வெல்லக் கண்ணனால் முடியவில்லை.

7. இராமன் தன் கதையை பின் வருமாறு கூறினான்: ''நான் ஒரு வாரக் குழந்தையாயிருந்த போது, காட்டில் உலாவி வரச் சென்றேன். அங்கொரு பெரிய புளிய மரம், நிறையப் பழுத்துக் குலுங்கிக்கொண்டிருக்க கண்டேன். அதைக் கண்டதும் பசி மிகுந்தபடியால் அம் மரத்தின்மீது விரைந்தேறினேன். பசி தீரும்

வரை அப்பழங்களைப் பறித்து உண்டேன்; பசியடங்கிய பின் மரத்தை நோக்கியதில் ஒரு பழமும் விடாமல் பறித்துவிட்டேன் என்பதை அறிந்தேன். ஆனால், நிறையத் தின்றுவிட்டபடியால் மரத்திலிருந்து கீழே இறங்க முடியவில்லை. எனவே, அதற்காக வருந்தாமல் ஊருக்குத் திரும்பி வந்து ஓர் ஏணியை எடுத்துச் சென்று, அப்புளியமரத்தில் சாத்தி, அதுவழியே கீழிறங்கினேன், ஏணி கிடைக்காமற் போயிருந்தால் நான் இன்னும் அந்த மரத்திலேதான் இருக்கவேண்டி நேரிட்டிருக்கும்''.

8. அயலூரான் இவனையும் தான் நம்புவதாகக் கூறிவிட்டான். மற்ற மூவரும் அப்படியே தலையை அசைத்தனர்,

9. பரதன் தன் விந்தைச் செயலைப் பின்வருமாறு விரித்துரைத்தான்: "நான் ஓர் ஆண்டு நிரம்பப் பெற்றவனாய் இருந்தபோது, முயல் வேட்டை ஆடினேன். ஒரு முயலைத் துரத்திச் சென்றபோது, அது புதரொன்றில் புகுந்தது. நான் அதனை விடாமல் விரட்டிச் சென்று புதரில் நுழைந்தபோதுதான், நான் துரத்தியது முயலன்று, புலி என அறிந்தேன். அது வாயை ஆவெனத் திறந்து என்னை விழுங்க வந்தது. ஆனால், நான் அதன் செயல் அநீதி எனக் கண்டித்தேன். 'நான் தேடி வந்தது முயலேயன்றிப் புலியன்று. ஆகையால், என்னை நீ விழுங்க விரும்புவது நியாயமாகாது'. எனக் கூறினேன். ஆனால், புலி நான்

சொன்னதைக் காதில் வாங்காமல், வாயைத் திறந்து கொண்டே என்னருகில் வந்துவிட்டது. எனவே, நான் என் கையால் அதன் மேல்வாயைப் பிடித்து, புதரினின்று வெளியே தள்ளினேன். என்ன வியப்பு! அப்படி மெல்லத் தள்ளியதிலேயே அப்புலி இரண்டாகக் கிழிந்து மாண்டு கிடந்தது.''

10. இக் கதையையும் தான் நம்புவதாக அயலூரான் கூறிவிட்டான். பரதனுலும் அவனை வெல்ல முடியவில்லை.

11. கோபாலன் தன் பொய் மூட்டையைப் பின்வருமாறு அவிழ்த்தான்: ''கடந்த ஆண்டு நான் படகேறிக் கடலில் மீன்பிடிக்கச் சென்றேன். ஒரு மீன்கூடக் கிடைக்கவில்லை. காரணம் என்னவென்பதைக் கடலடியில் சென்று ஆராய்ந்தறிய எண்ணி, நான் படகிலிருந்து கடலில் குதித்தேன். மூன்று நாட்கள் வரை கடலடி நோக்கி மூழ்கிக்கொண்டே சென்று, முடிவில் கடலடியை அடைந்தேன். அங்கு மலை போன்ற ஒரு பெரிய மீன் படுத்திருந்தது. அது மற்ற மீன்களையெல்லாம் தின்று கொண்டிருந்தது. நான் ஒரே குத்தில் அதனைக் கொன்றேன். அதனுல் எனக்குப் பசி மிகுதியாயிற்று. அங்கேயே அந்த மீனைத் தின்றுவிட வேண்டுமென்று எண்ணினேன். உடனே அடுப்பு மூட்டி, அதனைப் பொரித்து ஒரே வாயாகத் தின்றுவிட்டேன். பிறகு நீந்தி நீர்மட்டத்துக்கு வந்து என் படகில் ஏறிக் கரையை அடைந்தேன்.''

12. அயலூரான் இதனையும் தான் நம்புவதாகக் கூறிவிட்டான். எனவே இளைஞர் நால்வரும் நமது எண்ணம் கைகூடாமற் போயிற்றே என வருந்தி, அயலூரான் சொல்லப்போகும் கதையைத் தாம் நம்புவதாகக் கூறிவிட்டால் பந்தயப் பணமாவது தாம் கொடுக்கவேண்டி வராமற் போகுமென்று எண்ணி அமர்ந்திருந்தனர்.

13. பின்பு அயலூரான் தன் கதையைப் பின் வருமாறு கூறினன்: "சில ஆண்டுகளுக்கு முன் நான் பருத்தியைப் பயிரிட்டு வாணிகம் செய்தேன். என் பருத்தி வயலில் ஒருமுறை ஒரே ஒரு பருத்திச் செடி மட்டும் இயற்கையை மீறிப் பெரிதாக மரம்போல வளர்ந்து, சிவப்பு நிறத்துடன் காணப்பட்டது. நீண்ட நாட்கள் வரை இலையோ கிளையோ இல்லாமலிருந்து, திடீரென்று ஒரு நாள் நான்கு கிளைகள் தோன்றின. ஒரு கிளையிலேனும் இலையோ, பூவோ இல்லை யெனினும், கிளைக்கொன்ருக நான்கு பழங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றைப் பறித்து அறுத்தபோது ஒவ்வொரு பழத்திலுமிருந்து ஒவ்வோர் இளைஞன் வெளியில் குதித்தான். அவர்கள் என் வயலில் விளைந்த பருத்தி மரத்தில் பழுத்த பழத்தில் பிறந்தவர்களாகையால், என் அடிமைகளானுர்கள். எனவே, நான், அவர்களை வயலில் வேலை செய்யுமாறு கட்டளையிட்டேன். ஆனல், அவர்கள் நால்வரும் வேலை செய்வதில் விருப்பமில்லாச் சோம்பேறிகள். ஆகையால் சில வாரங்கள் கழிந்தபின் அங்கிருந்து

தப்பி ஓடிவிட்டார்கள். அவர்களைத் தேடி நான் சுற்றாத ஊரில்லை. கடைசியாக இங்குக் கண்டு பிடித்தேன். இளைஞர்களே நீங்கள் நால்வருமே அந்தச் சோம்பேறிகள். எனவே, உடனே என் வயலுக்குப் புறப்படுங்கள்.

14. இளைஞர் நால்வரும், 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே!' என எண்ணி வெட்கினர். கதையை நம்பவில்லை என்றால் பத்து ரூபாய் பந்தயப் பணம் கட்டிவிட வேண்டும். நம்பினால் தாங்கள் நால்வரும் அவ்வயலூரானுக்கு அடிமை வேலைக் காரர்களே என்று ஒப்புக்கொள்ள வேண்டும். 'இருதலைக் கொள்ளி எறும்பு' போன்ற நிலையிலிருந்த அந்நால்வரும் பதிலொன்றும் கூறாமல் மௌனிகளா யிருந்ததைக் கண்ட நாட்டாண்மைக்காரர், மும்முறை கேட்டுவிட்டு, முடிவில் அயலூரான் வென்றதாகக் கூறிச் சென்றார்.

15. இளைஞர் நால்வரும் பந்தயப் பணம் கையில் இல்லாமல் திணறுவதைக் கண்ட அயலூரான், அவர்களைத் தேற்றி, இவ்வாறு ஏய்த்துப் பிழைக்கும் பிழைப்பைக் கைவிடும்படியும், சோம்பேறித் தனத்தை அகற்றி கற்ற பெரியாரை அடைந்து கல்வி கற்று, உழைத்துப் பொருளீட்டி நல்வாழ்வு வாழுமாறும் அவர் களுக்கு அறிவுறை கூறி அனுப்பி வைத்தான்.

## அருஞ்சொற் பொருள்

எத்தன் - பிறரை ஏமாற்றிப் பிழைப்பவன், சித்தன் - அறிவிற் சிறந்தவன், ஏய்த்து - ஏமாற்றி, விரித்துரைத்தல்- விளக்கிச் சொல்லுதல்.

## பயிற்சி

**I. விடை எழுதுக :—**

1. பார்வதி புரத்து இளைஞர் எத்தகையவர் ?
2. அயலூர்ச் சித்தனை ஏய்க்க இளைஞர் நால்வரும் வகுத்த திட்டம் யாது ?
3. கண்ணன் கூறிய கதை யாது ?
4. இராமன் பொய்க்கதை யாது ?
5. பரதன் என்ன கதை கூறினான் ?
6. கோபாலனது பொய் மூட்டை யாது ?
7. அயலூர்ச் சித்தன் இளைஞரை எவ்வாறு வென்றான் ?
8. அயலூர்ச் சித்தன் கூறிய அறிவுரை யாது ?
9. இக்கதையிலிருந்து நீங்கள் அறியும் நீதி யாது ?

**II. சொந்த வாக்கியங்களில் அமைக்க :—**

வெல்ல, ஆராய்ந்து, அயலூரான், என்னருகில்.

**III. பிரித்து எழுதுக :—**

அமைந்துள்ள, விரித்துரைக்க, அயலூரான், உள்ளூற, அங்கொரு, நியாயமாகாது.

**IV. எதிர்ச் சொற்கள் எழுதுக :—**

கீழிறங்கினேன், அநீதி, இடக்கை, கடலடி.

## இலக்கணம்

### (வினை முற்று)

1. நால்வரும் சென்று அயலூரானைக் கண்டனர்.
2. நான் பழங்களைப் பறித்து உண்டேன்.
3. நான் படகிலேறி மீன் பிடிக்கச் சென்றேன்.

இச் சொற்றொடர்களில், **கண்டனர், உண்டேன், சென்றேன்** என்பன வினைமுற்றுக்கள். எழுவாயின் செயலை முடித்துக் காட்டுவதால் அவைகளை வினை முற்றுக்கள் என்று கூறுவார்கள். **முற்று வினைகள்** என்றும் கூறலாம்.

'உண்டான்' என்ற சொல்லிலிருந்து எவற்றை அறியலாம்? 'உண்டான் யாவன்?' என்று வினவினால் 'அவன்' எனப் பதில் கிடைக்கும். அதனால் எழுவாயை அறியலாம். 'உண்டான்' என்பதில் தொழில் முடிந்து விட்டதால், இறந்த காலம் தெரிகிறது.

'உண்டான்' என்பதில் உண்ணலாகிய தொழிலும் தெரிகிறது. வினை முற்றிலிருந்து எழுவாய், தொழில், காலம் இவைகளைத் தெரிந்து கொள்ளலாம்.

கீழ்வரும் சொற்களுக்கு - எழுவாய், தொழில், காலம் இவற்றைக் குறிப்பிடுக:—

கண்டான் — பாய்கின்றன — உறங்கினர்.

'செய்' என்னும் வேர்ச் சொல்லிலிருந்து பிறக்கும் வினை முற்றுச் சொற்களைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| செய்: | | செய்தேன் | |
| | | செய்தாய் | இறந்த காலம். |
| | ஒருமை | செய்தான் | இதுபோல நிகழ்காலத்துக்கும் |
| | | செய்தாள் | எதிர் காலத்துக்கும் எழுதுக. |
| | | செய்தது | |
| | | செய்தோம் | |
| | | செய்தீர் | இறந்த காலம். |
| | பன்மை | செய்தீர்கள் | இது போல நிகழ்காலத் |
| | | செய்தனர் | துக்கும் எதிர்காலத்துக்கும் |
| | | செய்தார்கள் | எழுதுக. |
| | | செய்தன | |

'படி'—என்னும் வினைப் பகுதியிலிருந்து மேற் காட்டிய வாறு வினை முற்றுக்களை அமைத்து எழுதுக.

# 21. புலவர் பெருமிதம்

1. சங்க காலத்தில் பெருந்தலைச் சாத்தனுர் என்ற செந்தமிழ்ப் புலவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் செய்யுட்கள் இயற்றுவதில் வல்லவர்; திறம் படப் பேசுவதிலும் வல்லவர்; மன்னர்களாலும், வள்ளல்களாலும் பெரிதும் மதிக்கப்பெற்ற சிறப்பினை உடையவர்; கருணையுள்ளம் படைத்தவர்.

2. அப்புலவர் கொடிய வறுமையடைந்தார். அவரது குடும்பம் மிக்க தொல்லையுற்றது. முதுமைப் பருவத்தினரான அவர் அன்னையார் குடும்பத்தில் நிலவும் வறுமையைப் பொறுக்க முடியாமல், முணு முணுத்தார். அவர் மனைவி குப்பையில் முளைத்துக் கிடந்த வேளைக்கீரையைப் பறித்து வந்து, உப் பில்லாமல் வேகவைத்து அனைவருக்கும் கொடுத்துத் தானும் உண்டாள். புலவர் சாத்தனுர் தமது குடும்பத் தாரின் நிலைமையைக் கண்டார். பசி பொறுக்காது பதறியழும் பச்சிளங்குழந்தையின் துன்பமும், அன்னை யின் முணுமுணுப்பும், இல்லாளின் சோர்ந்த தோற்ற மும் புலவரின் உள்ளத்தை உறுத்தின. எனவே, அவர் வரையாது கொடுக்கும் வள்ளல்களை நாடிச் சென்று பொருள் பெற்றுவரத் துணிந்து புறப்பட்டார்.

3. சாத்தனுர் வெளிமான் என்ற வள்ளலின் உறைவிடத்தை அடைந்தார். அவன் ஒரு குறுநில மன்னன்; புலவர்பால் பெரு மதிப்புக் கொண்டவன்; தன்னை நாடி வந்தோர்க்கு வரையாது வழங்குபவன்.

சாத்தனுர் காணச்சென்றபோது அவன் நோயுற்றுப் படுக்கையில் கிடந்தான். அவனது தம்பியான இளவெளிமான் கொடைப்பண்பு சிறிதும் இல்லாதவன். புலவருக்குப் பொருள் கொடாவிட்டால் அவர் சினங் கொள்வரே என்று அஞ்சிச் சிறிதளவு பொருளை அவருக்குக் கொடுக்க முன் வந்தான். அதனைக் கண்ட சாத்தனுர் சினமுற்ருர். தமது பெருமையை அறியாமல் இளவெளிமான் கொடுக்க முன் வந்த பரிசிலை அவர் பெற்றுக் கொள்ளாமல், அவனை நோக்கி, மன்னனே, என் தகுதியை அறியாது நீர் தரும் பரிசிலை யான் வேண்டேன். தக்க பெருமிதத்துடன் மீண்டு வந்து உன்னைக் காண்பேன்!'' எனக் கூறி அங்கிருந்து புறப் பட்டார்.

4. அந்நாளில் முதிரம் என்ற மலையையும் அதனைச் சார்ந்துள்ள ஊர்களையும் குமணன் என்ற குறுநில மன்னன் ஆண்டு வந்தான். அவன் புலவரைப் போற்றும் புரவலனுய் விளங்கினுன்; இரவலருக்கு ஈந்து, அவர் இனிய முகத்தைக் கண்டு களிக்கும் இயல்பினனுய் இருந்தான். அவனது கொடைப் பண்பை முன்பே கேள்வியுற்றிருந்த சாத்தனுர், காடும் மலையும் கடந்து சென்று முதிர நாட்டை அடைந்தார். அங்குக் குமணனைக் கண்டார். குமணன் புலவரை வரவேற்று உபசரித்தான். சாத்தனுர் குமணனைப் புகழ்ந்து பாடினுர்; தமது வறுமை நிலையை எடுத்துரைத்தார். குமணன் புலவரின் ஆற்றலையுணர்ந்து அவரைப் பெரிதும் போற்றி உபசரித்தான்; அவருக்குப் பொருளைப் பரிசாகக் கொடுத்தான்; யானைக் கன்றும், வளநாடும் தந்தான்.

சாத்தனுர் அப்பரிசுகளைப் பெற்றுக்கொண்டு, மகிழ்வுடன் புறப்பட்டார்.

5. புலவர் இடைவழியில் இளவெளிமானின் நாட்டை அடைந்தார். அங்கு அவனது அரண்மனையை நாடிச்சென்று, வாயிலின் எதிரில் உள்ள காவல் மரத்தில் யானையைக் கட்டினுர் ; பின்னர்த் தமது வருகையை இளவெளிமானுக்கு அறிவித்தார். இள வெளிமான் புலவரைக்காண வந்தபோது, "மன்னனே, எமது தகுதியை அறிந்து பரிசில் வழங்கும் வள்ளல் இத் தமிழகத்தில் இல்லாமல் போகவில்லை. அதோ பார் ! உனது காவல் மரத்தில் பிணிக்கப்பெற்ற களிறு, குமண வள்ளல் எமக்கு ஈந்த பரிசில் ஆகும். அதனை யாம் உனக்கு அன்பளிப்பாக அளிக்கிறோம்!" எனப் பெருமிதந் தோன்றக் கூறி அவ்விடத்தை விட்டு அகன்றார். வறுமையால் வாடிய காலத்தும் புலவர் தம் பெருமிதத்தில் குன்றார் என்பதற்குப் பெருந்தலைச் சாத்தனுரின் வரலாறு தக்க சான்றாய் விளங்குகின்றது.

6. அக்காலத்தில் சோழ நாட்டில் வெள்ளைக்குடி என்னும் சிற்றூரில் நாகனுர் என்ற புலவர் வாழ்ந்து வந்தார். உழுதொழிலின் சிறப்பையுணர்ந்த அப் புலவர் பெருமான் அத்தொழிலைச் செம்மையாகச் செய்து வந்தார். செந்தமிழிற் பாடல்கள் இயற்றித் தமிழ்ப் பணியும் புரிந்து வந்தார். அவர் உண்மையை நிலைநாட்ட உறுதியுடன் பாடு படும் இயல்பினர்.

7. அந்நாளில் சோழ வளநாட்டைக் கிள்ளி வளவன் என்ற வேந்தன் ஆண்டு வந்தான்.

அம் மன்னவன் கொடை வீரமும் படைவீரமும் பொருந்தியவன். புலவர்களைப் போற்றும் இயல்பினன். அவனது ஆட்சிக் காலத்தில் ஒரு முறை சோழநாட்டில் வானம் பொய்த்தது; நாடெங்கும் நீர் வளமும் நில வளமும் குன்றின; நிலங்களின் விளைவு குன்றியதால் உழவர் பெரிதும் துன்பமுற்றனர். அவர்களால் நிலவரியைச் செலுத்த இயலவில்லை. ஆனால், அரசாங்க அலுவலர்கள் வரி செலுத்தும்படி அவர்களைத் துன்புறுத்தினார்கள். யாது காரணத்தாலோ வளவன் இக் கொடுமையை அறியாதவனாய் இருந்தான்.

8. வெள்ளைக்குடி நாகனார் உழவரின் நிலையைக் கண்டு வேதனையுற்றார். மன்னனிடம் இந்நிலையை எடுத்துரைத்து, நன்மை பெறுவதற்கு வழி யாதெனச் சிந்தித்தார். இறுதியில் அவர் ஒரு முடிவிற்கு வந்தார். நாகனார் அரசியல் அலுவலர்கள் வரி கேட்க வந்த போது, கொடுக்க மறுத்தார். எனவே, அவர்கள் அப்புலவரைக் குற்றவாளியாக்கி, அவைக்கு அழைத்துச் சென்றார்கள். கிள்ளி வளவன் புலவரை ஏறிட்டு நோக்கினான். அமைதி தவழும் அவர் முகத்தைக் கண்டதும் 'இவர் எப்படிக் குற்றவாளி யானார்?' எனச் சிறிது நேரம் சிந்தித்தான். பின்னர் அவன் புலவரை நோக்கி, "நீர் யார்?" எனச் செருக்குடன் வினவினான்.

9. புலவர் வளவனை நோக்கி "புலவர் போற்றும் புரவலரே, மக்களிடம் மன்னராகிய நீங்கள் இறை பெறுவதைத் தடுப்பது எனது நோக்கமன்று. மக்கள்

மனம் நோகாதவாறு இனிய வழிகளில் வரியைப் பெறுதல் வேண்டும். அவர்களை வருத்திப் பெறுவது பயன் அளிக்காது. குடிமக்களை அன்பினால் அணைத்து ஆட்சி புரியும் மன்னனே சிறந்தோன் ஆவன். சோழ நாட்டில் இப்போது மழை வளம் குன்றியிருப்பது நீங்கள் அறியாததன்று. நிலங்களின் விளைவு குன்றி விட்டது. உழவர்கள் பெரிதும் துன்புற்று வருந்துகின்றார்கள். நாட்டிற்கு உணவளிக்கும் சீரிய பணியில் ஈடுபட்டுள்ள அவர்களை வற்புறுத்தி வரி வாங்குவதும் சிறிதும் முறையன்று. இதனை உங்களுக்கு உணர்த்தவே யான் இந்த வழியைக் கையாண்டேன்' எனக் கூறினார்.

10. கிள்ளி வளவன் நாகனார் கூறிய சொற்களின் உண்மையை உணர்ந்தான். மன்னுயிர்க்கு உணவு அளிக்கும் மாசற்ற உழவர்களுக்கு நன்மை புரிந்தால் தான் தன்னாடு தழைக்கும் என்பதனை அறிந்தான். அவன் நாகனாரைப் பாராட்டிப் பல பரிசல்கள் வழங்கினான். உழவர்களின் வரியைத் தள்ளுபடி செய்தான்.

11. இவ்வாறு தமது மதி நுட்பத்தாலும் நா வன்மையாலும் நாடு போற்றும்படி பெருமித வாழ்வு நடத்திய புலவர் பலர் பண்டைத் தமிழகத்தில் இருந்தனர். அவர்களுடைய சுவை மிக்க வரலாறுகளைச் சங்க நூல்கள் வாயிலாக நன்கு உணரலாம்.

## அருஞ்சொற்பொருள்

குறுநிலம் - சிறு நாடு, புரவலன் - வள்ளல், ஈந்து - கொடுத்து, களிறு - ஆண் யானை, இறை-வரி, கொற்றவன்- மன்னன், ஏறிட்டு - நிமிர்ந்து.

## வினாக்கள்

1. புலவர்களின் வாழ்க்கை எத்தகையது?

2. பெருந்தலைச் சாத்தனார் இயல்பு யாது?

3. புலவரின் குடும்பம் எத்தகைய வறுமையை அடைந்தது?

4. இளவெளிமான் தந்த பரிசிலைப் புலவர் ஏன் பெற்றுக் கொள்ளவில்லை?

5. குமணன் சாத்தனாரை எவ்வாறு போற்றினான்?

6. சாத்தனாரின் பெருமிதத்தை விளக்குக.

7. நாகனாரின் தன்மைகள் யாவை?

8. அவர் இறை செலுத்த மறுத்தது எதனால்?

9. புலவர் வளவனிடம் யாது கூறினார்?

## பயிற்சி

எதிர்ப் பதங்களை இணைத்து எழுதுக:—

குறுநிலம், இனிய, புகழ்ச்சி, போற்றுதல், இரவலர், செங்கோல், புரவலர், இகழ்ச்சி, கொடுங்கோல், பெருநிலம், தூற்றுதல், இன்னாத.

# 22. பட்டீச்சுரத்திற் கேட்ட பாடம்

(டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்)

[ கீழே தரப்பட்டுள்ள பாடம் டாக்டர் சாமிநாத ஐயர் எழுதிய 'என் சரிதம்' என்னும் புத்தகத்தில் உள்ளது. அவர் ஆசிரியர் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை ]

1. ஒரு புலவருடைய பெருமையை ஆயிரக் கணக்கான பாடல்களால் அறிந்து கொள்ள வேண்டு மென்பதில்லை. உண்மைக் கவித்துவம் என்பது ஒரு பாட்டிலும் பிரகாசிக்கும்; ஓர் அடியிலும் புலப் படும். பதினுயிரக்கணக்கான இரசமில்லாத பாடல்களை இயற்றிக் குவிப்பதைவிடச் சில பாடல் செய்தாலும் பிழையில்லாமல் சுவை நிரம்பியனவாகச் செய்வதே மேலானது.

2. "சத்தி முற்றப் புலவர் என்பவரைப் பற்றித் தமிழ் படித்தவர்களிற் பெரும்பாலோர் அறிவார். அப் புலவர் இயற்றிய அகவல் ஒன்று அவரது புகழுக்கு முக்கியமான காரணம். 'நாராய், நாராய், செங்கால் நாராய்' என்று தொடங்கும் பாட்டு ஒன்றே அவரிடத் தில் இயல்பாக உள்ள கவித்துவத்தைத் தெளிவாக வெளியிடுகிறது. 'பனங்கிழங்கு பிளந்தாற் போன்ற கூரிய வாயையுடைய நாரையே' என்று நாரையை அவர் அழைக்கிருர். இந்த உவமை பாண்டிய மன்னனது உள்ளத்தைக் கவர்ந்ததாம்! ஆடையின்றி வாடையினுல் மெலிந்து, கையினுல் உடம்பைப் பொத்திக் கிடக்கும் தம் நிலையை அந்த வித்துவான் எவ்வளவு அழகாக வருணித்திருக்கிருர்! தாம் படுகின்ற

கஷ்டம் அவருக்குப் பெரிதாகத் தோன்றவில்லை; தம் மனைவி தமது வீட்டிற்படும் துன்பங்களை நினைந்து வாடுகிறார். அந்த அருமையான பாடலை இயற்றினவர் இந்த ஊரிலேதான் வாழ்ந்து வந்தார்,'' என்று என் ஆசிரியர் பட்டீச்சுரத்தை அடைந்தவுடன் கூறினார்.

சத்தி முற்றம்

3. ''இது பட்டீச்சுரமல்லவோ?'' என்று நான் கேட்டேன். ''ஆம், அதோ தெரிகிறதே, அதுதான் சத்தி முற்றம் கோயில். பட்டீச்சுரமும் சத்தி முற்றமும் நெருங்கி யிருக்கின்றன. பட்டீச்சுரத்தின் வடக்கு வீதியே சத்தி முற்றத்தின் தெற்கு வீதியாய் இருக் கிறது.''

''அந்தப் புலவருடைய பரம்பரையினர் இப்போது இருக்கிறார்களா?''

இருக்கிறார்கள். ஒருவர் தமிழறிவுள்ளவராய் இருக் கிறார். அவரை நீரும் பார்க்கலாம்.''

4. பிள்ளையவர்கள் அந்த இடத்தைப் பற்றிய சரித்திரச் செய்திகளையும், ஸ்தலமானால் அதன் சம்பந்த மான புராண வரலாறுகளையும் உடனிருப்பவர்களுக்குச் சொல்வது வழக்கம். ஸ்தல வரலாறுகளைத் தெரிந்து கொண்டு சமயம் நேர்ந்த போது, தாம் இயற்றும் நூல் களில் அமைத்துக் கொள்ளும் இயல்பையுடைய அவர், தமிழ் நாட்டு ஸ்தலங்களைப் பற்றிய விஷயங்களைத் தெரிந்திருந்தார்.

அரண்மனைச் சுவர் :

5. பட்டீச்சுரத்தில் நாங்கள் புகுவதற்கு முன் ஓரிடத்தில் மிகவும் உயரமாய் இடிந்த கட்டடம் ஒன்றைக் கண்டோம். இரண்டு சுவர்கள் கூடிய மூலையாய் அது தோன்றியது ; அதன் உயரம் ஒரு பனை மரத்தின் அளவுக்குமேல் இருந்தது. பின்பு கவனித்த தில் பல படைகளையுடைய மதிலின் சிதைந்த பகுதி யாக இருக்கலாமென்று எண்ணினேம்.

6. "இந்த இடத்தில் இவ்வளவு பெரிய கட்டடம் இருத்தற்குக் காரணம் என்ன?" என்று அதைப் பற்றி என் ஆசிரியரைக் கேட்டேன்.

7. பட்டீச்சுரத்தைச் சுற்றியுள்ள ஊர்களில் ஒன்ருகிய சோழன் மாளிகை என்பது இது. இந்த இடத்திலே சோழ அரசர்களுக்குரிய அரண்மனை முன்பு இருந்தது என்றும், இந்த இடிந்த கட்டடம் அரண்மனைச் சுவர் என்றும் இங்குள்ளவர்கள் சொல்வ துண்டு.

பழையாறை :

8. பட்டீச்சுரத்தைச் சுற்றியுள்ள இடங்களி லெல்லாம் பழைய சரித்திரத்தை விளக்கும் சின்னங்கள் நிரம்பியிருக்கின்றன. நான் பட்டீச்சுரத்தில் தங்கி யிருந்த காலங்களில் தெரிந்து கொண்ட செய்திகளை யன்றி, அப்பால் இலக்கியங்களாலும், கேள்வியாலும் சிலாசாஸனங்களாலும் தெரிந்து கொண்ட விஷயங்கள் பல. சோழ அரசர்கள் தமக்குரிய இராசதானியாகக்

கொண்டிருந்த பழையாறை என்னும் நகரத்தின் பல பகுதிகளே இப்போது தனித்தனி ஊர்களாய் உள்ளன. அந்த பழைய நகரத்தைச் சேக்கிழார், தம் பெரிய புராணத்தில், 'பாரில் நீடிய பெருமை சேர்பதி பழையாறை' என்று பாராட்டுகிருர். இப்போது பட்டீச்சுரத்திற்கு அருகில் கீழைப் பழையாறை என்னும் ஓர் ஊர்தான் அப்பழம் பெயரைக் காப்பாற்றி வருகிறது. சரித்திர விசேஷங்களால் அவ்விடங்கள் ஜனங்களுடைய அன்புக்கு உரியனவாய் இருந்தன. இப்போது அந்த மதிப்பும் குறைந்து விட்டது. நாங்கள் பட்டீச்சுரத்தில் ஆறுமுகத்தா பிள்ளையின் வீட்டில் தங்கினேம். அவர் அங்கு ஒரு ஜமீந்தாரைப் போலவே வாழ்ந்து வந்தார். பிள்ளையவர்களை அவர் மிக்க அன்போடு உபசாரம் செய்து பாதுகாத்து வந்தார். அக்கிரகாரத்தில் அப்பாத்துரை ஐயர் என்பவர் வீட்டில் நான் ஆகாரம் செய்து கொள்ளும்படி ஏற்பாடு செய்திருந்தார்.

விலகிய நந்தி:

9. பட்டீச்சுரம் சென்ற முதல் நாள் மாலையில் பிள்ளையவர்கள் வெளியே உலாத்தி வரப் புறப்பட்டார். நான் உடன் சென்றேன். அவ்வூருக்கு அருகிலுள்ள திருமலைராயனுற்றிற்கு அழைத்துச் சென்ருர். போகும் போது பட்டீச்சுர ஆலயம் வழியே சென்ரேம். அவ்வாலயத்தில் நந்தி தேவர் சந்நிதியை விட்டு மிக விலகியிருப்பதைக் கண்டேன். நந்தனர் சரித்திரத்தைப் படித்து ஊறிய எனக்கு, அவர் சிவபெருமானைத்

தரிசிக்கும் பொருட்டுத் திருப்புன்கூரில் நந்தி விலகினு ரென்ற செய்தி நினைவுக்கு வந்தது. இங்கே எந்த அன்பருக்காக விலகினுரோ என்று எண்ணிய போது என் சந்தேகத்தை என் முகக்குறிப்பினுல் உணர்ந்த ஆசிரியர், "திருச்சத்தி முற்றத்திலிருந்து திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் சிவபெருமான் அருளிய முத்துப் பத்தரின் கீழே இவ்வழியாகத் தரிசனத்துக்கு எழுந்தருளினுர். அவர் முத்துப் பந்தரின் கீழே வரும் கோலத்தைத் தாம் பார்த்து மகிழ்வதற்காக இக்கோயிலில் எழுந்தருளியுள்ள தேனுபுரீசுவரர் நந்தியை விலகும்படி கட்டளையிட்டனராம். அதனுலே தான் விலகியிருக்கிருர்" என்ருர்.

## அருஞ்சொற்பொருள்:

கவித்துவம் — கவிபாடும் திறமை, இரசம் — சுவை, கவர்ந்தது — ஈர்த்தது, உள்ளம் — மனம், சிலாசாஸனம்— பாறை எழுத்து, இராசதானி—தலைநகரம், அக்கிரகாரம் — பிராமணர் வசிக்கும் தெரு, கோலம்—அழகு.

## பயிற்சி

1. விடை எழுதுக:—

(அ) டாக்டர் சாமிநாத அய்யர் அவர்களின் ஆசிரியர் யார்?

(ஆ) சத்திமுற்றம் எங்கிருக்கிறது ?

(இ) சத்திமுற்றப் புலவர் இயற்றிய பாட்டின் கருத்து யாது ?

(ஈ) நந்தனுருக்காக நந்தி விலகிய திருத்தலம் எது?

(உ) பட்டீச்சுவரத்தில் ஏன் நந்தி விலகினுர் ?

2. வாக்கியங்களில் அமைக்க:—

கவித்துவம், சுவை நிரம்பிய, உவமை, வருணித்திருக்கிருர்.

---

# 23. அறிவே ஆற்றல்

1. தெலுங்கு நாட்டில் தெனுலி என்னும் ஓர் ஊர் இருக்கிறது. அவ்வூரில் இராமன் என்ற ஒருவன் இருந்தான். அவன் மிகவும் புத்திக் கூர்மையும், செயலாற்றலும் படைத்தவன். வேடிக்கையாகப் பேசுவதில் அவனுக்கு விருப்பம் அதிகம். விசய நகரத்தை ஆண்ட கிருஷ்ணதேவ ராயர் அவனது விகடத்தை மெச்சித் தம் அவையில் அவனை 'விகடகவி' யாக அமர்த்திக் கொண்டார். ஒரு சமயம் இராயர் தம் சபையில் இருந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குதிரைக் குட்டியைக் கொடுத்தார். அவற்றை நன்ருக வளர்ப்பவருக்கு பரிசளிப்பதாகக் கூறிஞர். அவைகளின் வளர்ப்புச் செலவுக்காக நாளொன்றுக்கு மூன்று ரூபாய் அளித்து வந்தார். இராமனுக்கும் ஒரு குதிரைக் குட்டி கொடுக்கப்பட்டது.

2. எல்லோரும் குதிரைக் குட்டியை மிகவும் அக்கரையுடன் வளர்த்து வந்தனர். ஆனால் இராமன் மட்டும் குதிரைக் குட்டிக்கெனக் கொடுக்கப்பட்ட பொருளைத் தானே செலவு செய்துவிட்டான்; குதிரைக் குட்டியைக் கவனிப்பதே இல்லை. குதிரைக் குட்டி சில நாட்களில் மிகவும் இளைத்து விட்டது. ஒரு நாள் இராயர் தம் சபையில் குதிரைக் குட்டிகளைப் பற்றி விசாரித்தார். ஒவ்வொருவரும் தத்தம் குதிரைக் குட்டியைப் பற்றிப் பெருமையாகக் கூறினர்.

3. இராயர் தெனாலிராமனைப் பார்த்து, "உனது குதிரை எவ்வாறு இருக்கிறது?" என்று வினவினார். தெனாலிராமன், "அரசே, எனது குதிரை மிகவும் கொழுத்து வளர்ந்து வனப்பாகக் காணப்படுகிறது; எந்நேரமும் துள்ளி விளையாடி ஒரே ஆர்ப்பாட்டம் செய்கிறது. நீங்கள் கொடுக்கும் பணத்தோடு நானும் குதிரைக்குச் செலவு செய்கிறேன்" என்று தன் குதிரையைப் புகழ்ந்து கூறினான். அதைக் கேட்ட இராயர், அவனது அக்கரையை மெச்சி மேலும் நாள் தோறும் இரண்டு ரூபாய் சேர்த்துக் கொடுக்குமாறு கட்டளையிட்டார்.

4. ஆனால், இராமன் வீடு சேர்ந்ததும் நான்கு பக்கமும் சுவரை எழுப்பி, நடுவில் குதிரையை விட்டு விட்டான். சுவரின் ஒரு பக்கத்தில் ஒரு நாளைக்கு ஒரு முறை ஒரு துவாரம் வழியாகச் சிறிது புல்லைக் கொடுத்துவிட்டுப் போவான். தீனி கொடுக்கு முன்னர்

அவன் ஒரு மணியை அடிப்பான். நாளடைவில் குதிரை மணிச் சத்தம் கேட்டவுடன் தன் சொந்தக் காரன் புல் கொடுக்க வந்துவிட்டான் என அறிந்து கொள்ளும். அது தண்ணீர் குடிப்பதற்கும் உள்ளே ஒரு தொட்டி அமைக்கப்பட்டிருந்தது. வெளியில் இருந்தபடியே அதில் தண்ணீர் நிரப்ப ஏற்பாடு செய்தான் இராமன். குதிரைக்கு மிகவும் குறைந்த அளவே புல் போடப்பட்டதால் நாள் முழுதும் எப்போது புல் கிடைக்கும் என்பதை அது எதிர் பார்த்துக்கொண்டே இருக்கும். கொடுப்பது பசும் புல்லானுலும், காய்ந்த புல்லானுலும் அது தின்பதற்குத் தயங்குவதில்லே.

5. ஒரு நாள் இராயர் குதிரைகளேப் பார்வையிட விரும்பித் தத்தம் குதிரைகளேக் கொண்டு வருமாறு அனேவருக்கும் கட்டளேயிட்டார். எல்லாரும் நன்கு வளர்ந்திருந்த தத்தம் குதிரைகளே நன்கு அலங்கரித்துக் கொண்டுவந்து இராயரிடம் காட்டிப் பரிசில் பெற்றனர். இராமன் மட்டும் குதிரையைக் கொண்டு வராமல் தனியே வந்திருந்தான். இராயர் அவனேப் பார்த்து "குதிரை எங்கே?" என்று கேட்டார். தெனுலிராமன், "அரசே, என்னிடம் இருக்கும் குதிரையை ஒருவராலும் அடக்க முடியாது. உம்மிடமிருக்கும் சிறந்த வீரர் ஒரு வரை அனுப்பும். அவர்தாம் அக்குதிரையை அடக்கிக் கொண்டு வர முடியும்", என்று சொன்னுன். உடனே இராயர் பெருமகிழ்வுற்றுத் தம் குதிரைத் தலேவர்களுள் சிறந்த ஓர் இராவுத்தனே இராமனுடன்

அனுப்பிக் குதிரையைக் கொண்டுவரும்படி கட்டளை இட்டார். அந்த இராவுத்தன், "உம் குதிரை அவ்வளவு துடுக்குத்தனம் செய்கிறதா? நான் இதனை ஒரு நொடியில் அடக்கி விடுகிறேன் பாரும்" என்று வீரம் பேசிக்கொண்டே பலவீரர்களுடன் வந்தவன், "குதிரை எங்கே?" என்று கேட்டான். தெனாலிராமன், "அதோ! உள்ளே பாருங்கள்" என்று சுவரின் துவாரத்தைக் கையால் காட்டிக் கொண்டே மணியை அடித்தான்.

6. குதிரை தனக்கு தீனி கொடுப்பதற்குத்தான் மணியடிக்கப்படுகிறதென்று கருதித் துவாரத்தின் அருகில் வந்தது. அப்போது இராவுத்தன் தலையைத் துவாரத்தில் நீட்டிக் குதிரையைப் பார்த்தான். குதிரை அவன் தாடியைப் புல் என நினைத்து இறுகப் பற்றிக் கொண்டது. இராவுத்தன் தாடியை இழுத்துப் பார்த்தான். குதிரை விடவில்லை. அவனுடன் வந்தவர் அவனைப் பிடித்து இழுக்க, இராவுத்தன் மிகவும் அலுத்துப் போய்விட்டான். வீரர்களோ, இராவுத்தனை மிகவும் பலமாக இழுத்தார்கள். குதிரையோ, பிடித்த பிடியை விடவில்லை. இறுதியில் குதிரை அவன் தாடியைப் பிய்த்துக்கொண்டுதான் விட்டது. அதன் பின் வீரர் பலர் சுவரை இடித்துக் குதிரையை நடத்திக்கொண்டு போயினர். குதிரை நடக்கக்கூடச் சக்தியற்று மிகவும் தள்ளாடிச் சென்றது.

7. குதிரையைக் கண்ட இராயர் கோபங் கொண்டு இராமனை நோக்கி, "நான் நாள்தோறும் ஐந்து ரூபாய் கொடுத்திருந்தும் ஏன் குதிரை இவ்வளவு

இளைத்து இருக்கிறது?'' என்று கேட்டார். தெனாலி ராமன், ''அரசே, நான் எவ்வளவு எச்சரிக்கையாய் வளர்த்தும் இக்குதிரை நம் இராவுத்தரின் தாடியைப் பிய்த்துவிட்டதே! கொழுக்க வளர்த்தால் என்ன செய்யும்? எண்ணிப் பாருங்கள்!'' என்றான். அதே சமயம் தாடியைப் பறிகொடுத்த இராவுத்தன் இராயரைக் கண்டு கோவென்று கதறியழுதான். இராயர் அவனுக்கு ஆறுதல் கூறிப் பணம் கொடுத்து அனுப்பினார்.

## அருஞ்சொற்பொருள்

விகடம்-விநோதப் பேச்சு, பரிசு-வெகுமதி, அக்கறை-கவனம், வனப்பு-அழகு, ஆர்ப்பாட்டம்-துடுக்கு, புகழ்ந்து-பெருமைப்படுத்தி, மகிழ்வு-சந்தோடம், துவாரம்-துளை.

## பயிற்சி

1. விடை எழுதுக:—

(அ) தெனாலி எங்கிருக்கிறது?

(ஆ) தெனாலிராமன் எதிற் சிறந்தவன்?

(இ) இராயர் அவனுக்கு ஏன் குதிரைக் குட்டி கொடுத்தார்?

(ஈ) இராமன் குதிரைக் குட்டியை என்ன செய்தான் ?

(உ) குதிரைக் குட்டி இராவுத்தரை என்ன செய்தது ? ஏன் அவ்வாறு செய்தது ?

2. **வாக்கியங்களில் அமைக்க :—**

விகடம், பரிசு, அக்கறை, புகழ், மகிழ்ச்சி.

---

# 24. கடலுக்குள்ளே

1. நாம் வாழும் உலகத்தின் மீதுள்ள நிலப் பரப்பைப் போல மூன்று பங்கு பெரியது கடற்பரப்பு. கரையருகில் நின்று கடலை நோக்கும் எவனும் அதன் பெருமையைக் குறித்து வியப்படையாமலிரான். இத்தகைய கடலின்மீது கப்பலைச் செலுத்திப் பல விடங்களுக்குச் சென்று பல அதிசயங்களை மக்கள் கண்டறிந்துள்ளார்கள். கடற்பரப்பிலும், நிலப்பரப்பி லும் காணக்கிடக்கும் அதிசயப் பொருள்களைக் காட்டிலும் கடலுக்குள் இருக்கும் பொருள்களே மிகவும் அதிசயமானவையாகும். ஆனால் கடலுக்குள் சென்று அவற்றைக் கண்டவர் மிகச் சிலரே யாவர். பெரிய நீர்மூழ்கிக் கப்பல்களுங்கூடச் சில நூறு அடி ஆழம் வரைதான் செல்ல முடியும். சாதாரணமாகக் கவச உடையுடன் முத்துக் குளிப்பவரும் குறைந்த அளவு ஆழந்தான் செல்கின்றனர்.

2. முத்துக் குளிக்கும் துறையாழக் கடற் பகுதிகளில் நீர் அழகிய பசுமை நிறம் கலந்த ஒளியோடு வெப்பமுடையதாய் இருக்கும். இந் நீர்ப் பகுதியின் மூலம் கடலடியில் இருக்கும் பொருள்களைத் தெளிவாகக் காணலாம். சுரு மீன்களையும் வேறு நீர் விரோதிகளையும் பொருட்படுத்தாது முத்துச் சிப்பியைத் தேடி நீரில் மூழ்கும் மனிதன், கடலடியில் காண்பது என்ன? அது 'விண்ணவர் உலகமோ!' என்று வியக்கத்தக்க பவளத் தோட்டம்! அங்கே பல வண்ணங்கள் கொண்ட பவளங்கள் கிளை கிளையாகப் படர்ந்திருப்பதும் அவற்றின் நடுவே பன்னிற ஓடுகளைக் கொண்ட வண்ணத்துப்பூச்சி மீன்களும், வினோத உருவங்களைக் கொண்ட கடல் விசிறிகளும், நட்சத்திர மீன்களும், குவிந்து மலரும் மொட்டுகள் போலக் குவிந்து விரியும் பவளப் பூச்சிகளும் வெவ்வேறு நிறத்தனவாய்க் காண்பவர் கண்களுக்கு விருந்தளிக்கும்.

3. உயிர்களின் வருகையால் பயந்து குவிந்த கடற்பூச்சிகள் தம்மிடங்களை விட்டு நகர்ந்ததும் சிவப்பு ரோஜா, ஆரஞ்சு, கருநீலம், மஞ்சள், பச்சை முதலிய வண்ணங்களைக் கொண்ட தங்கள் இதழ்போன்ற உறுப்புக்களை வெளியே நீட்டிக்கொண்டு அசைவதைக் காணும்போது மந்திரக்காரனது கோல் பட்ட மாத்திரத்தில் மலர்ந்த மலர் வனத்தைப் போலத் தோன்றும். வண்ணத்துப் பூச்சி மீன்கள் தம் பெயருக்கேற்பப் பல வண்ணப் பட்டைகளைத் தம்மீது கொண்டுள்ளன. இவை அகன்ற மெல்லிய உடலுடன் மிகச் சிறிய குழல்

போன்ற வாயை மற்றப் பூச்சிகளின் ஓடுகளின் ஓரங்களில் வைத்து ஓட்டுக்குள்ளிருக்கும் பூச்சியை உறிஞ்சி விழுங்கி விடுகின்றன. இவற்றின் உடல்மீது காணப்படும் பல நிறப் பட்டைகளில் மிகுந்து காணப்படுவன பொன்நிற மஞ்சள், வெள்ளை, பளபளப்பான கறுப்பு ஆகிய வண்ணங்களே.

4. இப் பூச்சிகளின் நிறம் சுற்றுப்புற வண்ணங்களை ஒத்திருப்பதாலும், இவை தம் அகன்ற உடலிலுள்ள முள் நிறைந்த இறகுகளுடன் விரைவாக நீந்தக் கூடியவையாயிருப்பதாலும், மிகவும் பாதுகாப்புடன் உலவுகின்றன.

5. ஆஸ்திரேலியக் கடற்பகுதிகளில் கடற்குதிரை எனப்படும் ஒருவகைப் பிராணி காணப்படுகிறது. இது அருவருப்பான உடலுடன் சற்று ஏறக்குறைய குதிரையின் தலையை ஒத்த முகத்தைப் பெற்றிருக்கும். இதன் நிறமும் சுற்றுப்புறத்திற் கேற்ப அமைந்துள்ளது. அன்றியும் இது இருக்கும் இடத்திற்கேற்ப நிறத்தை மாற்றிக்கொள்ளும் தன்மை வாய்ந்தது. இது பிற உயிர்களுக்குத் தீங்கு செய்வதில்லை. இவ்வினத்தில் ஆண் பிராணிகளே முட்டைகளையும் குஞ்சுகளையும் பாதுகாக்கின்றன.

6. இத்துணை அழகிய ஆழ்கடற்சோலையில் மதிப்புநாடிச் செல்லும் முத்துச் சிப்பிகளே கவர்ச்சியற்ற உருவமுடையன. இவை வெளிறிய மண் நிறமும்

சாம்பல் நிறமும் கூடியவை. இவற்றின் உட்புற ஓட்டுப் பகுதி குறைந்த விலை மதிப்புள்ளது. இதனைப் பொத்தான் செய்வதற்கு உபயோகிக்கின்றனர். எலலாச் சிப்பிகளிலும் முத்து இருப்பதில்லை. இதனாலே தான் முத்தின் விலை உயர்ந்திருக்கின்றது. முத்துக் குளிப்பவன் உழைப்பிற்குத் தக்கவாறு முத்துக்கள் கிடைக்காவிட்டாலும் சிப்பிகள் அழகிய வேலைகளுக்குப் பயன்படுவதால் ஓரளவு பயன் தருகின்றன.

7. கடலுக்குள்ளே செல்லச்செல்லக் குளிர்ச்சியும் இருளும், நீரின் அமுக்கமும் அதிகமாகின்றன. கடலுக்கு உள்ளிருக்கும் நீரின் அமுக்கத்தையும் குளிரையும் மக்களால் தாங்கமுடியாது. இவற்றை எதிர்த்து நிற்கும் ஆற்றல் வாய்ந்த கருவிகளின் உதவியைக் கொண்டு தான் மிக ஆழமுள்ள பகுதிகளுக்குச் செல்ல முடியும்.

8. அமெரிக்க விஞ்ஞானியராகிய **பேராசிரியர் வில்லியம் பீபீ** என்பவர் **'பேதிஸ்பியர்'** என்னும் பந்து வடிவமான ஓர் எஃகுக் கருவியைச் செய்தார். உருண்டை வடிவமுள்ள பேதிஸ்பியரின் பரப்பு, நீரின் அமுக்கத்தைத் தாங்க வல்லது. இக்கருவியுள் அமர்ந்து அப்பேராசிரியர் கடலில் சுமார் மூவாயிரம் அடி ஆழத்திற்குக் கீழ்ச் சென்றார். அவ்வாழத்தில் அவர் இக் கருவியிலுள்ள **'குவார்ட்ஸ் பலகணி'** வழியாகத் தமது ஒளி விளக்கின் உதவியால் பல வினோத உருக்கொண்ட உயிரினங்களைக் கண்டார். அவற்றின் உடலின் ஓரங்களில் உள்ள புள்ளி போன்ற பகுதிகளிலிருந்து ஒளி வீசுகிறது. இவ்வொளியின்

உதவியால் அவை நீந்திச் செல்கின்றன. இங்ஙனம் மிகுந்த ஆழங்களில் வாழும் உயிர் வகைகளில் சில நீலம், சிவப்பு, ஆரஞ்சு முதலிய அழகிய வண்ணங்களைக் கொண்டவையாய் இருக்கின்றன. சில அருவருப்பான பெரிய உருவங்களைப் பெற்றுப் பயங்கரமாகத் தோன்றுகின்றன.

9. சில அழகிய இருல் மீன்கள், தங்களைத் தொடர்ந்து வரும் எதிரிகளினின்றும் தப்ப, ஒரு வகை ஒளிமிகுந்த நீர்ப்பொருளை வீசி அவற்றைத் திகைக்க வைத்துத் தப்பி விடுகின்றன. இவ்வாழங்களில் ஒரு வகைத் தூண்டில் மீன் வாழ்கிறது. இது தன் உடலின் ஒரு பகுதியையே தூண்டிலிரையாகக் காட்டி ஏனைய மீன்களைக் கவர்கிறது. இதன் உடற்பகுதிகளில் ஒன்றுகிய தூண்டில் ஒளி பெற்றிருப்பதால் அதனைப் புழு என நம்பி மீன்கள் பற்ற வருகின்றன. அவ்வாறு வரும் மீன்களை இம்மீன் பற்றிப் புசித்துப் பசியாற்றுகிறது. இதே இனத்தைச் சேர்ந்த ஒரு வகை மீன், குறைந்த ஆழமுள்ள இடங்களில் வசிக்கின்றது. ஆனல், ஆயிரத்து ஐந்நூறு அடியிலிருந்து ஆருயிரம் அடிவரை உள்ள ஆழங்களில் வாழ்பவைகளே ஒளி பொருந்திய தூண்டில் உறுப்பைப் பெற்றிருக்கின்றன. உடலினும் பெரிய வாயைப் பெற்ற விழுங்கி விலாங்குகள் இங்கு வாழ்கின்றன. இவை தம்மினும் பெரிய மீன்களை விழுங்கி விடுகின்றன. அந்த இரையை இவற்றின் வயிறு விரிந்து ஏற்றுக் கொள்ளுகிறது.

10. சாதாரணமாக ஆழ்கடலில் வசிக்கும் உயிரினங்கள் மெல்லிய உடலையும் ஒளிவிடும் உறுப்புக்

களையும் பெற்றிருக்கின்றன. இவ்வமைப்பு அவற்றின் சூழ்நிலைக்குத் தேவையானதே.

## அருஞ்சொற்பொருள் :

பரப்பு—விஸ்தீரணம், வியப்பு—ஆச்சரியம், அதியம்—விநோதம், முத்தக் குளித்தல்—நீரில் மூழ்கி முத்தைச் சேகரித்தல், விண்ணவர்-தேவர், பன்னிறம்-பலவண்ணங்கள், அருவருப்பான—விகாரமான, வாய்ந்தது—பெற்றது, இத் துணை—இவ்வளவு, வல்லமை—ஆற்றல்.

## பயிற்சி :

1. விடை எழுது:-

(அ) 'முத்துக் குளிப்பது' என்பது யாது ?

(ஆ) கடற்பூச்சிகள் நீரில் எவ்வாறு காட்சியளிக்கின்றன ?

(இ) 'கடற்குதிரை' என்பது யாது ?

(ஈ) முத்துச் சிப்பிகள் எவ்வாறு பயன்படுகின்றன ?

(உ) 'பேதிஸ்பியர்' என்பது யாது ? அதன் பயன் என்ன ?

(ஊ) தூண்டில் மீன் எவ்வாறு தன் உணவைப் பெறுகிறது ?

2. வாக்கியங்களில் அமைக்க:—

பரப்பு, வியப்பு, முத்துக்குளித்தல், பன்னிறம், இத்துணை ஆற்றல்.

---

# 25. நாளந்தாப் பல்கலைக் கழகம்

1. பண்டைக் காலத்தில் நமது பாரத நாடு அருங்கலைகளுக்குப் பிறப்பிடமாய் விளங்கியது. நம் முந்தையோர் கலைகளை அறுபத்து நான்காகப் பிரித்திருந்தனர். அக்கலைகளைப் பயிற்றுவிக்கக் கழகங்கள் தோற்றுவிக்கப்பட்டன. அவை பல்கலைக் கழகங்கள் என்று வழங்கப்பட்டன. ஏறத்தாழ ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன் நமது நாட்டில் ஏழு சிறந்த பல்கலைக் கழகங்கள் இருந்தன. அவற்றுள் நாளந்தாப் பல்கலைக் கழகமும் ஒன்ருகும்.

2. வடஇந்தியாவில் பீஹார் இராச்சியத்தின் தலைநகரான பாட்ணுவுக்குத் தென்கிழக்கில் ஐம்பத்தைந்து கல் தொலைவில் நாளந்தாப் பல்கலைக் கழகம் அமைந்திருக்கிறது. சீனு, ஜப்பான் முதலிய கீழ் நாடுகளிலிருந்தும், கிரீஸ், உரோமாபுரி முதலிய மேல் நாடுகளிலிருந்தும், மாணவர் பலர் நாளந்தாவுக்கு வந்து, அங்குப் பல்லாண்டுகள் தங்கிக் கல்வி பயின்றனர். நமது நாட்டுக்கு வந்த சீன யாத்திரிகர்களுள் ஒருவரான ஹியூன் சியாங் என்பவர் அப் பல்கலைக் கழகத்

தில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கிப் பல அரிய கலைகளைப் பயின்றார். அப்போது அவருக்கு நமது நாட்டுக்குரிய **மோட்ச தேவர்** என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

3. தொடக்கத்தில் நாளந்தா ஒரு சிற்றூராய் இருந்தது. **புத்தர் பெருமான்** அவ்வூருக்கு அடிக்கடி சென்று தங்குவார். அவர் மாணவர்களுள் ஒருவரான **சாரி புத்தர்** அங்கு ஒரு கோயில் கட்டினார். அவருக்குப்பின் அக்கோயில் பௌத்தர்களால் சிறப்பிக்கப் பெற்றது. அக்கோயிலில் **அசோகர்** வழிபாடு நடத்தி ஒரு பௌத்த விக்கிரகத்தை நிறுவினார். பின்னர் நாளந்தாவில் வெவ்வேறு வேந்தர்களின் பொருளுதவியால் பல கட்டடங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இறுதியில் அது 4000 மாணவர் தங்கிப் பயிலத்தக்க அத்துணை பெரிய பல்கலைக் கழகமாக உறுப்பெற்றது.

4. கி. பி. இரண்டாவது நூற்றாண்டில் நாளந்தாவைப் பெரியதொரு பல்கலைக் கழகமாக்கிய பெருமையும், அதன் முதல் தலைவராய் அமர்ந்து தொண்டாற்றிய பெருமையும் கோசல நாட்டைச் சேர்ந்த **நாகார்ச்சுனர்** என்பவருக்கு உரியவையாகும். **முதலாம் குமார குப்தன்** முதல் **ஹர்ஷன்** ஈறாக மன்னர் பலர் நாளந்தாப் பல்கலைக் கழகத்துக்கு ஆதரவு நல்கி அதைச் சிறப்பித்து வந்தனர்.

5. நாளந்தாவில் சிறப்பு மிக்க சிலைகள் பல நிறுவப் பெற்றிருந்தன. அவற்றுள் ஒன்று

எண்பது அடி உயரமுள்ள புத்தரின் சிலையாகும். நாளந்தாவில் மிகப் பெரிய நூல்நிலையம் ஒன்று இருந்தது. அது மூன்று கட்டடங்களில் இடம் பெற்றிருந்தது. இரத்தின சாகரம், இரத்தினேததி, இரத்தின ரஞ்சகம் என அவை வழங்கப் பெற்றன. அவற்றுள் இரத்தினேததி, ஒன்பது மாடிகளை யுடையதாயிருந்தது.

6. நாளந்தாப் பல்கலைக் கழகத்தில் எட்டுக் கலாசாலைகள் இருந்தன. அவற்றிற்குத் தனித்தனி மண்டபங்கள் இருந்தன. அங்குத் தொண்டாற்றிய பேரறிஞர்களுள் நாகர்ச்சுனர், ஆரிய தேவர், வாசபந்து, தருமபாலர், தினகரர், ஜயதேவர், சிலாபத்திரர் என்பவர் குறிப்பிடத்தக்கவராவர். இவர் களுள் தருமபாலர், தினகரர், என்பவர் இருவரும் தமிழ் நாட்டிலுள்ள காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவராவர்.

7. இந்தப் பல்கலைக் கழகத்தில் படித்தவர்கள் பேரறிஞர்களாய் விளங்கினர்கள். அன்றியும், இக் கழகத்தினின்று அறிஞர் சிலர் சீனம், ஜப்பான், இலங்கை, சாவகம், சுமத்திரா முதலிய இடங்கட்குச் சென்று புத்த சமயத்தைப் பரப்பினர். நாளந்தாவின் தலைமைப் பேராசிரியராய் விளங்கிய பதுமசாம்பவர் திபெத்திய மன்னரின் அழைப்பை ஏற்று, அங்குப்பதின் மூன்ருண்டுகள் தங்கி இருந்து புத்த சமயத்தைப் பரப்பினர்.

8. இவ்வாறு பேரும் புகழுமுற்று நாளந்தா ஓராயிரம் ஆண்டுக் காலம் நிலை பெற்றிருந்தது. இறுதியில் அது முஸ்லிம்கள் படையெடுப்புக்களாலும், சங்கரர் முதலியவர் புத்த மதத்தை எதிர்த்து நின்றதாலும், வேறு பல எதிர்ப்புக்களாலும் கி.பி 1206-ல் எரித்துச் சாம்பலாக்கப்பட்டு விட்டது.

9. நாளந்தா அழிந்த பிறகு 19-ஆம் நூற்றுண்டு வரையில் அதைப்பற்றிய விவரம் எதுவும் அறியப்படாதிருந்தது. 1861-ல் கன்னிங்காம் என்ற வெள்ளையர் நாளந்தாவின் அழிவுகளைக் கண்டறிந்தார். பிறகு நடைபெற்ற ஆராய்ச்சியால் நாளந்தாவின் கட்டடங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. அவை இன்றும் அங்குக் காட்சியளிக்கின்றன.

## அருஞ்சொற்பொருள் :

பல்கலைக் கழகம்-பல கலைகள் கற்பிக்கப்படும் கலாசாலை, பயிற்றுவிக்க - கற்பிக்க, பல்லாண்டு - பல வருடங்கள், பயின்றூர் - கற்றூர், சிறப்பிக்கப் பெற்றது - பெருமைப் படுத்தப் பட்டது. இரண்டாவது நூற்றுண்டு - 101 முதல் 200 வரை. படையெடுப்பு - சேனைகளால் தாக்கப்படுதல், அழிவுகள் - சின்னங்கள்.

## பயிற்சி :

1. விடை எழுதுக :—

(அ) பல்கலைக் கழகம் என்பது யாது?

(ஆ) நாளந்தாப் பல்கலைக் கழகம் எங்கிருந்தது? அது எப்போது நிறுவப்பட்டது?

(இ) நாளந்தாவில் பேராசிரியர்களாயும், தலைவர்களாயும் இருந்தவர் சிலரின் பெயர்களை எழுது.

(ஈ) காஞ்சிபுரத்திலிருந்து நாளந்தாவுக்கு சென்றவர் யாவர் ?

(உ) நாளந்தா எவ்வாறு அழிந்தது ?

**II. வாக்கியங்களில் பயன்படுத்துக:—**

அருங்கலை, பிறப்பிடம், தோற்றுவிக்க, பல்லாண்டு, பயின்றனர், சிறுவர், வழிபாடு.

**III. எதிர்ச் சொற்கள் எழுது:**

சிறந்த, தொலைவு, மாணவர், சிற்றூர், இறுதியில், பெருமை, எதிர்ப்பு.






TB
031(6)
N63

ஹிலால் பிரஸ், திருநெல்வேலி-6.—5-'63

2065

# PONMOZHI VACHAGAM

VI STANDARD

*By*

VIDWAN T. SHUNMUGAVEL,
Chief Tamil Pandit,
Board High School, KALAKKAD.
&
VIDWAN A. GNANAMANI,
Chief Tamil Pandit,
Scott Christian High School, NAGERCOIL.

CHITRA PUBLISHING HOUSE
SRIVAIKUNTAM.

*Copy Right]* *1963* *[Price Rs. 1-75.*

Hilal Press, Tirunelveli-6.